# சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல்

முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு
அளிக்கப் பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**நா.தனலட்சுமி,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
முழுநேர முனைவர்பட்ட ஆய்வாளர்

மேற்பார்வையாளர்
முனைவர் **வ.ச. அபிராமவல்லி,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் – தமிழ்த்துறை,
எத்திராஜ் மகளிர் கல்லூரி,
சென்னை – 600 008.



**தமிழ்த்துறை**
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 008.

**ஜூன் - 2015**

முனைவர் **வ.ச. அபிராமவல்லி,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 008.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**“சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல்”** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி) பட்டப் பேற்றிற்காகத் திருமதி **நா.தனலட்சுமி,** 2012–2015ஆம் கல்வியாண்டில் நிகழ்த்திய ஆய்வேடாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு ஆய்வு பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர் தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை
நாள் : 29-06-2015

வ.ச. அபிராமவல்லி
**(வ.ச. அபிராமவல்லி)**
மேற்பார்வையாளர்

பி.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறை
எதிராஜ் மகளிர் கல்லூரி, சென்னை-8.

எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃபில்.,பி...,
இணைப்பேராசிரியை, தமிழ்த்துறை,
எதிராஜ் மகளிர் கல்லூரி, சென்னை-8.



**நா. தனலட்சுமி,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
முழு நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 008.

# ஆய்வாளர் உறுதிமொழி

"**சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல்**" என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்படிப்பிற்காக ஆய்வு பேராசிரியர் முனைவர் **வ.ச. அபிராமவல்லி** அவர்களின் மேற்பார்வையில் எத்திராஜ் மகளிர் கல்லூரி, தமிழ்த்துறையில் 2012 முதல் 2015 வரை நிகழ்த்தப்பட்டது. இந்த ஆய்வு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் இந்த ஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : சென்னை
நாள் : 29.06.2015

நா. தனலட்சுமி
(நா.தனலட்சுமி)
ஆய்வாளர்

# நன்றியுரை

**"சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல்"** என்னும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு இசைவு அளித்த **சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு** முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கு இக்கல்லூரியில் இடமளித்த மேனாள் முதல்வர் முனைவர் **ஜோதி குமரவேல்** அவர்களுக்கும், இந்நாள் முதல்வர் முனைவர் **அ.நிர்மலா** அவர்களுக்கும் மற்றும் கல்லூரி **நிர்வாகக் குழுவினர்களுக்கும்** என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எத்திராஜ் மகளிர் கல்லூரி தமிழ்த்துறையில் எனது ஆய்வினை நிகழ்த்த வாய்ப்பளித்த தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் **எம்.நித்யகல்யாணி** அவர்களுக்கும், இந்நாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **ந.அங்கயற்கண்ணி** அவர்களுக்கும் என் உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுத் தலைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்ததிலிருந்து ஆய்வு முடியும் வரை சென்ற போதெல்லாம் இன்முகத்தோடு வரவேற்றுப் பல அறிய கருத்துக்களை வழங்கி வழி நடத்திச் சென்ற என் நெறியாளர் முனைவர் **வ.ச.அபிராவல்லி** அவர்களுக்கும் நான் என்றும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆய்வு செம்மையாக நிகழ ஆய்வு சார்ந்த நூல்களையும், கருத்துகளையும் வழங்கியதோடு ஆய்வேட்டினைச் செம்மைப்படுத்திய முனைவர் ஜே.ஆர்.இலட்சுமி அவர்களுக்கும் என்றும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எப்போதும் மாணவர்களிடம் அன்போடும் பாசத்தோடும் நடந்து கொள்வதோடு புதுப் புதுச் சிந்தனைகளை வழங்கி நடத்திவரும் எம் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் தனிப்பட்ட நன்றியை உரித்தாக்குகிறேன்.

என்னை இம்மண்ணுலகிற்கு அறிமுகப்படுத்திய என் தாய் **நா.கோமலா**, தந்தை **கோ.நாதமுனி** அவர்களுக்கும், என் மாமனார் **ராஜ்குமார்** அவர்களுக்கும், எனது சிந்தனை, செயல், எண்ணம் ஆகிய எல்லாவற்றிற்கும் உறுதுணையாக இருக்கும் என் கணவர் **ரா.சத்திய நாராயணன்** அவர்களுக்கும் என்றும் என் நன்றி. என் ஆய்விற்கு ஊக்கம் அளித்துப் புத்துணர்ச்சி ஊட்டி என் ஆய்வேடு சிறக்க ஒத்துழைப்பு நல்கிய என் கண்மணிகள் **ச.நந்திதா**, **ச.சச்சின் கணேஷ்** அவர்களை என்றும் மனதில் நிறுத்தி மகிழ்கின்றேன்.

என் ஆய்விற்கு உறுதுணையாக இருந்த முனைவர்பட்ட ஆய்வு மாணவிகள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுப் பணிக்குத் தேவையான புத்தகங்களை உரிய நேரத்தில் வழங்கிய எத்திராஜ் மகளிர் கல்லூரி நூலகத்தாருக்கும், கன்னிமாரா பொது நூலகத்தாருக்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாருக்கும், பொது வட்டார நூலகம் பெரியார்நகர் நூலகத்தாருக்கும், ரோஜா முத்தையா நூலகத்தாருக்கும், உ.வே.சா. நூல் நிலையத்தாருக்கும், சென்னைப் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் எனது உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்காலத்தில் ஆய்விற்குத் தேவையான நூல்களையும், கருத்துகளையும் வழங்கிய உடன் பயிலும் தோழிகளுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வுத் தொடர்பான அலுவலக உதவிகளை நல்கிய கல்லூரி அலுவலர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டை உரிய காலத்தில் சிறந்த முறையில் கணினியில் அச்சிட்டுத் தந்த **டுடே கிராஃபிக்ஸ்** உரிமையாளர் **திரு.ரெ.பாபு** அவர்களுக்கும், மற்றும் அங்கு பணிபுரியும் **சக பணியாளர்களுக்கும்** என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வு நன்முறையில் நிகழ உதவிய அனைத்து உள்ளங்களுக்கும் மனமார்ந்த நன்றி.

**நா.தனலட்சுமி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | – | அகத்திணையியல் |
| அகம். | – | அகநானூறு |
| இளம். | – | இளம்பூரணம் |
| இளம்.உரை. | – | இளம்பூரணர் உரை |
| இறை. | – | இறையனார் அகப்பொருள் |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| உ.வ. | – | உவமவியல் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| ஐந்.ஐம். | – | ஐந்திணை ஐம்பது |
| ஐந்.எழு. | – | ஐந்திணை எழுபது |
| கலித். | – | கலித்தொகை |
| கள.கா. | – | களவியற் காரிகை |
| களவு. | – | களவியல் |
| கற்பு. | – | கற்பியல் |
| குறுந். | – | குறுந்தொகை |
| செய். | – | செய்யுளியல் |
| சூ. | – | சூத்திரம் |
| த.நெ.வி. | – | தமிழ்நெறி விளக்கம் |
| திருக். | – | திருக்குறள் |
| தி.மா.நூ. | – | திணைமாலை நூற்றைம்பது |
| தொல். | – | தொல்காப்பியம் |

| | | |
|---|---|---|
| தொ.ஆ. | – | தொகுப்பாசிரியர் |
| நச். | – | நச்சினார்க்கினியர் |
| நம்.திரு. | – | நம்மாழ்வார் திருவாய்மொழி |
| நம்பி. | – | நம்பி அகப்பொருள் |
| நற். | – | நற்றிணை |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பதி. | – | பதிப்பாசிரியர் |
| பொ.இ. | – | பொருளியியல் |
| முத்து. | – | முத்துவீரியம் |
| மேலது. | – | மேற்காட்டிய நூலிலிருந்து |
| p. | - | page |

# பொருளடக்கம்

# முன்னுரை

இலக்கை உடையது இலக்கியம் ஆகும் (இலக்கு+இயம்=இலக்கியம்). இலக்கியத்தால் சொல்லப்படும் கருத்துகளும் அக்கருத்துகளை வெளிப் படுத்தும் புலவர்களின் உத்திகளும் இலக்கியம் எனக் கொள்ளப் படுகின்றன.

இலக்கியம் செம்மையாக அமைந்தால்தான் இலக்கணம் சிறப்பாக அமையும் என்பது ஆன்றோர் வாக்காகும். சங்க கால மக்களின் வாழ்வைச் சித்திரிக்கும் இலக்காகக் கொண்டு எழுதப்பட்டவை சங்க இலக்கியங்களே ஆகும். பண்டைத் தமிழரின் வரலாற்றை அறிய நமக்கு இன்று கிடைத்துள்ள சிறந்த கருவி சங்க இலக்கியம் என்று போற்றப்பெறும் பத்துப்பாட்டும் எட்டுத் தொகையுமேயாகும். இயற்கையோடு இயைந்த வாழ்வினை எடுத்துக் காட்டுவதோடு அளவான கற்பனையும், கவிதையோட்டமும், ஆழ்ந்த கருத்தும் எளிய வடிவம் கொண்ட சொற்களும் என்றும் வாழும் இலக்கியமாகவே சங்க இலக்கியம் திகழ்கிறது.

சங்க இலக்கியங்கள் அகம், புறம் எனப் பிரிக்கப்பட்ட திணை இலக்கியங்களாகும். அக இலக்கியங்கள் களவு, கற்பு என இரண்டாகப் பகுக்கப்பட்டுள்ளன. இருவேறு வாழ்க்கை நெறிகளான இல்லற வாழ்வையும், புற உலக வாழ்வையும் தெளிவாக எடுத்துக்காட்டும் கால கண்ணாடியாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன.

சங்கத் தமிழரின் வாழ்வுப் பெட்டமாகத் தனி மனித வாழ்வியல் நெறிமுறைகளையும், சமுதாய வாழ்வியல் செயற்பாடுகளையும் படம் பிடித்துக் காட்டும் கருவூலமாகச் சங்க இலக்கியங்கள் அமைந்திருக்கின்றன.

களவிற்கும், கற்பிற்கும் இடை நிலையாக அமைந்து களவைக் கற்பாக்கும் களமாக வரைவுகடாதல் துறைப் புலவர்களால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

தலைவன் களவு நீட்டிக்கும் காலத்து அவனிடம் வரைவு எண்ணம் தோன்றுமாறு, வலிந்தும், மெலிந்தும் தோழியால் கூறப்படும் கூற்றுகள் வரைவுகடாதலேயாகும்.

சங்க இலக்கியங்களில் காட்டப்படும் ஐந்திணை செய்யுட்களுள் குறிஞ்சி, நெய்தல், முல்லை ஆகிய இம்மூன்று திணைகளிலும் வரைவுகடாதல் துறைப் பாடல்கள் காணப்படுகின்றன.

வரைவுகடாதல் துறைப் பற்றிய விளக்கங்களையும், இத்துறை சார்ந்த பாடல்களில் காணப்படும் பல்வேறு கூறுகளையும் ஆராய்வது அக இலக்கியங்களைப் பற்றிய ஆய்வில் இன்றியமையாததாகும். சங்க இலக்கியம் சொல் நிலையிலும், பொருள் நிலையிலும், யாப்பு அமைதியிலும் தனி மரபுகளைப் பெற்று விளங்குகின்றது. அதே போல உவம அணி வகையிலும் தனி மரபுகளைத் தாங்கியுள்ளன.

## ஆய்வுப் பொருள்

**“சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல்”** என்பது ஆய்வுப் பொருளாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கிய வரைவுகடாதலில் காணப்படும் தலைவன், தலைவியின் வாழ்வியல் நோக்கில் ஆராயப்படுகின்றன. இவர்களின் வாழ்வுநிலை சமூகத்தில் எவ்வாறு இருந்தது என்பது விளக்க முறையில் பார்க்கப்படுகிறது. அகவாழ்வில் இல்லறம், பண்புகள், தொழில்முறை, இடர்ப்பாடுகள் போன்ற பதிவுகள் ஆய்வின் எல்லையாக வரையறை

செய்யப்பட்டு அவற்றைச் சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல் பாடல்கள் வழி இனங்காணும் முயற்சியில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

## ஆய்வு எல்லை

தமிழ் இலக்கியங்களில் முதன்மையாகக் கருதப் பெறுபவை சங்க இலக்கிய நூல்களான பாட்டும் தொகையும் என்ற பதினெட்டு நூல்களேயாகும். எட்டுத்தொகையில் ஐந்து அகநூல்களே இவ்வாய்வுக்கான எல்லையாக வரையறை செய்யப்பட்டுள்ளன. எட்டுத் தொகையில் மற்ற இரண்டு நூல்கள் புறம் பற்றிவையாகும். ஒரு நூல் அகமும் புறமும் கலந்த நூலாக பரிபாடல் உள்ளன. இவற்றில் வரைவு கடாதல் செய்திகள் இல்லை. மாறாக புனலாடல் பற்றிய குறிப்பு காணப்படுகின்றன. பத்துப்பாட்டில் ஐந்து நூல்கள் ஆற்றுப்படை நூல்களாகும். மதுரைக்காஞ்சி புறம் சார்ந்தவை. நெடுநல்வாடை அகம், புறம் சார்ந்த நூலாகக் கருதப்படுகிறது. முல்லைப்பாட்டு,பட்டினப்பாலையில் வரைவுகடாதல் குறிப்புகள் இல்லை. குறிஞ்சிப்பாட்டு அறத்தொடு நிற்றல் துறையில் வரும் துறையாகும். இவை வரைவுகடாதலுக்கு பின் நிகழும். யார் யார் அறத்தொடு நிற்றலில் இருக்க வேண்டும் என்பதை குறிப்பிடுகிறது.

## ஆய்வு முன்னோடிகள்

- இராம.சண்முகம் "**வரைவுகடாதலும் அறத்தொடு நிற்றலும்**" **1993.**
- த.செல்வி, "**வரைவுகடாதல் ஓர் ஆய்வு**" இளநிலை ஆய்வேடு **1999.**
- க.முத்துசாமி "**சங்கப் பாடல்களில் வரைவுகடாதல்**" **2003** என்ற முனைவர் பட்ட ஆய்வேட்டில் தொனி, ரசம், ஔசித்தியம் போன்ற தலைப்புகளில் மட்டும் கண்டறிந்துள்ளார்.

மேற்கூறப்பட்ட நூல் மற்றும் ஆய்வேட்டின் துணையுடன் வரைவு கடாதல் துறைப்பற்றி மட்டுமே தனித்த விரிவான ஆய்வினை மேற்கொள்ளும் விருப்பத்தினால் இவ்வாய்வு செய்யப்பட்டுள்ளது.

### ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு முழுவதும் பகுப்பாய்வு முறையும், உளவியல் முறையும், சமுதாய முறையும், விளக்கமுறைத் திறனாய்வு முறையும் கையாளப்பட்டுள்ளது.

## ஆய்வு மூலங்கள்

ஆய்வுக்குத் தேவையான மூலங்கள் இரண்டு வகைகளில் திரட்டப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மை நூல்கள்
2. துணைமை நூல்கள்

என்பனவாகும்.

### முதன்மை நூல்கள்

தொல்காப்பியம், இறையனார் களவியல், நம்பியகப் பொருள் போன்ற நூல்களும், சங்க இலக்கியத்தில் காணப்படும் அக நூல்களான ஐந்து நூல்கள் அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை, குறுந்தொகை, நற்றிணை போன்றவை முதன்மை நூல்களாக எடுத்துக் கொள்ளப்பட்டன.

### துணைமை நூல்கள்

தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு அமைந்துள்ள உரைகளில் இறையனார் களவியல் உரையும், நம்பியகப் பொருள் உரையும் பிற இலக்கண நூல்கள், சங்க அகஇலக்கியங்களுக்கு அமைந்துள்ள உரைகளும், சங்க அகப்பொருள் தொடர்பான ஆய்வுகள், நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் போன்ற நூல்கள் துணைமை நூல்களாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. **வரைவுகடாதல் சொல் விளக்கம்**
2. **நெறிமுறையும் கதைப்போக்கும்**
3. **புலவர்களின் ஆளுமைத்திறன்**
4. **புலவர்களின் மொழியும் கருத்தும்**
5. **வரைவு கடாதல் இடையீடுகள் தீர்வுகள்**

எனும் முறைகளில் இவ்வாய்வு பகுக்கப்பட்டுள்ளது.

### முன்னுரை

சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நெறிமுறைகளை மேற்கொண்டவர்கள். அவர் தம் படைப்புகளில் இயற்கை இழைந்தோடி நிற்கிறது. அகத்திணைப் பெயர்கள் அனைத்தும் இயற்கையின் படைப்பான பெயர்களால் அமைந்தவையாகும். அவ்வியற்கைத் தன்மையின் செறிவுத் தன்மைக்கேற்பத் திணை ஒழுக்கங்களையும் இயற்கையின் போக்கிலேயே அமைத்துக் கொண்டனர். சங்கப் புலவர்கள் தம் மனவுணர்வுக்கேற்ப வரைவு கடாதலில் நிகழும் இன்ப, துன்ப உணர்ச்சிகளை ஆராயும் நோக்கில் சங்க இலக்கியம் அமைந்துள்ளது. முன்னுரையில் ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வேட்டின் அமைப்பு ஆகிய செய்திகள் தரப்பட்டுள்ளன.

**“வரைவுகடாதல் சொல் விளக்கம்”** என்னும் இயலில் சங்க இலக்கிய கொள்கைகள் வரைவுகடாதல் துறைப் பற்றிய சொல் விளக்கங்கள், சூழல்கள், துறைகளுக்குரிய பாத்திரங்கள், துறைகளின் நோக்கம், துறைகளைச் செயற்படுத்திய முறை, துறைகள் பற்றிய இலக்கண

நூல்களின் கருத்துக்கள், அவற்றின் உரை விளக்கங்கள் ஆகியன எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**"நெறிமுறையும் கதைப்போக்கும்"** என்ற இயலில் சங்க சமுதாயத்தின் அடிப்படையாக அறம் அமைந்திருந்ததையும், அவற்றிற்கான நெறிமுறைகளையும் வகுத்துள்ளனர். ஒரு நாவல் தோன்றுவதற்கு கதைக் களமாக விளங்கும் கரு சங்க இலக்கியத்திலிருந்து எடுத்தாளப் பெறுகிறது. சமுதாயத்தினுடைய நோக்கம் பெற்றோர் உடன்பட்ட மணவினையே என்றும் அம்முடிவிற்கே இத்துறை அழைத்துச் செல்கின்றன என்பதும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

**"புலவர்களின் ஆளுமைத் திறன்"** என்ற இயலில் முதன்மை பாத்திரங்களான தோழி, தலைவி, தலைவன் ஆகியோரைப் பற்றிய செய்திகள் இலக்கியங்களில் இடம் பெறும் கூற்று முறைகளின் அடிப்படையில் ஆராயப்பட்டு, அவர்களின் மன உணர்வுகளும், அவற்றால் அமைந்த சமூகப் பின்புலங்களும் ஆய்வு முடிவுகளாகத் தரப்பட்டுள்ளன.

**"புலவர்களின் மொழியும் கருத்தும்"** என்ற இயலில் வரைவுகடாதல் பாடல்களில் காணப்படும் குறிப்பு மொழி, உவமை, உள்ளுறை, இறைச்சி, கருப்பொருட்கள், இயற்கை வருணனை, புராணக் கருத்துகள் இவற்றின் அடிப்படையில் பகுக்கப்பட்டு, இவற்றால் இத்துறை எவ்வாறு சித்திரிக்கப்பட்டுள்ளன என்று ஆராயப்பட்டுள்ளன.

**"வரைவுகடாதல் இடையீடுகள் தீர்வுகள்"** என்ற இயலில் வரைவுகடாதல் துறைப் பாடல்களில் இடையீடுகள், அலர், தலைவியின் ஆற்றாமை, தலைவன் வரும் வழி, இற்செறிப்பு, நொதுமலர், வெறியாட்டு, தலைவனின் பண்பு, வரைபொருட் பிரிதல் போன்ற இடையீடுகள் அறியப்பட்ட செய்திகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. இவ்வியலின் ஆய்வு முடிவாக

தலைவன், தலைவியை வரைந்து மணம் செய்து கொள்வதே சமுதாயத்தின் அறமாக போற்றப்படுகிறதென்பது தொகுத்துரைக்கப்பட்டுள்ளது.

'**முடிவுரை**'யில் சங்க சமுதாயம் அறத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்ததென்பதும், அதன் காரணமாகவே வரைவுகடாதல் துறை புலவர்களின் பாடுப்பொருளாகக் கொண்டதென்பதும் புலவர்கள் இத்துறையைச் சித்திரிக்கப் பயன்படுத்திய உத்திகளாகும். நாடறி நன் மணத்திற்கே சங்க இலக்கியத்தில் ஏற்புடைமை இருந்ததென்பதும் ஆய்வு முடிவுகளாகத் தொகுத்துத்தரப்பட்டுள்ளன.

### மேலாய்வு களங்கள்

சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல் குறித்த இவ்வாய்வின் மேலாய்வு களமாக இவ்வாய்வில் குறிக்கப்பட்ட செய்திகளை மையமாகக் கொண்டு '**சங்க இலக்கியம் பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் வரைவுகடாதல் ஒப்பீடு**', '**தமிழ் நூல்களில் வரைவுகடாதல் பயின்று வந்துள்ள நிலை**', '**நாட்டுப்புறப் பாடல் சங்க இலக்கியம் வரைவுகடாதல் ஒப்பீடு**', '**சங்க கால இலக்கியச் சூழல் தற்போதைய நிலை ஒப்பீடு**' போன்ற பார்வையில் ஆராயலாம்.

### துணைநூற்பட்டியல்

இவ்வாய்வுக்காகப் பயன்படுத்தப் பெற்ற முதன்மை நூல்களும் துணைமை நூல்களும் அகரவரிசைப்படுத்தப்பட்டு துணைநூற் பட்டியலாகத் தரப்பட்டுள்ளன.

இயல் - ஒன்று

# வரைவுகடாதல் சொல் விளக்கம்

## முன்னுரை

இலக்கை உடையது இலக்கியம் எனப்படும். (இலக்கு+இயம் இலக்கியம்) இலக்கியத்தால் சொல்லப்படும் கருத்துகளும் அக்கருத்துகளை வெளிப்படுத்தும் புலவர்களின் உத்திகளும் இலக்கியம் எனக் கொள்ளலாம்.

*"எள்ளின் நின்று எண்ணெய் எடுப்பதுபோல்*
*இலக்கியத்தின்றும் எடுபடும் இலக்கணம்"*[1]

என்பது அகத்திய நூற்பா.

இலக்கியம் செம்மையாக அமைந்தால் தான் இலக்கணம் சிறப்பாக அமையும் என்பதற்கு நல்ல எடுத்துக்காட்டாகத் தொல்காப்பியம் திகழ்கிறது.

## தமிழ் இலக்கணம் கூறும் இலக்கியம்

"தமிழ் இலக்கண நூல்கள் இலக்கியத்தை ஒரு பிரிவாகவே கொண்டு விளக்குவதைத் தொல்காப்பியம் தொடங்கிப் பிற்கால இலக்கண நூல்கள் வரை காணலாம். எழுத்து, சொல், பொருள் என முப்பகுதிகளாக அமைந்த நிலையில் எழுத்தின் இலக்கணம் அடிப்படையாகவும், சொல்லின் இலக்கணம் அதனுடைய வளர்ச்சியாகவும், சொற்களால் யாக்கப்படும் இலக்கியங்களைப் பற்றிய இலக்கணங்கள் பொருளாகவும் கொள்ளப்பட்டன. இறையனார் களவியல் உரையின் முன்னுரையும் இலக்கியக் கொள்கையை இக்கண்ணோட்டத்துடனேயே நோக்குகிறது".[2]

"இங்ஙனம் இலக்கியக் கொள்கைளை இலக்கணத்துள் அடக்கியதால் அதன் வளர்ச்சி முழுவதும் குன்றிப் போய்விட்டது. பிற்கால

இலக்கண ஆசிரியர்களில் சிலர் எழுத்து, சொல்லோடு நின்று விட்டனர். மூன்றாவதான பொருளையும் எழுதியவர்கள் கூட, முன்னைய தொல்காப்பியக் கருத்துகளைத் திரும்பவும் சுருக்கமாகக் கூற முயன்றாரே தவிர புதுமை படைக்கவோ முன்னதை மேலும் விளக்கவோ முயன்றிலர். பொருள் இலக்கணத்திலிருந்து பலர் யாப்பைப் பிரித்து தனி இலக்கண நூலாக எழுதினர். சிலர் அகம், புறம் பற்றித் தனி இலக்கண நூல்களாப் பிரித்தனர்; மற்றும் சிலர் பாட்டியல் நூலாக ஒரு பிரிவைக் கலந்து ஆக்கினர்."[3] என இலக்கியக் கொள்கைகளைப் பற்றி டாக்டர் தமிழண்ணல் தமது நூலில் கூறுகின்றார்.

இலக்கியத்தை முழுமையாகக் கொண்டு அதன் உறுப்புகளாக முப்பத்து நான்கு உறுப்புகளைப் பற்றிக் கூறுகின்றார் தொல்காப்பியர். இலக்கியத்தின் வடிவம், பொருள், அணி, உத்தி போன்ற அனைத்தையும் உறுப்புகளாகவே காணும் போக்கு தொல்காப்பியம் காட்டும் புதுமை என்பர் சான்றோர்.

*"திணையே கைகோள் பொருள்வகை எனா அ"*

(தொல்.பொருள்.செய்.நூ.1)

என்று தொல்காப்பியரால் குறிப்பிடும் இச்செய்யுள் உறுப்புகளுள் பொருள் சார்ந்த திணைச் செய்திகள் அகத்திணை, புறத்திணை என இரு இயல்களாகவும், கைகோள் என்பது களவியல், கற்பியல் என இரு இயல்களாகவும், பொருள் என்பது பொருளியலாகவும் ஐந்து தனி இயல்களில் விரிவாக விளக்கம் பெறுகின்றன.

இலக்கியமே அடிப்படை முதல். இலக்கியத்தில் பயின்று வரும் வழக்கையே தொகுத்தும் வகுத்தும் இலக்கியக் கொள்கைகளாக எடுத்துக் காட்டப்படுகிறது.

*"பாடலுட் பயின்றவை நாடுங் காலை"*

(தொல்.பொருள்.அகத்.நூ.3)

*"புலன் நன்குணர்ந்த புலமை யோரே"*

(தொல்.பொருள்.அகத்.நூ.16)

*"பாடல் சான்ற புலனெறி வழக்கம் "*

(தொல்.பொருள்.அகத்.நூ.56)

என்ற தொல்காப்பிய வரிகள் மூலம் இலக்கியத்திலிருந்தே அதன் கொள்கைகள் பெறப்படுகின்றன என்பதை அறிய முடிகிறது.

## நாடக வழக்கும் உலகியல் வழக்கும்

*"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்*
*பாடல் சான்ற புலனெறி வழக்கம்"*

(தொல்.பொருள்.அகத்.நூ.56)

என்பது தொல்காப்பியம். "சங்கப்பாடலாயினும், காப்பிய இலக்கியமாயினும், சிற்றிலக்கியமாயினும் அனைத்தும் இவ்விருவகை வழக்கும் ஒருங்கிணைந்து அமைவதேயாகும். தமிழ் இலக்கியம் காட்டும் இவ்வடிப்படைக் கொள்கை நுட்பமானது"[4] என்று குறிப்பிடுவார் தமிழண்ணல்.

## இளம்பூரணர் விளக்கம்

"சுவையற்றன எல்லாவற்றையும் தள்ளிவிட்டு, சுவைபட வருவனவற்றையே கூறுவதால்தான் சங்கப் பாடல்கள் உலகியல் வழக்கையே தழுவியிருப்பினும் குறிக்கோள்தன்மை மிக்கனவாக மதிக்கப்படுகின்றன. இவ்வடிப்படைப் பண்பு கிரேக்க இலக்கியத்திலும் பொருந்தியிருந்தது"[5] என்பதை சி.எம். பௌரா கூற்றிலிருந்து அறியலாம்.

## இலக்கியம் என்பது பொருள்

மக்கள் வாழ்க்கையினின்று முகிழ்ப்பதே இலக்கியம். எனவே தான் மொழியின் வாயிலாக வாழ்க்கையை உணர்த்துவதே இலக்கியம் என்று குறிப்பிடலாம். கவிதை வாழ்க்கையின் ஆய்வாகும்.

## சங்க நூல்களில் இலக்கியம்

சங்கப் பாடல்களில் வரும் தலைவன் தலைவியர் நிகரற்றவர்கள். நற்பண்புகள் அனைத்தும் வாய்க்கப் பெற்றவர்கள். மிக உயரிய பண்பாடும் நாகரிகமும் உள்ளவர்கள். அழகு, குணம், அறிவு, ஆற்றல் அனைத்திலும் சிறந்தவர்கள். இவ்வாறு சுவை தரத்தக்கன அனைத்தையும் ஒரு சேரப் படைத்துக் காட்டுவதே சங்க மரபாகும். தன்னிகரில்லாத தலைவன், தலைவியரைப் படைக்கும் காப்பிய மரபை இங்கே காணலாம். “இலக்கியத்தில் பிரிவின்றி ஆழமாகப் பதிந்துள்ள மனிதப் பண்பு காரணமாகவே நாம் அதைப் போற்றுகிறோம். ஒரு சிறந்த நூல் வாழ்வினின்றும் நேரே முகிழ்கின்றது. அதைப் படிப்பதன் மூலம் நாம் வாழ்வின் நெருங்கிய புதிய அகன்ற தொடர்புகளைப் பெறுகின்றோம். இலக்கியத்தின் ஆற்றல் இதில்தான் அடங்கியிருக்கிறது. இவ்வாறு இலக்கியத்தின் அடிப்படையில் மொழியின் வாயிலாக வாழ்வை விளக்குவதே இலக்கியமாகும்.”[6] என்ற அட்சனின் கூற்று சங்கப் பாடல்களுக்கு மிகவும் பொருந்தியுள்ளது.

இப்படி உயர்ந்த இயல்புடைய தலைவன் தலைவியின் வாழ்க்கையைக் காட்டும் சங்கப் பாடல்கள், திணை இலக்கியங்களாக அமைந்துள்ளதைக் காணலாம். பாடல்களில் காணப்படும் கருத்தை அடிப்படையாகக் கொண்டு இது யார் கூற்று? யார் யாரிடம் கூறியது என உணருமாறு பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. இவ்வுத்தியை ‘முன்னம்’ என்றனர். (தொல் பொருள்

செய்.199). அதேபோல பாடலில் ஒரு நிகழ்ச்சியே இடம்பெறுகிறது. இவ்வுத்தி ''ஓரியல் முடித்தல்'' எனப்படும்.

உவமை, உள்ளுறை, இறைச்சி மெய்ப்பாடு, வண்ணம், நோக்கு, வனப்பு, யாப்பு இவையனைத்தும் சங்க இலக்கியக் கொள்கைகளாக அறிஞர்களால் சுட்டப்படுகின்றன.

இவ்வடிப்படைக் கொள்கையை காணுங்கால் சங்கப் பாக்களின் அகவுணர்வுகளே அவற்றின் துறைகளாக வருகின்றன. அகத்துறைகளில் இடம்பெறும் வரைவுகடாதல் அவற்றிற்குரிய கொள்கைகளோடு இங்கு ஆராயப்படுகின்றன.

## பொருள் பாகுபாடு

தமிழர் அகம், புறம் எனும் இரு திணைப் பொருள் பொதிந்த பாகுபாடு காணப்படுகிறது. தமிழ் மக்கள் இவ்வாறு பொருளை அகம், புறம் எனப் பகுத்து இவ்விரு பிரிவினுள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருளையும் அடக்கினர்.

இளம்பூரணர், ''அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனால் ஆயபயன் தானே அறிதலின், அகம் என்றார். புறப்பொருளாவது, மறஞ் செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆய பயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்றார்''[7] என்றும் விளக்குவார்.

''ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது

இதனை ஒழிந்தன, ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லார்க்குந் துய்த்துணரப்படுதலானும் இவை இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும் அவை புறமெனவேபடும்[8] என்று நச்சினார்க்கினியர் இவ்விரு பொருள்கள் குறித்தும் விளக்குவார்.

இவ்விருவகை அகஒழுக்கங்களில் அகவொழுக்கம் வாழ்க்கைக்கு அடிப்படையாய் அமைந்து இன்பத்தை உண்டாக்குகிறது. திணை நில அடிப்படையிலும் அகம், புறம் சமுதாய வாழ்வு அடிப்படையிலும் அமைகிறது. உலகில் உயிர்களின் தோற்றத்திற்கு அகவொழுக்கம் காரணமாகிறது. எல்லாப் பொருள்களையும் விட அவ்வகப் பொருளே சிறப்புடையதாய் அமைகின்றது அகப்பொருள் காதல் அடிப்படையில் தோன்றி ஆணும் பெண்ணும் தம்முள் ஒருவரை ஒருவர் விரும்புவதற்குக் காரணமாகின்றது.

## துறை அறிமுகம்

இவ்வாய்விற்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற வரைவுகடாதல், எனும் துறை தோழியற் கூட்டம் என்ற வகையுள் அடங்குவன. இவ்வாய்விற்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற துறைகளுள் 370 பாடல்கள் வரைவுகடாதல் துறையில் அமைந்துள்ளன. இவ்வரைவு கடாதல் பாடல்கள் தோழி, தலைவி, இருவருமாக வரைவு கடாவுகின்ற முறையில் பிரிக்கப்பட்டுள்ளன.

## வரைவுகடாதல்

வரைவுகடாதல் என்பதன் விளக்கம், இலக்கியத்தில் வரைவு கடாதலுக்கு உரியவர்கள், இவ்வரைவு கடாதலுக்குக் காரணம், வரைவு கடாவுவதால் ஏற்படும் பயன்கள் என்பனவெல்லாம் ஆராயப்படுவதாக உள்ளன.

## வரைவு கடாதல் சொல் விளக்கம்

களவுக் காலத்தில் தலைவியைச் சந்திக்க தலைவன் இருவகைக் குறியிலும் வருவான். அப்பொழுதெல்லாம் தலைவனிடம் தோழி பலமுறை உரையாடுவாள். இக்களவுக் காலத்தை மேலும் நீட்டித்தால் ஊரலர், இற்செறிப்பு, வெறியாட்டு, நொதுமலர் வரைவு போன்ற பல இன்னல்கள் ஏற்பட வாய்ப்புண்டு என்பதை அறிந்த தோழி 'களவு' என்ற ஒன்று நடந்தது எனத் தோன்றா வகையில் மணத்தை முடித்து வைக்கப் பல செயல்களை மேற்கொள்வாள். பல்வேறு வழிகளால் தலைவனை வற்புறுத்துவாள். இனியும் இவ்வாறொல்லாம் களவிலே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்து கொள்ள வேண்டும் என்று தலைவனை வேண்டி அவளது உரையாடல்கள் அமையும் தோழியின் இம்முயற்சியே வரைவுகடாதல் துறையாகும்.

வரைவு–திருமணம், கடாதல்–மணந்து கொள்ளுதலைப் பற்றி உசாவுதல் என வரைவுகடாதல் துறைக்கு விளக்கம் கூறுவர்.

## வரைவுகடாதல் துறைக்குரிய பாத்திரங்கள்

அக இலக்கியங்களில் தலைவனை நேர்முகமாக வரைவு கடாவுகின்ற பாத்திரமாகத் தோழி மட்டுமே காட்டப்படுகின்றாள். தோழியைப் போலத் தலைவனிடம் தலைவி நேரிடையாக வரைவினைப் பற்றிப் பேசாவிட்டாலும் சிறைப்புறமாகத் தலைவன் இருக்கும்போது, தோழியிடம் பேசுவாள். வரைவு கடாதலைப் பற்றிய தன் எண்ணங்களைக் குறிப்பிடுவாள் தலைவி. வரைவுகடாதலைத் தலைவி முகக்குறிப்பால் வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் புலப்படுத்துவாள். தலைவனோடு தனித்திருக்கும்போது தலைவி தன் முகக்குறிப்பினால் வரைவுவேட்கையை வெளிப்படுத்துவாள். தலைவன் சிறைப்புறமாக இருக்கும் போது அஃறிணைப் பொருளாகிய ஆறு

போன்றவற்றிடமும், உயர்திணையாகிய தோழியிடமும் தன் மனக்குறையைப் கூறுவாள் போல வரைவினைப் புலப்படுத்துவாள்.

ஒருவரிடம் அவருடைய தவறுகளைப் பற்றிச் சுட்டும் போது வெளிப்படையாக இடித்துரைப்பதை விட மறைப்பொருளாகக் கூறுதல் நாகரிகமும், நலமும் உடையது. தலைவன் வரும்போது வரைவினைப் பற்றி தலைவி பேசுவதால், தன் மீது ஐயம் கொண்டு, தலைவி இவ்வாறு பேசுகிறாள் எனத் தலைவன் கருத இடமுண்டு. மேலும் பெண்மைக்குரிய இயல்பான அச்சமும் மடனும் நாணமும் அவளை நேர்முகமாகத் தலைவனிடம் வரைவு பற்றிப் பேசவிடாமல் தடுக்கின்றன என்பதை,

*"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த*
*நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப."*

(தொல்.பொருள்.களவு.நூ.8)

என்ற தொல்காப்பிய நூற்பா வழி அறியலாம்.

**வரைவு கடாதலின் நோக்கம்:**

தோழி தலைவியின் மீது இருக்கும் அன்பால் களவுக் காலத்தை நீட்டித்தலில் தலைவிக்கு விருப்பம் இருக்காது என்பதை அறிவாள். தலைவியின் விருப்பத்திற்கு ஏற்பப் பகற்குறி, இரவுக்குறிகளில் தலைவனைச் சந்திக்கத் தலைவிக்கு வாய்ப்புகளை உருவாக்கிக் கொடுக்கும் அதேநேரத்தில் தோழி தலைவனைச் சந்தித்துவிட்டுச் செல்லும்போது வரைவு கடாவவும் தவறமாட்டாள். இவ்வரைவு கடாதல் பாடல்கள் தோழியின் அறிவுத் திறத்தையும் சொல்வன்மையையும் காட்டும் பாடல்களாக அமைந்துள்ளன. தலைவனோ களவை நீட்டிப்பதில் தன் விருப்பத்தைக் காட்டுகிறான். தலைவன் தலைவியின் மீது மிகுந்த அன்பு கொண்டிருப்பவனாயினும், தலைவியின் தமர் வரைவிற்கு உடன்பட மாட்டாரோ என்ற அச்சத்தினால் களவை நீட்டிக்கின்றான்.

இந்நீட்டிப்பால் ஊரலர், வரும் வழியின் இடையூறுகள், அலரினால் ஏற்படும் தலைவியின் இற்செறிப்பு, இற்செறிப்பினால் உருவாகும் வெறியாட்டு, நொதுமலர் வரைவு போன்ற அனைத்தையும் தலைவன் அறிவான். ஆயினும் அவன் களவொழுக்கம் தொடர்கிறது. இந்நிலையில் தோழி அவன் அறிந்த அனைத்தையும் அவனுக்கே மீண்டும் எடுத்துரைக்குங்கால் அவன் எதனையும் அறியாதவன்போல் களவொழுக்கத்தை விடுகிறான். இங்ஙனம் தோழியின் வரைவு கடாதல் கற்பின் முதல் படியாய் அமைய தோழியினால் மறைவாகவும் வெளிப்படையாகவும் இடித்துரைக்கப்படும் தலைவன் அதன்பின் வரைவிற்கு உடன்படுகிறான்.

## வரைவு கடாதலைச் செயற்படுத்தும் முறை

தலைவன் தலைவியது அன்பு மிகுதியைத் தோழி தெளிவுற உணர்ந்தவளாதலால் இருவரின் எதிர்கால நலன் கருதி செயல்படும் முதற்பாத்திரமாக தோழி அமைகிறாள். களவினைத் தடுத்தால் தலைவியின் மீது கொண்டிருக்கும் விருப்பம் காரணமாகத் தலைவன் தானே வரைவிற்கு முயல்வான். ஆதலால் ஆற்றது அருமை கூறி பகற்குறி, இரவுக்குறி இடையீடு கூறி, அவனை வரவிடாமல் தடுக்கிறாள். அவளால் கூறப்படும் பலவித காரணங்களில் உட்பொருளாய் அமைவது வரைவே இக்களவு இடையீட்டினால் தலைவியின் ஆற்றாமை மிகுந்தாலும், கற்பு சார்ந்த இல்லறத்திற்கு இவ்விடையீடுதான் துணை செய்யும். இங்ஙனம் தோழியின் வரைவு கடாதல் கூற்றுகள் அவளின் மதிநுட்பத்தையும், சொல் வன்மையையும் சங்ககாலச் சமுதாயத்தின் ஒழுக்க நிலைகளையும் காட்டும் பாடல்களாக அமைந்துள்ளன. தலைவனின் காலம் நீட்டிக்கும் தவறு தோழியால் இடித்துரைக்கப்படுவதாலும் களவு கற்பறமாக மாறுகிறது. களவு

என்ற ஒன்று தோன்றா வண்ணம் மணத்தை முடித்து வைக்கத் தோழி செயல்படுகிறாள்.

எனவே களவு கற்பாக மாறுவதற்குத் தோழியின் வரைவுகடாதல் இன்றியமையாத செயலாக அமைவதால் அஃது இலக்கியங்களில் ஒரு துறையாக இடம்பெற்றது எனலாம். தலைவன் தலைவியை வரைதலே அறம். அவ்வறத்தை வலியுறுத்த எழுந்ததே இத்துறையாகும்.

**வரைவுகடாதல் குறித்த பிற அறிஞர்களின் கருத்து**

"தலைவன் இருவகைக் குறிகளிலும் பலகாலும் வந்தொழுகுவான். இக்களவு வெளிப்படச் சுற்றத்தார் இற்செறிப்பரோ என்றும், வழியாலும் பொழுதாலும் தலைவற்கு ஏதம் வருங்கொல் என்றும் தோழி அச்சமுற்று, இவ்வொழுக்கம் ஒழுகல், நுங்குடிப்பிறப்புக்கும் சிறப்புக்கும் பொருந்தாமையின் இனி நீவீர் இவளை மணந்து கொள்வதே தகுதியென்று தலைவனை வரைவு கடாவத் தொடங்குவாள்"[9] என வரைவுகடாதல் துறைக்கு விளக்கும் கூறுவார் பேராசிரியர் மு.இராகவையங்கார்.

இவ்வரைவு கடாவும் முறை 'குறிப்பு', 'வெளிப்படை' என இரு வகையாகப் பகுக்கப்படுவதைக் காணமுடிகிறது. "குறிப்பாவது தோழி தலைவனை நோக்கி 'எம்மன்னை தலைமகளது வேறுபாடு கண்டு, இஃது இவட்கு எதனால் வந்ததென்று ஆராய்வாளாயினள்' எனப் பொய்தலைப் பெய்து கூறுதல் போல்வது. இதனாற் போந்தது, அன்னை அதன் காரணமறிந்து இற்செறிக்கக் கூடுமாதலின் அதற்குள் நீவிர் வரையாது தாழ்ப்பதென்? என்பதாம். வெளிப்பட வரைவு கடாதலாவது 'நுங்களவொழுக்கம் ஊராரால் அறியப்பட்டு முதலில் அம்பலாய் முளைத்துப் பின் அலராக வளர்ந்தது இனி வரையத் தாழ்க்கற்பாலிர் அல்லிர்' என்றாற்

போல்வது''[10] என இவ்விரு வகைகளையும் பேராசிரியர் மு.இராகவையங்கார் மேலும் விளக்குவார்.

டாக்டர் வ.சுப. மாணிக்கனார் தமது நூலில் தோழியின் நோக்கம் குறித்துக் கூறும்போது ''காமம் காழ்க்கொண்ட இளைய நெஞ்சங்களுக்கு மேல் செய்ய வேண்டுவன புலப்படா. எண்ணிப் பார்க்கும் அறிவு சில நாளைக்குத் தோன்றாது. இவ்விருவர் செய்கையைத் தோழி அறிவு நிலையில் நின்று நாடுகின்றாள். களவு நீடிப்பின், வரத்தகும் கேடுகளைக் காண்கின்றாள். இளையளாயினும் பொறுப்பு உணர்ந்தவளாதலின் திருமணம் செய்து கொள்க என்று தலைவனை இடித்துரைக்கின்றாள்''[11] என வரைவு கடாவும் தோழியின் இயல்பு பற்றிக் குறிப்பிடுவார்.

''களவொழுக்கம் தூயது. கள்ளவொழுக்கம் தீயது. களவுக் காதலர் மனமாசற்றவர், மணந்து கொள்ளும் உள்ளத்தினர், வெளிப்பட்ட பின்னும் வாழ்பவர். கள்ளக்காதலர் தம்முள் அன்பற்றவர். மணம் என நினையா வஞ்சகர், வெளிப்படின் மாய்பவர் அல்லது மாய்க்கப்படுவர். காதலுக்குத் திருமணமின்றேல் சமுதாயத்துக்கு வாழ்வில்லை. ஆதலின், அகத்திணை கண்ட தமிழ்ச் சான்றோர் வரைவை – மன்றலை – வலியுறுத்தினர் எனத் தெளியலாம். தோழி களவொழுக்கத்தில் பேரிடம் பெற்றிருப்பதற்கும், களவுப் பாடல்களில் பாதிக்கு மேல் வரைவுத் துறைகளாய் இருப்பதற்கும் திருமணக் கொள்கையே ஏதுவாகும்''[12] என்று வரைவின் இன்றியமையாமை குறித்து டாக்டர் வ. சுப. மாணிக்கனார் விளக்கியுள்ளார்.

''தோழி தலைவியுடன் பிரித்தறிய முடியாத தன்மை உடையவளாதலின் தலைவி உணர்வதைத் தானும் உணர்ந்து கூற இயலும். தோழி தலைவியின் வேறுபட்டவள் என்பது உண்மையாதலின் பிரிந்து நின்று மூன்றாவது ஆளாக நின்று திருத்தவும் இயலும். தலைவி, தலைவன், தாயார் போன்றோரின் குற்றங்களைச் சுட்டிக்காட்டியும் நல்லமுறைகளைத் திறன்

ஆய்வு முறையில் எடுத்துக் கூறவும் அவளால் இயலும். இத்தோழி, தலைவன் தலைவியர் உறவையும் அறிவாள். அதுபற்றிய ஊரார் வாயையும் உற்றுக் கேட்டு அறிவாள். இதனால் தலைவன் தலைவியரை நல்வழிப்படுத்தவும், தீங்கு வராமல் காக்கவும் அவளால் முடியும்''[13] எனத் தோழியின் செயலையும் பேச்சையும் டாக்டர் தமிழண்ணல் முறைவழிப்பட்டதாகக் காட்டுவார்.

## கடாதல் என்ற சொல்லின் பொருத்தம்

இத்தகைய அறிவுத் திறமுடைய தோழி தன் அறிவின் திறத்தைப் பிறர் அறியாது ஒழுகும் அடக்கமும், தலைவன் தலைவியரது களவொழுக்கம் பிறர் அறியாமல் தோழி மறைக்கும் நல்லியல்பு கொண்டவள். பெண்மையின் நிறைகள் யாவும் தோழியிடத்து ஒருங்கிணைந்து காணப்படும்.

*"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்*
*அறிவும் அருமையும் பெண்பா லான"*

(தொல்.பொருள்.பொ.இ.நூ.14)

என்ற இலக்கணப்படி அமைந்த தோழியைத் தொல்காப்பியனார் ''தாங்கருஞ் சிறப்பின் தோழி'' என்றும் கூறுவார். அத்தகைய அறிவு நலம் சான்றவள் தலைவன்பால் திருமணத்தை வலியுறுத்திக் கூறும் கூற்றுக்கள் இலக்கிய நயமும், உலகியலுண்மையும் கலந்து அமைதல் இயல்பேயாகும். அக்கூற்றுக்களையே அக இலக்கியப் புலவர்களும் இலக்கண ஆசிரியர்களும் வரைவுகடாதல் என்று துறையாகக் கொண்டனர் என்பது முடிபு. ''வரைவுகடாதல்–மணந்து கொள்ளுதலைப் பற்றி உசாவுதல்;'கடாவல்' என்ற சொல்லுக்கு, 'திருமணத்தில் செல்லுதல்' என்ற பொருளும் உண்டு''[14] என்று குறிப்பிட்டுள்ளார்.

அபிதான சிந்தாமணி என்ற நூல் வரைவுகடாதல் துறைக்கு இலக்கண விளக்கத்தின் சூத்திரத்தை எடுத்துரைக்கிறது.

களவின் முடிவுதான் என்ன? தலைவனே! இக்களவு இப்படியே வாழ்க்கை முடிவுவரை தொடருமா? அத்தகையதொரு நிலையைச் சமுதாயம் அனுமதிக்குமா, இளமை தரும் இன்பத்தைக் கற்புவழிப்பட்ட இல்லறத்தில் நிலைத்து, காவல் தவிர்ந்து நிகழ்வது எத்துணைச் சிறப்பு? தான் விரும்பியவளை, தன்னை விரும்பியவளை, மணந்தால் உலகமே அழகுப் பூங்காவாகுமே? சமுதாயத்தின் போற்றதலும் கிடைக்குமே? கற்பு நெறிப்பட்ட இன்ப வாழ்வால் பிறவியும் பயன் பெறுமே? என்பன போன்ற வினாக்கள் அனைத்தையும் தோழி தன் கூற்றில் அடக்கியவளாய் பேசுவாள் இவற்றை எல்லாம் அவள் வெளிப்படையாகக் கேட்கவில்லையாயினும் அவளால் இவ்வினாக்கள் அனைத்தும் நயந்தும் கடிந்தும் கேட்கப்படுவதாகத் தலைவன் உணர்வான். ஏனெனில் அவன் தவறு என்று தெரிந்தும் களவிலேயே தொடர்ந்து இருக்க விருப்பம் காட்டுகின்றானே தவிர, மணத்திற்கோ ஏற்பாடுகள் செய்தவன் இல்லை. அவனும் தோழியும் புரிந்துகொண்ட சூழ்நிலை இது. எனவே தோழியின் பேச்சுகளின் உட்கருத்துகள் யாவும் அவனுக்கும் புரிந்தன. தலைவன் இவற்றைப் புரிந்து கொள்வான் என்பது தெரிந்துதான் தோழியும் பேசுகிறாள். எனவே எண்ணற்ற வினாக்களை உள்ளடக்கித் தோழி பேசும் இப்பேச்சுக்கு “வரைவுகடாதல்” என்ற துறைப் பெயரை அமைத்த பொருத்தத்தை நினைத்துப் பார்த்து வியக்காமல் இருக்க முடியவில்லை. “கடா” என்ற (வினா) சொல்லடியாகவே ‘கடாதல்’ என்ற சொல் அமைக்கப்பட்டிருக்கலாம் என்ற ஆய்வு முடிவும் கிடைக்கிறது.

## வரைவுகடாதல் பற்றி இலக்கண நூல்களின் கருத்துகள்

தொல்காப்பியமே வரைவுகடாதல் துறையின் பெயரையும், அத்துறைக்குரிய செய்திகளைத் தரும் முதல் இலக்கண நூலாக விளங்குகிறது. பொருளதிகாரத்தின் பிரிவுகளான களவியல், கற்பியல்,

பொருளியல் எனப்படும் மூவியல்களிலும் வரைவு கடாதல் துறைச் செய்திகள் இடம் பெறுகின்றன.

இறையனார் அகப்பொருள் இத்துறைகளைப் பற்றிய நூற்பாக்களை முழுமையான வடிவிலும் சில இடங்களில் நூற்பாக்களின் இடையே செய்திகளாகவும் தருகின்றன.

பிற்காலத்தில் அகப்பொருள் துறைகளைப் பாடவென்றே எழுந்த பல இலக்கண நூல்களில் ஒன்றான 'நம்பியகப் பொருள்' (அகப்பொருள் விளக்கம்) வரைவுகடாதல் செய்திகளைப் பற்றி விரிவாகவும், விளக்கமாகவும் கூறுகிறது. இத்துறைக்குரிய மேற்கொள் பாடல்களுடனும் அமைந்துள்ளது.

தமிழ்நெறி விளக்கம் வரைவுகடாதல் செய்தியையும், அதற்கான மேற்கோள் பாடல்களுடனும் எடுத்துக்காட்டியுள்ளன. மேற்கோள் பாடல்களில் சிற்றெட்டகம், அகம், குறுந்தொகை, கலித்தொகை, திணைமொழி ஐம்பது முதலிய நூல்களிலிருந்து சான்றுகள் காட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

மாறனகப் பொருள் நூல் வரைவுகடாதல் துறை பற்றிய செய்திகளை விரிவாகவும், விளக்கமாகவும் எடுத்துரைக்கிறது.

இலக்கண விளக்கம் வரைவுகடாதல் துறை பற்றிய செய்திகளை விரிவாகவும், விளக்கமாகவும் எடுத்துரைக்கிறது.

முத்து வீரியம் வரைவுகடாதல் துறை பற்றிய செய்திகளை எடுத்துக் கூறி, சான்றுக்குத் திருக்கோவையார் நூலைச் சுட்டியுள்ளது.

சுவாமிநாதம் வரைவுகடாதல் செய்திகளை மட்டும் தருகிறது.

## இலக்கண வரலாறு

மொழிச் சிதைவு ஏற்படாமலும், கேடு ஏற்படாமலும் காப்பது இலக்கணத்தின் கட்டுக்கோப்பேயாகும். இலக்கணம் வளர்ந்த வரலாறு பெரிது. தமிழ் இலக்கண நூல்களின் பரப்பும் பெரியதாகவே இருக்கின்றன.

## அகப்பொருள் நூல்கள்

தமிழில் இன்று கிடைத்துள்ள பொருள் இலக்கண நூல்கள் பதின்மூன்றுள. அதிலும் அகப்பொருள் இலக்கண நூல்களே மிகுதியாக உள்ளன. இறையனார் அகப்பொருள், தமிழ்நெறி விளக்கம், நம்பியகப் பொருள், களவியற் காரிகை, மாறனகப்பொருள் என்னும் ஐந்து நூல்கள் அகப்பொருள் மட்டும் கூறுகின்றன. தொல்காப்பியம், வீரசோழியம் இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம், அறுவகை இலக்கணம் ஆகிய ஏழு நூல்கள் ஒவ்வொரு பகுதி அல்லது இயலில் அகப்பொருள் பற்றிக் குறிப்பிடுகின்றன.

## தொல்காப்பியம்

முந்து நூல்களில் நமக்குக் கிடைத்துள்ள முழுமுதல் இலக்கணநூல் தொல்காப்பியமேயாகும். அதில் கூறப்படும் பொருள் இலக்கணம் வாழ்வியல் நிறைந்தது. தொல்காப்பியம் பொருளதிகாரம் அகப்பொருளையே விரிவாகக் கூறுகிறது. அகத்திணையியல் 58 நூற்பாக்களையும், களவியல் 51 நூற்பாக்களையும், கற்பியல் 53 நூற்பாக்களையும், பொருளியல் 52 நூற்பாக்களையும் கொண்டு அகப்பொருளை விரித்துரைக்கிறது.

## தொல்காப்பியத்திற்குப் பின்

தொல்காப்பியம் அகப்பொருள் கருத்துகளைக் கூற்று வகையில் கூறுகிறது. பிற்காலப் புலவர்கள் துறைவகையில் அகப்பொருள் செய்திகளை

உணர்த்தினர். தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த அகப்பொருள் நூல்களில் அகப்பொருள் துறைகள் புதியதொரு வளர்ச்சியைப் பெற்று விளங்குவதைக் காண முடிகிறது.

பல கால கட்டங்களில் தொல்காப்பியத்திற்குப் பிறகு எழுந்த 11 நூல்களில் ஐந்து நூல்கள் தனி நூலாக அமைந்தும், ஆறு நூல்கள் நூலில் ஒரு பகுதியாக அமைந்தும் அகப்பொருள் கருத்துகளை விளக்குகின்றன.

தொல்காப்பியத்திற்குப் பின்னர் முழு இலக்கணம் தழுவாத பகுதி இலக்கண நூல்கள் தோன்றத் தொடங்கின. அவ்வகையில் அகப்பொருள் பற்றிக் கூறும் நூலாகத் தோன்றியது இறையனார் அகப்பொருள் எனக் குறிப்பிடுவர்.

இறையனார் அகப்பொருள் தோன்றிய காலம் முதலே அகப்பொருள் இலக்கணம் தனியே வளரத் தொடங்கியது எனலாம்.

## இறையனார் அகப்பொருள்

இறையனார் என்பவரால் இயற்றப்பட்ட அகப்பொருள் இறையனார் அகப்பொருள் எனப்பட்டது. ‘இறையன்’ என்பது இறைவன் என வழங்கப்பட்டு மதுரைச் சோமசுந்தர கடவுள் இந்நூலை இயற்றினர் என்பர். (இ.அ. சிறப்புப் பாயிரம்.7) கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த கடைச்சங்கப் புலவர் நக்கீரர் இதற்கு உரை எழுதியுள்ளார்.

## நூல் அமைப்பு

களவியல் 33 நூற்பாக்களையும், கற்பியல் 27 நூற்பாக்களையும் என்னும் இரு பிரிவுகளையும் உடையது. அகப்பொருள் இலக்கணத்தைச் சுருக்கிக் கூறுகிறது. பெரும்பாலான நூற்பாக்கள் ஒரு வரியிலும் (13) இருவரிகளிலும் (27) அமைந்துள்ளன. இரு நூற்பாக்கள் (12, 20) மட்டுமே

ஒன்பது வரிகளையுடையது. 'அம்பலும் அலரும் களவு' (22) என்ற நூற்பா சிந்தடியிலேயே அமைகிறது. இந்நூலின் நூற்பாக்கள் எளிமையும் திட்பமும் நுட்பமும் செறிந்து பொருள்வளம் மிக்கவையாக விளங்குகின்றன.

### நம்பியகப்பொருள்

நாற்கவிராச நம்பி என்பவரால் இயற்றப்பட்டது. தொல்காப்பியம் அகப்பொருளைக் கூற்று வகையால் கூற, நம்பியகப்பொருள் துறை வகையில் கூறுகிறது.

### நாற்கவிராச நம்பி

ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்னும் நான்கு வகைக் கவிகள் பாடுவதில் வல்லவராதலின் நாற்கவிராச நம்பி எனப் பெயர் பெற்றார். சமண சமயத்தைச் சார்ந்தவர். நம்பியகப் பொருள் நூலுக்கு உரை எழுதியவரும் இவரே ஆவார்.

### நூலின் அமைப்பு

தொல்காப்பியரின் அகப்பொருள் இலக்கணத்தையும் சான்றோர்களின் அகப்பொருள் இலக்கியங்களையும் தழுவி இயற்றப்பட்டது. அகத்திணையியல் 116 நூற்பாக்களும், களவியல் 54 நூற்பாக்களும், வரைவியல் 29 நூற்பாக்களும், கற்பியல் 10 நூற்பாக்களும், ஒழிபியல் 43 நூற்பாக்களுமாக மொத்தம் 252 நூற்பாக்கள் உள்ளன.

### நம்பியகப்பொருளின் சிறப்பு

நாற்கவிராச நம்பி சில இலக்கணங்களை வரையறைப்படுத்திக் கூறுகிறார். தொல்காப்பியத்தின் மேல் வளர்ச்சி என்று இதனைக் கூறலாம். கைக்கிளைக் குறிப்பு (தொல்.அகத். 53) பெருந்திணைக் குறிப்பு

(தொல்.அக.54) எனத் தொல்காப்பியர் கூறுவதைக் 'கைக்கிளை உடைய தொருதலைக் காமம்' (ந.அ.5) என இலக்கணம் வகுத்துக் காட்டுகிறார்.

காமஞ்சாலா இளமையோள் (தொல்.அகத்.53) எனத் தொல்காப்பியர் கைக்கிளைத் தலைவியைக் கூற நாற்கவிராச நம்பி 'காமஞ்சான்ற இளமையோள்' (ந.அ.29) எனக் கூறுகிறார்.

தொல்காப்பியர் கற்பியல் முடிவில் களவின் நிறைவு கற்பு என்றும், கற்பின் நிறைவு சிறந்தது பயிற்றி, சுற்றம் சூழ வாழ வேண்டும் (தொல்.கற்பு.51) எனக் கூற, நாற்கவிராச நம்பி தலைவனும் தலைவியும் காம வேட்கை தீர்ந்து தம்பதி நீங்கித் துறவறம் மேற்கொள்ள வேண்டும். (ந.அ.116) எனக் கூறுகிறார். 'தம்பதி நீங்கி' என்பதும் 'துறவறம் மேற்கொள்வது' என்பதும் தொல்காப்பியம் கூறாத புதுநெறி. களவுக்கும் கற்புக்கும் பாலமாக வரைவியல் அமைகிறது. பின்வந்த அகப்பொருள் இலக்கண நூல்களெல்லாம் பெரும்பாலும் நம்பியகப் பொருளையே அடிப்படையாகத் கொண்டு தோன்றின எனலாம்.

**காலம்**

இந்நூல் சிறப்புப்பாயிர உரை விளக்கத்தில் இந்நூலின் காலம் பாண்டியன் குலசேகரன் காலம் (ந.அ. சிறப்புப்பாயிர உரை: 5) என வருவது கொண்டு குலசேகர பாண்டியன் காலமாகிய (கிபி.1192–1266) கி.பி. 12 ஆம் நூற்றாண்டின் இறுதியும் 13 ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் என அறிய முடிகிறது.

**நம்பியகப்பொருள் கூறும் தஞ்சைவாணன் கோவை**

நம்பியகப்பொருள் இலக்கணத்தை விளக்கும் இலக்கியமாய் பொய்யா மொழிப் புலவர் தஞ்சைவாணன் கோவையை இயற்றினார்.

'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' என்னும் நன்னூல் நெறி காலங்காட்டும் வளர்ச்சியில் மாறி இலக்கணம் கண்டதற்கு இலக்கியம் இயம்பும் முயற்சிகள் தோன்றின. இம்முயற்சியின் முதல் நூல் தஞ்சை வாணன் கோவையாகும்.

**தமிழ்நெறி விளக்கம்**

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதன் முற்பகுதியும் பிற்பகுதியும் சிதைந்த நிலையில் கிடைத்த ஓர் ஏட்டை அடிப்படையாகக் கொண்டு உ.வே.சாமிநாதையரால் 1937 இல் பதிப்பிக்கப்பட்டது.

**நூல் அமைப்பு**

பொருளியல் என்னும் அமைப்பில் 25 நூற்பாக்கள் கிடைத்துள்ளன. முதல் நூற்பா அகப்பொருள், புறப்பொருள், அகப்புறப்பொருள் எனப் பொருள் வகைகளைக் கூறும். (2–13) 12 நூற்பாக்கள் முதல் கரு, உரிப்பொருள் களைக் கூறுகின்றன. (14–20) ஏழு நூற்பாக்கள் இயற்கைப் புணர்ச்சி பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம், வரைவுகடாதல், உடன் போக்கு வலித்தல் என்பன பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. (21–25) ஐந்து நூற்பாக்களில் அறத்தொடு நிற்றல், உடன் செலவு, பிரிவு பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.

**காலம்**

பேராசிரியர் உரை, களவியற் காரிகை உரை, பரிமேலழகர் உரை ஆகியவற்றில் இந்நூல் சுட்டப்படுவதால் அவர்கள் காலத்திற்கு முற்பட்டது. "இதன் காலத்தை கி.பி.10ஆம் நூற்றாண்டு எனக் கூறுவர் மு.அருணாசலம் 1927".[15]

## தமிழ்நெறி விளக்கம் தொல்காப்பியத்துடன் வேறுபடும் இடங்கள்

கைக்கிளை, பெருந்திணை பற்றிய விளக்கம் தரப்படவில்லை. களவில் கூறப்படும் அறத்தொடு நிலை, உடன் போக்கு ஆகியன கற்பில் கூறப்படுகின்றன. கூற்றுக்குரியர் அல்லாராகிய நற்றாய் கூற்று நிகழ்த்துவர் (23) என்ற செய்திகளைத் தருகிறது.

### களவியற் காரிகை

முதலும் இடையும் முடிவும் இல்லா நூல். நூலாசிரியர் பெயர் நூற்பெயர், உரையாசிரியர் பெயர் பற்றிய செய்திகளை அறிய முடியாத நூல். யாப்பெருங்கலம் நூலுக்கு விளக்கமாக யாப்பருங்கலக் காரிகை அமைந்தது போல இறையனார் களவியலுக்கு விளக்கமாக களவியற் காரிகை அமைந்தது எனக் கூறப்படுகிறது.

### பெயர்க்காரணம்

“களவொழுக்கம் பற்றிக் கூறுவதால் களவியல். இந்நூல் கட்டளை கலித்துறை யாப்பில் அமைந்ததாலும் காரிகையாகிய மகடூஉ முன்னிலை உடையதாலும் காரிகை எனப் பெயர் கொடுக்கலாம். ஆனால் காரிகை என்றவுடன் யாப்பருங்கலக் காரிகை நினைவுக்கு வரும். களவியல் பற்றிக் காரிகை யாப்பில் பாடப்பட்டதினால் களவியற் காரிகை எனப் பெயர் பெற்றதாகப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் சூட்டிய பெயரே இதுவாகும்”[16] என்ற காரணப்பெயர் குறிப்பிடத்தக்கது.

### நூல் அமைப்பு

இந்நூல் அகப்பொருள், களவொழுக்கம், கற்பொழுக்கம் என்ற மூன்று இயல்களை உடையது. அகப் பொருளில் அமைந்துள்ள 22 சூத்திரங்களும் சிதைந்து உள்ளன. களவொழுக்கத்தில் தெய்வப் புணர்ச்சி,

பாங்கினிற் கூட்டம், தோழியாலாயக் கூட்டத்திற் பகற்குறி, தோழியாலாயக் கூட்டத்திற் இரவுக்குறி, வரைவுகடாதல், உடன்போக்கு வலித்தல் என்று தமிழ்நெறி விளக்கப் பொருளியலை (14) அடியொற்றி வகைப்படுத்துகிறது. கற்பொழுக்கத்தில் வெளிப்படை நிலை, உடனிலைச் செலவு, கல்விப் பிரிவுணர்த்தல், காவலிற் பிரிவுணர்த்தல், பகைதணி வினைப் பிரிவுணர்த்தல், வேந்தர்க் குற்றுழிப் புணர்த்தல், பொருள்வயிற் பிரிதல், பரத்தையிற் பிரிதல் என்ற ஒன்பது வகைகள் கூறப்படுகின்றன.

களவொழுக்கத்தில் 11 நூற்பாக்கள், கற்பொழுக்கத்தில் 12 நூற் பாக்களுமாகச் சேர்ந்த 23 நூற்பாக்கள் கிடைத்துள்ளன. இந்நூல் மறைந்து போன 15 நூல்களைத் தமிழுலகிற்குத் தெரியப்படுத்துகிறது.

## இலக்கண விளக்கம்

இலக்கண விளக்கத்தில் ஐந்திலக்கணங்களும் கூறப்பட்டுள்ளன. முன்னூல்களின் தொகுப்பாக அமைந்துள்ளது. தொல்காப்பியம் போல பரந்துபட்ட இலக்கண நூலாக இருப்பதால் இதனைக் 'குட்டித் தொல்காப்பியம்' என்பர்.

## ஆசிரியர்

திருவாரூர் வைத்தியநாத தேசிகர். சைவ சமயத்தைச் சார்ந்தவர். காலம் கி.பி. 17–ம் நூற்றாண்டு. இவர் மயிலம் பிள்ளைத் தமிழ், பாசு வதைப் பரணி, மெய்ஞானவிளக்கம் போன்ற பல தமிழ் நூல்களை எழுதியுள்ளார். இவர் மாணவர் படிக்காசுப் புலவர் ஆவார்.

## நூல் அமைப்பு

இலக்கண விளக்கம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற மூன்று பகுப்புகளை உடையது. எழுத்ததிகாரம் ஐந்து

இயல்கள் 158 நுற்பாக்களையும், சொல்லதிகாரம் ஐந்து இயல்கள் 214 நூற்பாக்களையும், பொருளதிகாரம் ஐந்து இயல்கள் 569 நூற்பாக்களையும் கொண்டுள்ளன. பொருளதிகாரம் அகத்திணையியல் (226), புறத்திணையியல் (21), அணியியல் (90), செய்யுளியல் (51), பாட்டியல் (181) ஐந்து பிரிவுகளை உடையது.

இந்நூல் தொல்காப்பியம், காரிகை, யாப்பருங்கலம், தண்டியலங்காரம், நன்னூல் ஆகிய நூல்களின் நூற்பாக்களை அப்படியே அமைத்தும், சில நூற்பாக்களைத் திருத்தியும் மாற்றியும் அமைக்கப் பட்டுள்ளது. இலக்கண விளக்கத்தில் உள்ள பல குற்றங்களை எடுத்துக்காட்டி சிவஞான முனிவர் "இலக்கண சூறாவளி" என்னும் மறுப்பு நூலை எழுதியுள்ளார்.

## முத்து வீரியம்

ஐந்திலக்கணங்களும் கூறும் நூல்.

## ஆசிரியர்

முத்து வீர உபாத்தியாயர். இவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் அகிலாண்ட பிள்ளைத் தமிழுக்குச் (1842) சிறப்புப் பாயிரம் எழுதியிருப்பதால் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் காலமாகிய கி.பி. 19–ம் நூற்றாண்டு இவரது காலமாகும்.

## நூல் அமைப்பு

ஐந்து அதிகாரங்களை உடையது. எழுத்ததிகாரம் மூன்று இயல்கள் 457 நூற்பாக்களையும், சொல்லதிகாரம் மூன்று இயல்கள் 310 நூற்பாக்களையும், பொருளதிகாரம் இரண்டு இயல்கள் 93

நூற்பாக்களையும், யாப்பதிகாரம் மூன்று இயல்கள் 267 நூற்பாக்களையும், அணியதிகாரம் மூன்று இயல்கள் 160 நூற்பாக்களையும் கொண்டுள்ளன.

## பொருளதிகாரம்

அகவொழுக்கவியல் 50 நூற்பாக்களிலும், களவொழுக்கவியலில் 24 நூற்பாக்களிலும், கற்பொழுக்கவியல் 9 நூற்பாக்களிலும் அகப்பொருட் செய்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அகத்துறைக்குத் திருக்கோவையார் பாடல்கள் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளன. புறப்பொருளுக்கு அகவொழுக்கவியலிலே "புறத்திணை யகத்திணைப் புறமா கும்மே" (819) எனக்கூறி ஓரடி ஈரடி நூற்பாக்களின் புறத்திணைகளுக்கு இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது.

## சுவாமிநாதம்

ஐந்திலக்கணம் பேசும் நூல்.

## நூல் அமைப்பு

எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம், யாப்பதிகாரம், அணியதிகாரம் என்னும் ஐந்து அதிகாரங்களை உடையது. ஒவ்வோர் அதிகாரமும் மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. உட்பிரிவுக்கு 'மரபு' என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்நூலின் நூற்பாக்கள் அந்தாதித் தொடையில் அமைந்த எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பாவால் அமைந்தவை. 190 விருத்தங்கள் உள்ளன.

## பொருளதிகாரம்

அகத்திணை மரபு, கைக்கோண் மரபு, புறத்திணை மரபு என மூன்று வகையினைக் கொண்டது. அகத்திணை மரபில் 14 நூற்பாக்கள், கைக்கோண் மரபில் 44 நூற்பாக்கள் அகப்பொருளைக் கூறுகின்றன. நம்பியகப்பொருளைத் தழுவிப் பெரும்பாலான பாடல்கள் அமைந்துள்ளன. புறத்திணை மரபு 23 நூற்பாக்களில் புறத்திணைச் செய்திகளைக் கூறுகிறது.

அகப்பொருள் இலக்கணம் வளர்ந்த வரலாற்றினைக் கால வரிசையில் ஆராய்கின்றபோது அதன் வளர்ச்சி நிலை, தளர்நிலை மாற்றங்கள் ஆகியவை புலனாகின்றன. முதல் நூலாகிய தொல்காப்பியம் பிற்கால அகப்பொருள் இலக்கண விரிவுகளுக்கு இடம் தருகிறது. தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த அகநூல்களில் அகப்பொருள் துறைகள் புதிய தொரு வளர்ச்சியினைப் பெற்றன. தொல்காப்பியம் கூற்று வகையில் கூற, பிற்காலப் புலவர்கள் துறை வகையில் அகச்செய்திகளை உணர்த்துகின்றனர்.

## மாறனகப் பொருள்

அகப்பொருள் மட்டும் பேசும் நூலாகும்.

## நூல் அமைப்பு

அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என்று அகப்பொருட் செய்திகள் விரிவாகக் கூறப்படுகின்றன. ஐந்தியலுக்கும் நூற்பா 363 ஆகும்.

## ஆசிரியர்

மாறனகப்பொருள் நூலை இயற்றியவர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவர். திருக்குருகை என்பது ஆழ்வார் திருநகரி.

திருக்குருகைப் பெருமாள் என்பது ஆழ்வார் திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வாரைக் குறிக்கும். இவர் நம்மாழ்வாரின் அரசவைக் கவிஞராக விளங்கியவர் என்றும், இவர் தந்தையார் பெயரும் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்றும் கூறப்படுகிறது.

**காலம்**

திருக்குருகைப்பெருமாள் இவர் இயற்றிய திருக்குருகை மான்மியம் அரங்கேற்றமாகிய காலம் "அறந்திகழ் ஆண்டவை எழுநூற் றிருபான் மூன்றில் அணிகிளர் கார்த்திகை மாதம் எட்டில்" என்றுள்ளது இவ்வாண்டு கொல்லம் 723. அது கி.பி. 1548. ஆதலால் 440 ஆண்டுகளுக்கு முற்பட்டது என அறிய கிடக்கின்றது.

## தொல்காப்பியம் தரும் வரைவுடாதல் துறைச் செய்திகள்

வரைவு கடாதலின் முன் பல நிகழ்வுகள் நிகழ்வது உண்டு. அவை தலைவனை வரைவிற்குத் தூண்டுவனவாக அமையும்; அந்நிகழ்வுகளை ஏதுவாகக் கொண்டு தோழி தலைவனிடம் வரைவு பற்றி வலியுறுத்த முடியும். பகற்குறி, இரவுக்குறி இடையீடு, அலரச்சம், தலைவன் வரும் ஆற்றருமை, தலைவனின் ஆற்றாமை, தலைவியின் ஆற்றாமை, நொதுமலர் வரைவு, வெறியாட்டு போன்ற இவைகளே அத்தகைய ஏதுக்களாய் அமைகின்றன. இவையெல்லாம் சங்க அக இலக்கியங்களின் பாடல்களாகக் காணக் கிடைக்கின்றன. இவை அனைத்தையும் வரைவு கடாதலுக்குரிய காரணங்களாகப் புலவர்கள் பாடி வைத்தனர். இவற்றுள் ஏதேனும் ஒரு காரணத்தை உள்ளடக்கித் தோழி தலைவனை வரைவு கடாதலுக்காகப் பாடல்கள் அமைக்கப்பட்டன. எனவே இவ்வேதுக்கள் காணப்படும் நூற்பாக்களின் பகுதிகள் எவை எனவும் இங்கு ஆராயப்பட்டுள்ளன.

அவற்றோடு, வரைவுகடாதல் என்னும் துறை பற்றி மட்டுமே குறிப்பாக அமைந்த முழு நூற்பாக்களும் இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

## இருவகைக் குறி

குறி என்பது குறியிடம். தலைமகனும் தலைமகளும் சந்திக்கும் இடம். குறி இரண்டு வகைப்படும். 1. பகற்குறி 2. இரவுக்குறி. இருவரும் பகற்காலத்தில் சந்திக்கும் இடம் பகற்குறி. இரவுக் காலத்தில் சந்திக்கும் இடம் இரவுக்குறி. இந்த இருவகைக் குறிகளிலுமே தலைமகன் தலைமகளைச் சந்திக்க முடியாமல் இடையீடு உருவாதல் உண்டு. இடையீட்டின் முறையே பகற்குறி இடையீடு, இரவுக்குறி இடையீடு எனப் பெயர் பெறும்.

இடையீடு மட்டும் அல்லாமல் அல்ல குறிப்படுதலும் உண்டு இரவுக் காலத்தில் தலைமகளைச் சந்திக்க வரும் தலைமகன் தான் குறி எழுப்பிக் கொண்டு வருவதாகக் கூறுவான். அவன் செய்து கொண்டு வருவதாகச் சொன்ன குறி இயற்கையாக நிகழ்ந்து விட, தலைமகன் தான் சொன்ன குறியிடத்திற்கு வந்து தலைமகளைச் சந்திக்க முடியாமல் போவது 'அல்லகுறி' எனப்படும். இதனை,

***"இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்தும்***
***காணா வகையிற் பொழுது இகப்பினும்***
***தானகம் புகா அன் பெயர்தல் இன்மையிற்***
***காட்சி ஆசையிற் களம்புக்குக் கலங்கி***
***வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்"***

**(தொல்.பொருள்.களவு.இளம்.நூ.17)**

என்னும் தொல்காப்பிய நூற்பாவின் வழி அறியலாம். தலைவனின் கூற்று நிகழும் இடங்கள் எவை எனக் கூறும் நூற்பாவில் இருவகைக் குறியிடையீடுகள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**வரைவுகடாதலின் ஏதுக்கள்**

*"இட்டுப்பிரி விரங்கினும் அருமைசெய் தயர்ப்பினும்*
*வந்தவழி யெள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினும்*
*நொந்துதெளி வொழிப்பினும் அச்சம் நீடினும்*
*பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும்*
*வருந்தொழிற் கருமை வாயில் கூறினும்*
*கூறிய வாயில் கொள்ளாக் காலையும்*
*மனைபட்டுக் கலங்கிச் சிதைந்தவழி தோழிக்கு*
*நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்*
*உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல*
*வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணும்*
*நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்*
------------------------------------------------------------------------
*வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்*
*குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்*
*வரைவுதலை வரினும் களவறி வுறினும்*
*தமர்தற் காத்த காரண மருங்கினும்*
*தன்குறி தள்ளிய தெருளாக் காலை*
*வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித்*
*தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்*
*வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்*
*பொழுதும் ஆறும் புரைவ தன்மையின்*
*அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்"*

**(தொல்.பொருள்.களவு.இளம்.நூ.21:6–16 23–32)**

களவொழுக்கத்தில் தலைவியின்பால் தோன்றும் உள்ள நிகழ்ச்சியினையும் கூற்றினையும் தொகுத்து உணர்த்தும் இந்நூற்பாவில் வரைவு கடாதலின் கூறுகள் காணப்படுகின்றன. "தலைவன் தன்னைச் சிறிதுகாலம் பிரிந்த நிலையிலுளதாகிய இரக்கத்தின் கண்ணும், தான் தலைமகளாற் காண்டற்கரியாளாகிய காலத்து அவன் வருதலைத் தவிர்ந்த நிலையிலும்,

அவன் தன்னைக் காண வந்த காலத்து ஊரவர் கூறும் அலர்மொழிக்கு அஞ்சி, அவனைக் காணுதலை விரும்பாது தவிர்ந்த நிலையிலும், தலைவனொடு தனக்குள்ள காதலுறவு வெருவி வாய் சோர்ந்து வெளிப்பட்ட நிலையில் அதனைச் செவிலி முதலியோர்க்குப் புலனாகாதவாறு தன்மனத்தடக்கி இரங்கும் நிலையிலும், தான் தலைவனைக் காணப் பெறாமைக்கு உளம்நொந்து 'நின்னைப் பிரியேன்' என அவன் தன்னை நோக்கிக் கூறிய தெளிவுரையினை உறுதியெனக் கொள்ளாது ஐயுறும் நிலையிலும், தலைவன் வருகின்ற வழியிடையேயுளவாகும் இடையூறுகளை நினைந்து தன் மனத்தே அச்சம் மிகுந்த நிலையிலும், தலைவன் (வரைவிடை வைத்துப்) பிரிந்த போது மனம் கலங்கிய நிலையிலும், தலைவனைக் கண்டு அளவளாவப் பெற்றபோது மகிழ்கூர்ந்த நிலையிலும், தலைவன் வருதற்குத் தடைகளாக வழியிடையே நேரும் இடையூறுகள் பலவதாலின் அவன் இங்கு வருதல் அரிது எனத் தோழி கூறிய நிலையிலும், தோழி கூறியதனைத் தன் மனம் ஏற்றுக் கொள்ளாத நிலையிலும், தலைவன் வருதற்குத் தடைகளாக வழியிடையே நேரும் இடையூறுகள் பலவாதலின் அவன் இங்கு வருதல் அரிது எனத் தோழி கூறிய நிலையிலும், தோழி கூறியதனைத் தன் மனம் ஏற்றுக் கொள்ளாத நிலையிலும், புறத்துப் போய் விளையாட இயலாதவாறு தான் இற்செறிக்கப்பட்டுக் கலங்கி உள்ளஞ் சிதைவுற்ற நிலையிலும், தனது வருத்தத்தினை வெளிப்படக் கூறவொண்ணாத காலத்து நெட்டுயிர்ப் பெறுதலும், உயிர் தனது உடம்பினை விட்டு நீங்குவது போலும் துன்பமுண்டாக அயலார் தன்னை மணம் பேசவந்த நிலையில் அதனை மாற்றுதற் பொருட்டும், தலைவிக்கு இவ்வுடல் மெலிவு எதனால் ஏற்பட்டது எனச் செவிலி வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவிக்க வரும் அச்சத்தின் கண்ணும், புள் முதலியவற்றால் இயல்பாக நிகழ்வனவற்றை ஒப்புமை பற்றித் தலைவன் செய்த அடையாளங்களாகக் கொண்டு மயங்கிய நிலையிலும், களவொழுக்கம் பிறரால் அறியப்பட்ட நிலையிலும், பெற்றோர்

தன்னைப் புறத்துப் போகாதவாறு இல்லின்கண் செறித்தல் காரணமாக அமைந்த பக்கத்தும், தலைவன் செய்த அடையாளம் பிற இயற்கை நிகழ்ச்சிகளால் தப்பின்மையால் இது தலைவன் செய்த அடையாளமோ பிறிதொன்றோ எனத் தெளியாத நிலைமைக்கண் குறியிடத்து வந்த தலைவன் தன்னைக் காணப்பெறாது வறிதே திரும்பினானாக . அவன் வந்துசென்ற வெற்றிடத்தினை நோக்கி 'இத்தவறு என்னால் நேர்ந்ததே' எனத் தலைவனைக் குற்றமிலானாகத் தன் மனத்திற் கருதித் தெளிதலும், தலைவன் வரும் காலமும் வழியும் ஒத்த தல்லாமையால் துன்ப மீதூர்ந்த நெஞ்சத்தினளாய நிலையிலும், தலைமகன்பால் வேட்கை மிக்க நிலையிலும் தன்பால் அவன் வைத்துள்ள தலையளி மிக்க நிலையிலும், தலைவியின் கூற்றுகள் நிகழும்[17] என்னும் பொருள் கொண்ட மேற்கூறிய தொல்காப்பிய நூற்பா வரைவு கடாதலின் பற்பல ஏதுக்களைக் காட்டுகின்றது.

**களவில் தலைவன் செயல்கள்**

*"இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்தும்*
*காணா வகையிற் பொழுதுநனி இகப்பினும்*
*காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி*
*வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்*
*புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்*
*பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்*
*வேளாண் எதிரும் விருப்பின் கண்ணுந்*
*தாளாண் எதிரும் பிரிவி னானும்*
*நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்*
*வரைதல் வேண்டித் தோழி செப்பிய*
*புரைதீர் கிளவி புல்லிய எதிரும்*
*வரைவுடம் படுதலும் ஆங்கதன் புறத்தும்*
*புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்*
*கிழவோன் மேன என்மனார் புலவர்"*

(தொல்.பொருள்.களவு.இளம்.நூ.17)

இந்நூற்பா தோழியின் உடன்பாடு பெற்றுத் தலைமகளைக் கூடிய தலைவன் தலைவியை மணந்து கொள்ளுங்காலும் நிகழ்வனவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது. இது பற்றி வெள்ளைவாரணனார்,

“பகற்குறி இரவுக்குறியென்னும் இருவகைக் குறிகளும் தப்பிய நிலையிலும், தலைமகளைக் காணவியலாதவாறு பொழுது நீட்டித்த நிலையிலும், தான் தலைமகளது இல்லத்திற்குட் புகப் பெறானாகிக் களவொழுக்கத்தின் மீளுதலின்மையால் தலைமகளைக் காணுதல் வேண்டுமென்னும் பெருவிருப்பத்தால் மீண்டும் குறியிடத்தே சென்று காணப்பெறாது கலக்கமுற்று வேட்கையால் மயங்கிச் செயலற்று நிற்கும் காலத்தினும், உணவு உண்ணுங் காலத்தில் தலைமகளது மனைக்கண் விருந்தினனாகப் புகுந்து தலைமகளை எதிர்ப்பட்டபோது அவளுடைய சுற்றத்தாரால் தள்ளத்தகாத விருந்தாக ஏற்று உபசரிக்கப் பெற்ற நிலையிலும், (தலைமகளும் தோழியும்) விருந்து உபசரிப்பாராக விரும்பி எதிரேற்ற நிலையிலும், தாளாண்மையினை மேற்கொண்டு வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியும் நிலையிலும், களவு அலராகி வெளிப்பட்டுவிடுமோ என்னும் அச்சத்தோடு நாணும் தலைவி நெஞ்சினை வருத்துதலால் தலைமகளை விலகி ஒழுகுதற்கண்ணும், தலைவியை மணந்து கொள்ளுதல் வேண்டித் தோழி கூறிய குற்றந்தீர்ந்த சொல்லினை ஏற்றுப் பொருந்திய எதிர்ப்பாட்டின் கண்ணும், தோழி கூறிய சொற்கேட்டு வரைவுடம்படுதற் கண்ணும், அங்கு அவ்வரைவு புறத்ததாயவழிக் குற்றம்பட நேர்ந்த தமர் வரைவு மறுத்தலொடு கூட இங்குக் கூறப்பட்டன வெல்லாம் தலைமகன் மேலன”[18] என விளக்குகிறார். இவ்விலக்கணங்கள் எல்லாம் சங்க அகப்பாடல்களில் நிகழ்ச்சி தொடர்புடன் அமைக்கப்பட்டு, அவை ‘வரைவுகடாதல்’ என்னும் துறைக் குறிப்புகளுடன் காணப்படுகின்றன.

**வரைவுகடாதலின் வகைகள்**

*“நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்”*

(தொல்.பொருள்.களவு.இளம்.நூ.15)

எனத் தொடங்கும் நூற்பா களவொழுக்கத்தின் கண் தோழிக்குரிய கிளவியெல்லாம் தொகுத்து உணர்த்தும் நீண்ட நூற்பாவாகும். இந்நூற்பாவில் பின்கண்ட சில வரிகளை ஆராயுங்கால், அவை வரைவு கடாதலின் வகைகள் எனக் கருதக்கூடியனவற்றைத் தொகுத்துத் தருவனவாய் உள்ளன.

*“பெருமையிற் பெயர்ப்பினும் உலகுரைத் தொழிப்பினும்*
*அருமையின் அகற்சியும் அவளறிவு றுத்துப்*
*பின்வா என்றலும் பேதமை யூட்டலும்*
*முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்*
*அஞ்சியச் சுறுத்தலும்..............................................*
*ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்*
*காப்பின் கடுமை கையற வரினும்*
*களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்*
*காதல் மிகுதி உளப்படப் பிறவும்*
*நாடும் ஊரும் இல்லும் குடியும்*
*பிறப்புஞ் சிறப்பும் இறப்ப நோக்கி*
*அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ*
*அனைநில வகையான் வரைதல் வேண்டினும்*
*..............................................................................*
*வரைவுடன் பட்டோர்க் காவல் வேண்டினும்”*

(தொல்.பொருள்.கற்பு.இளம்.நூ.24: 8–9, 12, 29–36,43)

எனக் களவொழுக்கத்தில் தோழி உரையாடுவதற்குரிய பொருள் வகைகள் அனைத்தையும் தொகுத்துக் கூறும்போது, அவள் தலைவனை வரைவு கடாதலும், அதன் வகைகளும், பற்றிய குறிப்புகள் காணக்கிடைக்கின்றன.

இந்நூற்பா வரிகளுக்குப் பேராசிரியர் வெள்ளைவாரணனார் பின்வருமாறு ஆய்வுரை கூறியுள்ளார்.

“உலகத்தார் ‘மணம் செய்து கொள்ளுமாறு வரைந்து கொள்’ எனக் கூறுமிடத்தும், தலைவியை அணுகுவதற்கு இயலாமையைக் கூறி அகற்றுமிடத்தும், இக்களவொழுக்கம் தந்தை தன்னையர்க்குப் புலனாயின் யாதாய் விளையுமோ என அஞ்சியவளாய் அவ்வச்சத்தினைத் தலைவனுக்கு அறிவுறுத்தலும், தலைவன் வரும் வழியினது தீமையைத் தாங்கள் அறிதலுற்றமையால் நேர்ந்த கலக்கத்தின் கண்ணும், தலைமகளை இற்செறித்துக் காத்தலின் கடுமை எல்லை கடந்தமையாலும், பகற்குறி இரவுக்குறி என்னும் இடமும் பகலும் இரவுமாகிய பொழுதும் ஆகத் தாங்கள் வரைந்து கூறும் நிலைமையை விலக்கி, தலைவன் தலைவியிருவரிடையே அமைந்த காதல் மிகுதியுட்படத் தலைமகனுக்குரிய நாடு, ஊர், மனை குடியுயர்வு, பிறந்தயாண்டு, பெற்றுள்ள சிறப்பு என்பன பிறரின் ஒவ்வாது மேம்பட்டனவாதல் நோக்கித் தலைவனைக் குறித்துத் தோன்றிய கூற்றுக்களோடு கூட்டி அத்தன்மைத்தாகிய நிலைமையின் கூறுபாட்டினாலே மணந் செய்தலை வேண்டியும், தலைவியின் சுற்றத்தார் மகட்கொடுப்பதாக உடன்பட்ட தலைவனை விரைந்து மணந்துகொள்க எனத் தூண்டுதற் கண்ணும்”[19] வெளிப்படும் தோழியின் கூற்றுகள் வரைவு கடாதற் செய்திகளைப் பெரும்பான்மையும் மையமாகக் கொண்டு அமைந்துள்ளன.

## வரைவுகடாதல் துறையில் அமையும் கூற்று முறைகள்

இதன் பின்னர், பொருளியலில் காணப்படும் ஒரு நூற்பா தோழி கூற்றுகளைத் தொகுத்துணர்த்தும் மேற்கூறப்பட்ட களவியல் நூற்பாவில், ‘ஆற்றது தீமை அறிவுறு கலக்கம்’ முதல் ‘அனைநில வகையான் வரைதல் வேண்டினும்’ என்பது வரை கூறப்பட்ட சில கிளவிகளுக்குப் பயன்

உணர்த்தும் முறையில் அமைந்துள்ளது என்பார் இளம்பூரணர். அந்நூற்பாவானது,

*“பொழுதும் ஆறுங் காப்புமென் றிவற்றின்*
*வழுவி னாகிய குற்றங் காட்டலும்*
*தன்னை யழிதலும் அவனூறு அஞ்சலும்*
*இரவினும் பகலினும் நீவா வென்றலுங்*
*கிழவோன் தன்மை வாரல் என்றலும்*
*நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்*
*புரைபட வந்த அன்னவை பிறவும்*
*வரைதல் வேட்கைப் பொருள என்ப”*

**(தொல்.பொருள்.பொ.இ.நூ.15)**

“களவொழுக்கத்து தலைமகன் வரும் காலமும் வழியும் ஊரிடை உளதாம் காவலும் ஆகியவற்றைத் தப்பியொழுகலால் உளதாகுந் தீமைகள் எடுத்துக் காட்டலும், தான் நெஞ்சழிந்து கூறுதலும், தலைமகனுக்கு உண்டாகும் இடையூற்றினைக் கூறுதலும், தலைவனைப் பகற்குறி விலக்கி இரவில் வருக என்றலும், இரவும் பகலும் இங்கு வாராதொழிக எனக் கூறுதலும், நன்மையாகவும் தீமையாகவும் பிறபொருளை யெடுத்துக் காட்டலும், பிறவுமாக இங்ஙனம் தலைவனது உயர்ச்சிகெடத் தோழி கூறுஞ் சொற்கள் யாவும் தலைமகட்குத் தலைமகன்பால் விருப்பமின்மையாற் கூறப்பட்டன அல்ல. தலைமகளை அவன் விரைவில் மணந்து கொள்ளுதல் வேண்டும் என்னும் வேட்கையினைப் பொருளாகவுடைய சொற்களாகும்”[20] என இந்நூற்பாவிற்குப் பேராசிரியர் வெள்ளைவாரணனார் தரும் விளக்கம் வரைவுடாதல் என்னும் துறையின் அமையும் கூற்று முறைகளை வரையறுப்பதாய் உள்ளது.

தோழிக்கும் தலைவிக்கும் உரியதோர் இயல்பு உணர்த்தும் பொருளியலின் வேறொரு நூற்பாவில்,

*“வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்*
*மரீஇய மருங்கின் உரித்தென மொழிப”*

(தொல்.பொருள்.பொ.இ.நூ.16.)

என வரைவு கடாதல் செய்தி இடம்பெறுகின்றது.

தலைவன் களவொழுக்கத்தை நீட்டித்து ஒழுகிய நிலையில், அவனது வேட்கையை மறுத்துத் தலைவியை மணந்து கொள்ளுதல் வேண்டும் என்னும் தம் உள்ளக் கருத்தினை அவ்விடத்துள்ளவாறு எடுத்துரைத்தலும் தோழிக்குரியதோர் இயல்பாகும் என்பதை இந்நூற்பா உணர்த்துகிறது. களவொழுக்கத்தை விடுத்து விரைவில் மணந்து கொள்ளுதல் வேண்டும் என்னும் உறுதியான இறுதியான தம் உள்ளக் கருத்தை மறைக்காது, மனத்திற்பட்டவாறே வெளிப்படுத்தித் தோழி தலைவனை வரைவுகடாவும் திறனுடையவள் என்பதை இந்நூற்பாவில் வரும் ‘கிளத்தாங் குரைத்தல்’ என்ற தொடர் நுட்பமாகக் கொண்டுள்ளது.

## இறையனாரகப் பொருள் உரை கூறும் வரைவுகடாதல் செய்திகள்

### களவில் தலைவனுக்கு நேரும் இடையூறுகள்

இறையனார் களவியலில் களவுக் காலத்தில் தலைமகனுக்கு நேரும் இடையூறுகள் பற்றிக் கூறும் நூற்பாவில்,

*“களவினுள் தவிர்ச்சி காப்புமிகின் உரித்தே*
*வரைவிடை வைத்த காலை ஆன”* (இறை.களவு.நூ.16)

என்று தொடங்கி, **‘களவினுள் தவிர்ச்சி’** என்பது களவுக் காலத்துத் தலைமகள் புணராது இடையிடும் இடையீடு, தலைமகளை எய்தாத நாளெனினும் ஒக்கும். **‘காப்பு மிகின் உரித்தே’** என்பது காப்பு மிக்க வழியும் உரித்து; **‘வரைவிடை வைத்த காலை ஆன’** வரைவிடை வைத்த காலத்து

என்பது கண்ணும் உரித்து. **'காப்பு'** என்பது தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், கூகை குழறல், கோழி குரற்காட்டல் என இவையாம்.

**'மிகுதல்'** என்பது பெருகுதல்; அஃது ஒன்று பன்னாளும் வருதலும், பல மயங்கி வருதலும், முறையில் தோன்றுமென இத்திறத்தான் ஆமென்பது.

அவற்றுள் **'தாய் துஞ்சாமை'** என்பது தலைமகன் இரவுக் குறி வந்து ஒழுகா நின்ற காலத்து ஒருநாள் தாய் கண்படாளாகி மகளை அறிவும் ஆசாரமும் கற்பித்தற் பொருட்டாக இருக்கும். இருந்தக்கால் அதுவும் இடையீடாம்.

**'நாய் துஞ்சாமை'** என்பது வழியறி ஞமலி பட்டதற்கொல்லாம் எப்பொழுதுங் குரைத்தகால் அதுவும் ஆகாதன்றே. என்னை கொல்லோ இவ்விடத்துப் பல்காலுங் குரையாநின்றதென ஆராய்ச்சி வரும். அதனால் இடையீடாம்.

**'ஊர் துஞ்சாமை'** என்பது ஊர் கொண்ட பெருவிழா நாளாய்க் கண்பாடில்லையாம் அதுவும் இடையீடாம் என்பது, அவை மதுரை ஆவணி அவிட்டமே, உறையூர்ப் பங்குனி உத்திரமே, கருவூர் உள்ளிவிழாவே என இவை போல்வன. பிறவும் எல்லாம் அப்பெற்றியான பொழுதும் இடையீடாம்.

**'காவலர் கடுகுதல்'** என்பது காவலர் என்பார் காப்பாளர். ஊர்காத்தல் இடங்காத்தலென இவற்றைக் கடிதுகாத்து மென்று காவலாளர் ஏமஞ்சூழ்ந்து கைவிளக்கினொடு திரிவாரன்றே அப்பெற்றியான பொழுதும் இடையீடாம்.

**'நிலவு வெளிப்படுதல்'** என்பது நிலாப் பகல்போலும் பெற்றித்தாய் ஞாயிறு பட்டவாறே எழுந்து, ஞாயிறு எழுந்துணையும் விளக்கினஞான்றும் இடையீடாம்''[21] என்று இறையனார் அகப்பொருள் உரையாசிரியர்

இந்நூற்பாவிற்கு மேலும் விளக்கம் கூறித் தலைவனுக்கு நேரும் களவுக்கால இடையீடுகளை உணர்த்துவார். இதனையடுத்த,

*"அல்லகுறிப் படுதலு மவ்வயின் உரித்தே*
*அவன்வர வறியும் குறிப்பின் ஆன"* (இறை.களவு.நூ.17)

எனும் சூத்திரமும் களவினுள் இடையீடு பற்றிக் குறிப்பிடுகிறது.

"தலைமகன் இரவுக்குறி வந்து ஒழுகா நின்ற காலத்து ஒரு நாள், தலைமகன் செல்லாமே அவனாற் செய்யப்படுங் குறிப்புகள் தாமே வெளிப்பட்டன. அவை புன்னைக்காய் நீரிலிடுதலும், புள் எழுப்புதலும் எனவாகும்.

அவை வேறாய் நிகழுமாறு; புன்னைக்காய் மூக்கு ஊழ்த்தும் விழும், வளி எறியவும் விழும். புள் துளக்கவும் விழும். புள் எழும்புமிடத்து வெருவியும் எழும், வேற்றுப்புள் வரவும் எழும்.

இவை கண்டு இவனின் ஆயின என கருதிக் கொண்டு போந்து, அவ்விடம் புகுந்து பின்னை, அவன் வந்த அக்குறி செய்யும், செய்தக்கால் இரண்டாவது கொண்டு போகல் ஆகாதன்றே; என்னை, 'சிறிது முன்னாகப் போனேரன்றே, அக்கை புடைபெயராமைப் போகின்றார்' என்று உற்றார் பின்னின்று ஆராய்தலான் என்பது. அகத்தினின்று, 'நின்னின் ஆகாதன கண்டு வந்து நின்று பெயர்ந்தோம் என்பதனை அவனுக்கு உரைத்து, திங்கண் மேலிட்டாலும் அன்னத்தின் மேலிட்டாலும் ஓதத்தின் மேலிட்டான்' என்பது"[22] என்று களவில் நேரும் இடையூற்றினை இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் விளக்கியுள்ளார்.

## குறி பற்றி இறையனாரகப் பொருள் தரும் செயதிகள்

இறையனார் அகப்பொருள் குறி பற்றி குறிப்பிடும்போது,

*“குறியெனப் படுவது இரவினும் பகலினும்*
*அறியக் கிளந்த விடமென மொழிப”* (இறை.களவு.நூ.18)

என்ற நூற்பாவின் வழி ‘‘குறியெனப்படுவது குறியென்று சொல்லப்படுவது, இரவினும் பகலினும் என்றாராயினும் மொழிமாற்றிப் பகலின் கண்ணும் இரவின் கண்ணுமெனக் கொள்ளலாம். என்னை? பகற்குறி நிகழ்ந்த பின்னை இரவுக்குறி நிகழும். அவ்வொழுக்கம் நிகழ்ந்தமுறையான் நோக்கி மொழி மாற்றுச் சூத்திரமாகப் பொருள் உரைக்கப்படும். அஃதேயெனின் ‘குறியெனப்படுவது பகலினும் இரவினும் என அமையாதோ என்ப கடா, அதை விடை, அவ்வொழுக்கம் மறைத்தலைத் தனக்கு இலக்கணமாக உடைத்தாகலான் இரவுக்குறி பொருந்திய துணைப் பகற்குறி பொருந்திற்றன்று என்பதனை உணர்த்தும் பொருட்டுச் சூத்திரத்துள் இரவினும் பகலினும் என இரவுக்குறி முன் வைக்கப்பட்டது. அறியக் கிளந்த இடமென மொழிப உணரச் சொல்லப்பட்ட இடமென்ப’’[23] என்று இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் குறி பற்றி விளக்குவார்.

**இரவுக்குறி**

இரவுக் குறி என்பது இரவின் கண் நிகழும் என்பதை,

*“இரவுக் குறியே இல்வரை யிகவாது”* (இறை.களவு.நூ.19)

இரவுக்குறி என்பது இரவுக் காலத்தில் சந்திக்கும் இடமாகும். இது வீட்டின் (இல்) இடத்தை விட்டு நீங்காது என்று உரையாசிரியர் இலக்கணம் வகுத்துள்ளார்.

**பகற்குறி**

பகற்குறி பற்றி இறையனாரகப் பொருள் கூறும்போது,

*“பகற்குறி தானே இகப்பினும் வரையார்”*

(இறை.களவு.நூ.20)

தலைவனும் தலைவியும் பகலில் சந்திக்கும் இடமாகும். 'இகப்பின் வரையார்' இகந்து படினுங் குற்றங் கூறார் என்றவாறு, "இகத்தலென்பது ஒன்றின் இறத்தலென்றவாறு, இகத்தலெனினும் இறத்தலெனினும் ஒக்கும். ஒன்றின் இறத்தலென்பது பலவாதலென்றவாறு. ஒருஞான்று வேங்கைப் பொதும்பினுள் ஆம், ஒருஞான்று கோங்கம் பொதும்பினுள் ஆம், குறிஞ்சி நிலமாயின் ஒருஞான்று புன்னையங்கானலுள் ஆம், ஒருஞான்று கைதையங்கானலுள் ஆம். நெய்தனிலமாயின் இவ்வகை ஏனைய நிலத்திற்கும் ஒக்குமாறு அறிந்து உரைக்க"[24] எனப் பகற்குறி இலக்கணம் தொகுத்துள்ளார் இறையனாரகப் பொருள் உரையாசிரியர்.

**அம்பல், அலர்**

இறையானார் அகப்பொருள் உரையாசிரியர் அம்பல், அலருக்கு இலக்கணம் கூறுமிடத்து,

***"அம்பலும் அலரும் களவு"*** **(இறை.களவு.நூ.22)**

களவொழுக்கினது நெடுங்காலச் செலவின்கண் இருவருக்கும் நிகழும் உள்ள நிகழ்ச்சி இன்னதென்று உணர்த்துதல் ஆகும். இதன் பொருள் **அம்பலும் அலருங் களவு** – இவ்விரண்டும் நிகழ்ந்தனவென்பது தாம் அறியினல்லது யாவரும் அறிவாரில்லை. இன்மையின் அவை களவு என்றவாறு.

களவென்பது செய்தாரே அறிந்து மற்றொருவர் அறியதாகலான் என்பதாகும். அம்பலென்பது முகிழ்த்தல், அலரென்பது சொல்நிகழ்தல், அம்பலென்பது இல் அறிதல்; அலரென்பது அயல் அறிதல்; அம்பலென்பது அயல் அறிதல்; அலரென்பது சேரி அறிதல்; அம்பலென்பது சேரி அறிதல்; அலரென்பது ஊர் அறிதல்; அம்பலென்பது ஊர் அறிதல், அலரென்பது நாடு அறிதல்; அம்பலென்பது நாடு அறிதல்; அலரென்பது தேசம் அறிதல் அது

பொருந்தாது; என்னை? அம்பலெனப்பட்டதே அலரும், அலரெனப்பட்டதே அம்பலுமாயின. இஃது அம்பற்கு இலக்கணமும், இஃது அலருக்கு இலக்கணமுமென்று விசேடற் காட்டிற்றிலர். இவை இரண்டால் தம்முள் வேற்றுமை பெறப்படுமாகலான் என்பது. மற்றென்னோ எனின், அம்பலென்பது சொல் நிகழாதே முகிழ் முகிழ்த்துச் சொல்வதாயிற்று. இன்னதின் கண்ணதென்பது அயல் அறியலாகாதென்பது. அலரென்பது இன்னானோடு இன்னாளிடை அதுபோலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது. அலரென்பது அப்பெரும்போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற்போல நிற்கும் நிலைமையென வேற்றுமை சொல்லபட்டதாம். தாம் நெடுங்காலம் இவ்வொழுக்கத்தை ஒழுகினாராதலான் வேறுநின்று தங்கருமம் உசாவுவாரை உணர்ந்து இத்தன்மையத்து இவர் ஆராய்வது இது போலுமென்று கருதுப. தம்மனத்து ஒரு கோட்டமுடையார் அப்பெற்றியே கருதுவது உலகத்தன்மை. இவ்வொழுக்கம் பிறர்க்குப் புனலாகாதன்றே தெய்வத்தினான் ஆயதாகலான். அம்பலும் அலரும் எவ்விடத்து நிகழுமோவெனின் காப்பு கைம்மிக்க இடத்து நிகழும்''[25] எனக் களவு என்னும் விளக்கத்திற்கு இறையனாரகப் பொருள் உரையாசிரியர் தொகுத்துரைத்துள்ளார்.

### வரைவுகடாவும் இலக்கணம்

வரைவு கடாவும் இலக்கணமெல்லாம் தொகுத்துச் சொல்லும் விரிவான சூத்திரம் ஒன்றும் இவ் இறையனாரகப் பொருள் பொருளில் காணப்படுகின்றது.

*"காமம் மிக்க கழிபடர் கிளவியும்*
*காப்புச் சிறைமிக்க கையறு கிளவியும்*
*ஆறுபார்த் துற்ற அச்சக் கிளவியும்*
*இரவினும் பகலினும் நீவரு கென்றலும்*
*கிழவோன் தன்னை வாரல் என்றலும்*
*தன்னுள் கையா றெய்திடு கிளவியும்*

*அன்ன மரபின் பிறவும் தொகைஇத்*
*தன்னை அழிந்த கிளவி எல்லாம்*
*வரைதல் வேட்கைப் பொருள வென்ப”*

(இறை.களவு.நூ.30)

வரைவு கடாவும் இலக்கணம் கூறும் இந்நூற்பாவில் மேலும் களவு நீக்கிக் கற்பாவதோர் இலக்கணமும் உணர்த்தியுள்ளார்.

“**காமம் மிக்க கழிபடர் கிளவியும்** – **காமமெ**ன்பது வேட்கை; **மிகுத**லென்பது பெருகுதல், **கழி**யென்பது சிறத்தல்; **படர்** என்பது நினைத்தல்; **கிளவி**யென்பது சொல்; வேட்கைமிக்குச் சிறப்ச் சிந்தித்துச் சொல்லுஞ் சொல்லும்; **காப்புச் சிறைமிக்க கையறு கிளவியும்** என்பது – காப்புச்சிறைமிகவினாற் கையற்றுச் சொல்லும் சொற்களும், **ஆறு பார்த்துற்ற அச்சக் கிளவியும்** என்பது அவன் வரும் வழியது ஏதம் சிந்தித்து ஆற்றாளாயச் சொல்லும் சொற்களும்; **இரவினும் பகலினும் நீ வருக என்றலும்** என்பது இரவின் கண்ணும், பகலின் கண்ணும் நீயிர் வந்து ஒழுகுவதாகாதோ எனச் சொல்லும் சொற்களும்; **கிழவோன் தன்னை வாரல் என்றலும்** என்பது தலைவனை இரவின் கண்ணும் பகலின் கண்ணும் வரவேண்டா என்று சொல்லும் சொற்களும், **தன்னுள் கையாறு எய்திடு கிளவியும்** என்பது தன்னுட் கையாற்றினை ஏதிலது ஒன்றின் மேலிட்டுச் சொல்லும் சொற்களும். **அன்ன மரபிற்பிறவும் தொகைஇ** என்பது அன்ன இலக்கணத்த பிறவுந் தொகுத்து; **தன்னை அழிந்த கிளவி எல்லாம்** என்பது. தன்னாற்றாமையாற் சொல்லுஞ் சொல் என்றவாறு: **வரைதல் வேட்கைப் பொருள வென்ப** என்பது வரைதல் வேட்டுச் சொல்லுஞ் சொல் என்றவாறு”[26] என வரைவு கடாவும் இலக்ககணமெல்லாம் தொகுத்து விளக்கியுள்ளார் இறையனாரகப்பொருள் உரையாசிரியர்.

## நம்பி அகப்பொருள் தரும் வரைவுகடாதற் செய்திகள்

## களவு வெளிப்படும் முன்

நாற்கவிராச நம்பி இயற்றிய "அகப்பொருள் விளக்கம்" எனும் நூலில் களவு வெளிப்படுவதற்கு முன்னர் நிகழும் வரைவிற்கு இலக்கணம் கூறுமிடத்து வரைவு கடாதலின் இலக்கணம் சொல்லபடுகின்றது.

*"நான்கு வகைப் புணர்வினும் தானதெருண்டு வரைதலும்*
*பாங்கனிற் பாங்கியின் தெருளுற்று வரைதலும்*
*களவு வெளிப்படா முன் வரைதலாகும்"*

**(நம்பி.அகத்.நூ.43)**

"களவொழுக்கத்தில் கூறப்பட்ட நான்குவகையான புணர்ச்சிக் கண்ணும் அவ்வொழுக்கம் வெளிப்படுவதன் முன்னர் நிகழும் வரைவு, தலைமகன் தானே உணர்ந்து முன்வந்து கொள்ளுதல், பாங்கனால் உணர்ந்து முன்வந்து கொள்ளுதல், பாங்கியால் உணர்ந்து முன்வந்து கொள்ளுதலுமாகிய அவை, களவு வெளிப்படா முன் வரைவாம்"[27] என்ற பொருளுடைய இந்நூற்பாவில் பாங்கியால் தெருட்டப்பட்டு வரைதல் என்ற குறிப்பு, தோழி தலைவனை வரைவு கடாதலைச் சுட்டுகிறது. இந்நூலின் களவியல் பகுதியில்,

*"இயற்கைப் புணர்ச்சி வன்புறை தெளிவே*
*பிரிவுழி மகிழ்ச்சி பிரிவுழிக் கலங்கல்*
*இடந்தலைப் பாடு பாங்கற் கூட்டம்*
*பாங்கிமதி யுடம்பாடு பாங்கியிற் கூட்டம்*
*பாங்கமை பகற்குறி பகற்குறி இடையீடு*
*இரவுக் குறியே இரவுக்குறி இடையீடு*
*வரைவு வேட்கை வரைவு கடாதல்*
*ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்*
*பொருள்வயிற் பிரிதலென் றொருபதி னேழுங்*
*களவிற் குரிய கிளவித் தொகையே" (நம்பி.களவு.நூ.123)*

எனக் களவென்னும் கைகோளிற்கு உரிய கிளவித்தொகை பதினேழு என உணர்த்தும் இந்நூற்பாவில் 'வரைவுகடாதல்' என்னும் சொற்குறிப்புக் காணக் கிடக்கின்றது.

தலைவியைச் சந்திக்க தலைவன் பலகாலம் வருவான். பல குறிகளை அமைப்பான். அவை பகற்குறியாகவும், இரவுக் குறியாகவும் அமையும். அக்குறிகள் இடையீடுபடுதல் உண்டு. இவ்விடையீட்டின் உட்பொருள் வரைவு கடாதலையே காரணமாகக் கொண்டிருக்கும்.

நாற்கவிராச நம்பி கூறும் பகற்குறி இடையீடு, இரவுக்குறி இடையீடு தலைவன் வரும் செயலில் ஏற்படும் இன்னல்கள், வரைதல் வேட்கை, போன்றவையும் வரைவுகடாதல் என்னும் துறைக்குத் துணையாக அமைவனவே ஆகும். எனவே அவற்றிற்குரிய நம்பி அகப்பொருள் நூற்பாக்களும், விளக்கங்களும் இப்பகுதியில் எடுத்துக் காட்டப்படுகின்றன.

### பகற்குறி இடையீடு - அதன் வகையைக் கூறுதல்

நாற்கவிராச நம்பி இடையீட்டின் வகையினைக் கூறுங்கால்,

***"விலக்கல் சேறல் கலக்கம் என்றாங்கு***
***இகப்பின் மூவகைத்தே பகற்குறி இடையீடு"***

(நம்பி.களவு.நூ.155)

என்று விலக்கலும், சேறலும், கலக்கமும் என மூன்று வகையினை உடையது பகற்குறி இடையீடு என்பார்.

### பகற்குறி இடையீட்டின் விரி

மேலும் அவர் பகற்குறி இடையீட்டின் விரியினைக் கூறுங்கால்,

***"இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலும்***
***இறைவியைக் குறிவரல் விலக்கலும் இறைமகள்***

*ஆடிடம் நோக்கி அழிதலும் பாங்கி*
*ஆடிடம் விடுத்துக்கொண் டகறலும் பின்னாள்*
*நெடுந்தகை குறிவயின் நீடுசென் றிரங்கலும்*
*வறுங்களம் நாடி மறுகலும் குறுந்தொடி*
*வாழுமூர் நோக்கி மதிமயங் கலுமெனும்*
*ஏழும் பகற்குறி யிடையீட்டு விரியே"* (நம்பி.களவு.நூ.156)

என்கிறார்.

தலைவன் தலைவியைக் குறியிடத்தில் காண வருங்கால் தோழி அக்குறியை விலக்கல், தலைவியே குறியை விலக்கல், தலைவி தோழியரோடு விளையாடுமிடம் நோக்கி இரங்கல், தோழி அவளை விளையாடுமிடம் விடுத்து அகறல், சிலபொழுது தலைவன் குறிவயின் சென்று காணாது இரங்கல், அவன் வெற்றிடம் நோக்கி மறுகல், தலைவி வாழும் ஊர் நோக்கி மனக் கலக்கம் அடைதல் எனும் இவை இந்நூற்பாவில் பகற்குறியின் இடையீடுகளாக விரித்துச் சொல்லப்படுகின்றன.

இவ்வேழனுள் "முன்னைய இர்ண்டும் விலக்கற்குரிய, பாங்கி விளையாடுமிடம் விடுத்துக் கொண்டு அகறலாகிய ஒன்றும் சேறற்குரித்து ஏனைய நான்கும் கலக்கத்திற்குரிய"[28] எனப் பகற்குறி இடையீட்டு விரிவில் இத்தனை பிரிவுகளை அமைந்துள்ளார் இந்நூலின் உரையாசிரியர்.

## இரவுக்குறி இடையீடு வகை

நாற்கவிராச நம்பி இரவுக்குறி இடையீட்டின் வகையினைக் கூறும்போது,

*"அல்லகுறி வருந்தொழிற்கு அருமை என்றாங்கு*
*எல்லிக்குறி இடையீடு இருவகைத்து ஆகும்"*
(நம்பி.களவு.நூ.159)

என்று அல்லகுறியும், வருந்தொழிற்கு அருமையும் என இருவகையினை உடையது இரவுக்குறி இடையீடு என்பார்.

**அதன் விரி**

அல்ல குறியில் கூறப்படும் 11 செய்திகளும் வருந்தொழிற்கு அருமையிற் கூறப்பெறும் ஏழு செய்திகளும் இரவுக்குறி இடையீட்டின் விரிவாய் அமைந்துள்ளன.

*"இறைவிக்கு இகுளை இறைவரவு உணர்த்துழித்*
*தான்குறி மருண்டமை தலைவிஅவட்கு உணர்த்தலும்*
*பாங்கி தலைவன் தீங்குஎடுத்து இயம்பலும்*
*புலந்துஅவன் போதலும் புலர்ந்தபின் வறுங்களம்*
*தலைவிகண்டு இரங்கலும் தன்துணைக்கு உரைத்தலும்*
*தலைமகள் அவலம் பாங்கி தணித்தலும்*
*இறைவன் மேல்பாங்கி குறிபிழைப்பு ஏற்றலும்*
*இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பு ஏற்றலும்*
*அவள்குறி மருண்டமை அவள்அவற்கு இயம்பலும்*
*அவன்மொழிக் கொடுமைசென்று அவள்அவட்கு இயம்பலும்*
*என்பிழைப்பு அன்றென்று இறைவிநோ தலும்என*
*ஒன்றுபன் ஒன்றும் அல்லகுறிக்கு உரிய"*

(நம்பி.களவு.நூ.160)

தலைவிக்குத் தோழி தலைவன் வருகை உணர்த்தல், தலைவி தான் இரவுக்குறியினால் மருண்டமையைத் தோழிக்கு உணர்த்தல், தோழி தலைவன் வருதலில் ஏற்படும் தீங்கினை எடுத்துச் சொல்லல், அவன் ஊடல் கொண்டு செல்லல், அவன் சென்றபின் தலைவி அவ்வெறுங்களம் நோக்கி வருந்துதல், தன் துணையாகிய தோழியிடம் உரைத்தல், அத்தலைவியின் அவலத்தைத் தோழி தணித்தல், தலைவன் தவறான குறியிடத்தைச் சொன்னான் எனத் தோழி அவன்மீது குறை காணல், தலைவி தவறான

குறியிடம் வந்தாள் என அவள்மேல் தலைவன் பிழை காணல், தலைவி குறி மருண்டமை காரணத்தால் குறிபிழைத்தாள் எனத் தோழி தலைவனிடம் விளக்கல், தலைவியைக் காணா நிலையில் அவன் வருந்திக் கூறிய சொற்களைத் தலைவியிடம் சென்று தோழி கூறல், என் பிழையன்று எனத் தலைவி வருந்துதல் எனும் இவை பதினொான்றும் அல்லகுறிக்கு உரியனவாகும்.

### வருந்தொழிற்கருமை

*"தாயும் நாயும் ஊரும்துஞ் சாமை*
*காவலர் கடுகுதல் நிலவுவெளிப் படுதல்*
*கூகை குழறுதல் கோழிகுரல் காட்டுதல்*
*ஆகிய ஏழும் அல்லுகுறித் தலைவன்*
*வருந் தொழிற்கு அருமை பொருந்துதல் உரிய"*

(நம்பி.களவு.நூ.161)

தாய் உறங்காது விழிதிருத்தல், நாய் துயில் கொள்ளாது விழித்திருத்தல், ஊர் மக்கள் தூங்காமல் விழித்திருத்தல், ஊர்காவலர் விழிப்புடன் காவல் தொழில் செய்தல், நிலவு வெள்ளிய ஒலியுடன் தோன்றுதல், உரத்த குரலில் கூகை குழறுதல், சாமக்கோழியும் குரல் காட்டுதல் என்ற இவ்வேழு செயல்களால் தலைவன் வரும் செயல் தடைப்படுத்தப்படுகின்றது.

### வரைதல் வேட்கை

தலைமகன் தலைமகளைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்னும் வேட்கையை விளம்புதல். அகப்பொருள் விளக்கத்தில் வரைதல் வேட்கையின் வகை, விரி இவற்றிற்கு அமைந்த நூற்பாக்களை ஆராயுங்கால் வரைவு கடாதலுக்குத் துணைநிற்கின்றன.

### வரைதல் வேட்கையின் வகை

*“அச்சம் உவர்த்தல் ஆற்றா மையென*
*மெச்சிய வரைதல் வேட்கைமூ வகைத்தே”*

(நம்பி.களவு.நூ.163)

வரைதல் வேட்கை அச்சம், உவத்தல், ஆற்றாமை என மூன்று வகையினை உடையது.

**அச்சம்** என்பது தலைமகள் தலைமகனை எய்துதற்கு இடையூறான நிகழ்ச்சிகள் உண்டாகத் தலைமகள் அஞ்சுதல். **உவர்த்தலெ**ன்பது தோழி தலைமகனை வெறுத்துக் கூறுதல். **ஆற்றாமை**யென்பது தலைமகன் குறியிடத்து வாராமையைத் தலைமகள் பொறாமல் வருந்துதலேயாகும்.

### அதன் விரி

*“பருவரல் வினவி பாங்கிக்கு இறைவி*
*அருமறை செவிலி அறிந்தமை கூறலும்*
*தலைமகன் வருந்தொழிற்கு அருமை சாற்றலும்*
*தலைமகன் ஊர்க்குச் செலவு ஒருப்படுதலும்*
*பாங்கி இறைவனைப் பழித்தலும் பூங்கொடி*
*இறையோன் தன்னை நேர்ந்தியற்பட மொழிதலும்*
*கனவுநலி புரைத்தலும் கவினழிபு உரைத்தலும்*
*தன்துயர் தலைமகற்கு உரைத்தல் வேண்டலும்*
*துன்புறல் பாங்கி சொல்லெனச் சொல்லலும்*
*அலர்பார்த்து உற்ற அச்சக் கிளவியும்*
*ஆறுபார்த்து உற்ற அச்சக் கிளவியும்*
*காமமிக்க கழிபடர் கிளவியும்*
*தன்னுட் கையாறு எய்திடு கிளவியும்*
*நெறிவிலக்கு வித்தலும் குறிவிலக்கு வித்தலும்*
*வெறிவிலக்கு வித்தலும் பிறவிலக்கு வித்தலும்*
*குரவரை வரைவுஎதிர் கொள்ளுவித் தலும்என*

*உரைபெற வகுத்த ஒன்பதிற்று இரட்டியும்*
*வரைதல் வேட்கை விரியெனப் படுமே"* (நம்பி.களவு.நூ.164)

தலைவியின் இன்னலுக்குரிய காரணத்தைத் தோழி வினவக் களவியல் மறையைச் செவிலி அறிந்தாள் எனக் கூறல், தலைவன் வரும் வழியின் இன்னல்கள் கூறல், அவன் தன் ஊர் செல்ல ஒருப்படுதல், தோழி அவனைப் பழித்தல், தலைவி தலைவனின் நல்லியல்புகளை இயற்பட மொழிதல், கனவினால் தான் நலிவடைதல், தன் கவின் அழிதல், தன் துயரைத் தலைவனிடம் சென்று உரைக்குமாறு தலைவி தோழியை வேண்டல், தோழி 'உன் குறையே நீயே தலைவனிடம் கூறுக' என்றல், ஊரினுள் பரவிய அலர் கேட்டு தலைவியின் அச்சம் தலைவன் கடந்து வரும் காட்டுப் பாதையின் கொடுமையால் நேரிடும் அச்சம், காமம் மிக அதனால் பசலை மலிய அவை பற்றி கூறும் அச்சம், தலைவி தன்னுள் தானே தன்னை நொந்து கூறல், தலைவன் வரும் பாதை மாறல் வேண்டும் எனக் கூறல், பயிலப்பட்ட குறியால் தடை நேருமோ என அஞ்சிப் பிறிதொரு புதிய குறியை அறிவிக்குமாறு வேண்டல், வெறியாட்டு நடைபெறா வண்ணம் விலக்குவித்தல், (நொதுமலர் வரைவு, தமர் பழித்தலை விலக்குதல் போன்ற) பிற விலக்குவித்தல், தலைவி தனது தாய், தந்தை, தமர் போன்றோரை விரும்பிய தலைவனையே மணப்பதற்கு உரிய செயல்களில் ஈடுபடச் செய்தல் ஆகிய இவை பதினெட்டும் வரைதல் வேட்கைக்குரியனவாக எடுத்துக் காட்டப்படுகின்றன.

வரைதல் வேட்கையின் வகையாய் அமைந்த அச்சம், உவத்தல், ஆற்றாமை எனும் மூன்று இயல்புகளும், இவற்றின் விரியால் அமைந்து மேற்கண்ட 18 செயல்களும் வரைவுகடாதலுக்குத் துணைபுரிகின்றன.

**வரைவுகடாதலின் வகையும் விரியும்**

நம்பி அகப்பொருள் களவியலில் 'வரைவுகடாதல்' என்ற தலைப்பில் நூற்பாக்கள் காணப்படுகின்றன. அவற்றுள் வரைவுகடாதலின் வகையாக அமையும் முதல் நூற்பாவில்

*"பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தல் என்று*
*ஒருநால் வகைத்தே வரைவு கடாதல்"* (நம்பி.களவு.நூ.165)

எனப் பொய்த்தல், மறுத்தல், கழறல், மெய்த்தல் என நான்கு வகைகள் வரைவு கடாதலுக்குக் கூறப்பட்டுள்ளன.

**அதன் விரி**

வரைவு கடாதலின் விரியாக அமையும் நுற்பாவில்,

*"வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பலும்*
*அலரறி வுறுத்தலும் தாய் அறிவு உணர்த்தலும்*
*வெறிஅச் சுறுத்தலும் பிறர்வரைவு உணர்த்தலும்*
*அறிவுஅறி வுறுத்தலும் குறிபெயர்த் திடுதலும்*
*வரைவுஎதிர் உணர்த்தலும் வரையுநாள் உணர்த்தலும்*
*பகல்வரு வானை இரவு வருகஎன்றலும்*
*இரவுவரு வானைப் பகல்வருக என்றலும்*
*பகலினும் இரவினும் பயின்றுவருக என்றலும்*
*பகலினும் இரவினும் அகல்இவண் என்றலும்*
*உரவோன் நாடும் ஊரும் குலனும்*
*மரபும் புகழும் வாய்மையும் கூறலும்*
*ஆறுபார்த்து உற்ற அச்சம் கூறலும்*
*ஆற்றாத் தன்மை ஆற்றக் கூறலும்*
*காவல் மிகஉரைத்தலும் காமமிக உரைத்தலும்*
*கனவுநலி வுரைத்தலும் கவின் அழிவு உரைத்தலும்*
*எனமுறை நாடி இயம்பிய இருபதும்*
*வரைவு கடாதல் விரியெனப் படுமே"* (நம்பி.களவு.நூ.166)

தலைவியின் உடல்நிலையில் ஏற்படும் மாற்றங்களைக் கண்டும் அவள் கண் துயிலாமைக் கண்டு செவிலி வினவ, அவளிடம் இக்களவுச் செய்தியை மறைத்தமை பற்றித் தலைவனுக்குத் தோழி சொல்லுதல், அயலார் வீடுதோறும் கொழுந்து விட்டுப் படர்ந்து மலர்ந்த அம்பல் அலர் பற்றி கூறுதல், தாய் மகளின் மாற்றங்களை அறிந்தமை பற்றி கூறதல், வெறியாட்டு எடுக்க முயல்கிறாளென அச்சறுத்தல், நொதுமலர் வரைவு கொள்ள வருகிறார் என உணர்த்துதல், விரைவில் வேற்றுவரவு நடைபெறுமென உணர்த்துதல், வரைவிற்குரிய நாள் குறிக்கப்பட்டமையைக் கூறல், தலைமகள் அறிவு சார்ந்தவள் எனத் தலைவனுக்கு அறிவுறுத்தல், மாறுபட்ட குறியைக் கூறுமாறு வேண்டுதல், பகலில் வரும் தலைவனை இரவில் வா என்று கூறுதல், இரவில் வரும் தலைவனைப் பகலில் வாவெனக் கூறுதல், பகலிலும் இரவிலும் வருமாறு கூறுதல், எக்குறியிலும் வாராதே எனக் கூறுதல், தலைமகனின் நாடும், ஊரும், குலமும், மரபும், புகழும், வாய்மையும் பற்றி வாழ்த்தல், காவல் நிரம்பிய நெறியில் வாரல்என வழியின் அச்சம் கூறுதல், தலைவனைப் பிரிந்து ஆற்றாமலிருக்கும் தலைவியின் நிலை கூறி ஆற்றுவிக்க வேண்டுதல், காவல் மிகுந்த காரணத்தால் தலைவி குறியிடம் வர இயலாமை பற்றிக் கூறுதல், அதனால் அவள் காமம் மிகுதல், கனவிலே தலைவனைக் கண்டு அடைய இயலாத நிலைக்கு வருந்துதல், உண்ணாமை, உறங்காமை காரணத்தால் அவள் கவின் அழிதல் ஆகிய இவ்விருபது முறைகளும் வரைவு கடாதலின் விரியாகும் என இந்நூற்பா எடுத்துரைக்கிறது.

இவற்றுள், ‘‘வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் முதலாகப் ‘பிறர் வரைவுணர்த்தல்’ ஈறாகச் சொல்லப்பட்ட ஐந்தும் பொய்த்தற்குரியது. ‘குறிபெயர்த்திடுதல்’ முதலாகப் ‘பகலினும் இரவினும் அகலிவண்’ என்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஐந்தும் மறுத்தற்குரியது. ‘உரவோன் நாடும் ஊரும்

குலமும் மரபும் புகழும் வாய்மையும்' கூறலாகிய ஒன்று கழறற்குரியது; 'வரைவெதிர்வுணர்த்தலும், வரைவுநாளுணர்த்தலும், அறிவு அறிவுறுத்தலும், ஆறு பார்த்துற்ற அச்சங் கூறலும், ஆற்றாத் தன்மை ஆற்றக் கூறலும், காவல் மிகவுரைத்தலும், காமம் மிகவுரைத்தலும், கனவு நலிபுரைத்தலும், கவினழிபுரைத்தலுமாகிய ஒன்பதும் மெய்த்தற்குரியது''[29] என்று நம்பி அகப்பொருள் உரையாசிரியர் வரைவுகடாதல் விரியினை முன்பு கூறப்பட்ட அதன் வகைக்கு ஏற்பப் பிரித்துக் காட்டுகிறார்.

## தமிழ் நெறி விளக்கம் தரும் வரைவுகடாதல் செய்திகள்

### தோழியிற் கூட்டம் பகற்குறி

தமிழ்நெறி விளக்கத்தில் களவு காலத்தில் தலைவனுக்கு ஏற்படும் இடையூறு பகற்குறி பற்றி கூறும் நூற்பா,

*"பாங்குணர் வையுற விரந்துகுறை யுறுதலும்*
*ஆங்கவன் வினாதலு மதியுட னாக்கலும்*
*துணிதலுஞ் சேட்பட நிறுத்தலுஞ் சுட்டிய*
*தன்றி யென்றிவன் மறையே னென்றலும்*
*குறியா கூறலும் படைத்தன மொழிதலும்*
*அறியா ளென்றலு நீகூ றென்றலும்*
*நகைகொண் டாற்றலு நகாதுரை யென்றலும்*
*கையுறை யெளிமை காட்டலு மெய்யுற*
*ஒவ்வா தென்றலு மடன்மா கூறலும்*
*மற்றது விலக்கலுங் கையுறை கோடலும்*
*விழைய வுணர்த்தலு நாணொடு நீங்கலும்*
*வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தலும்*
*தழீஇக் கோடலுந் தழையேற் பித்தலும்*
*கையுறை யெதிர்ந்தமை மெய்பெற விசைத்தலும்*
*விரும்பிட முரைத்தலுங் குறியொடு நீங்கலும்*

*புனைந்து நிலையறு நிலைமை கூறலும்*
*பாங்கிகொண் டிகத்தலும் பகற்குறி யாகும்"*

(த.நெ.வி.நூ.3)

தலைமகளின் காதலைத் தெரிந்து பாங்கி உணர்தல், தலைவியின் வேறுபாடு கண்டு தோழி ஐயுறுதல், தலைமகன் இரந்து குறையுறுதல், தலைமகனைத் தோழி வினாவுதல், கவர்ந்து நின்ற தோழியை மதியுடம் படுப்பானுற்றுத் தோழியும் தலைமகளும், உடனாய வழித் தலைமகன் வினாதல், வழி பற்றி வினாதல், தலைமகனைத் தோழி ஐயுறுதல், தோழி தலைமகனைத் துணிதல். தலைமகனைச் சேட்பட நிறுத்துதல். அறியாள் போன்றது, அறியக் கூடியவள், மறையேலென்றல். தோழி தலைமகன் குறியாதது கூறல், தோழி படைத்து மொழிதல், தலைமகள் அரியளென்றல். நின்குறை நீயே கூறல் என்றல், நகை கொண்டாற்றல், நகாதுரையென்றல், யாம் உமக்கு இயையோமென்றல், கையுறை எளிமை கூறல், கையுறை எமக்குத் தகாது என்றல், தலைமகன் நிலைமையறிந்து கொள்குவனென்றல், மடலேறுவன் என்றல், மடலேற்று விலக்கல், தழையெதிர்கோடல், மெலிதாகச் சொல்லி குறை நயப்பித்தல், தோழி தழீஇக் கொண்டல், கையுறை ஏற்பித்தல், கையுறை எதிர்ந்தமை கூறல், பகற் குறியிடம் உரைத்தல், தலைமகளைக் குறிவயின் நிறுத்திப் பெயர்த்தல், தான் தோழியிற் புணர்ந்தமை உணர்த்தல், தலைமகள் நிலைமை கூறல், போன்றவை இந்நூற்பாவில் பகற்குறியின் செயல்களாக விரித்துச் சொல்லப்படுகின்றன.

### தோழியிற் கூட்டம் இரவுக்குறி

உ.வே.சா. இரவுக்குறியினைக் கூறுங்கால்,

*"காதல் மிகவின் வாய்விடு கிளவியும்*
*தோழி சிறைப்புறத் தேகிடு கிளவியும்*
*செறிப்பறி வுறுத்தலுஞ் சூளென நினைத்தலும்*
*இறப்ப நுவறலு மிருள்வர வேண்டலும்*

*மறுத்தலு நேர்தலுங் குறியிடம் வகுத்தலும்*
*நயப்ப மொழிதலு மவன்வர வுணர்த்தலும்*
*குறித்துழி யுய்த்தலும் பெயர்ச்சியொ டல்குறிச்*
*சிறைப்புற மாகச் செப்பலு நோதலும்*
*இறைப்புற மாகிய விரவுக் குறியே”*

(த.நெ.வி.நூ.4)

தலைமகள் ஆற்றாமைகண் வாய்விடு கிளத்தல், தலைமகன் சிறைப்புறமாகப் பிறிதின்மேல் வைத்துத் தோழி கூறல், குறிப்பினாள் செறிப்பறிவுறுத்தல், சிறைப்புறமாகவும், வெளிப்படையாகவும் செறிப்பறிவுறுத்தல், சூளென நினைத்தல், ஆற்றாள் என்பதுபடக் கூறல், இருள்வர வேண்டல், இரவில் வருதல் அரிதென்றல், நேர்தல் இரவுக்குறியிடம் கூறுதல், இரவுக்குறி நயப்பித்தல், இரவுக்குறி மறுத்தல், வலிதாகச் சொல்லி நயப்பித்தல், தோழி வரவு உணர்தல், தலைமகன் வரவுணர்தல், தோழி தலைமகளைக் குறிவயின் உய்த்துக் கொண்டு நீங்கல், அல்லகுறிப்படுதல், சிறைப்புறமாகச் சொல்லுதல், தலைமகன் நெஞ்சொடு நொந்தல் இந்நூற்பாவின் மூலம் இரவுக் குறியின் விளக்கத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ் நெறி விளக்கத்தின் பதிப்பாசிரியர் உ.வே.சா. வரைவுகடாதல் பற்றி கூறும்போது,

*“வருநெறி நினைந்து வார லென்றலும்*
*காப்பிடை யீட்டிற் கையறு நிலையும்*
*வருக வென்றலும் வார லென்றலும்*
*படைத்து மொழிதலுங் குடித்திறங் கூறலும்*
*அரிவையை யின்றியா ளறிந்தே னென்றலோ*
*குரியன கிளந்த பிறவுந் தொகைஇ*
*வரைவு கடாத லாகு மென்மனார்”* (த.நெ.வி.நூ.5)

என்ற நூற்பாவின் வழி அறியலாம்.

ஆறு பார்த்துற்ற அச்சக் கிளவி பற்றி கூறுதல், வரவு விலக்கல், காப்பின் இரங்கிய கையறு கிளவி பற்றி கூறுதல், இரவினும் பகலினும் நீ வா என்றல், வாராதே எனக் கூறல், படைத்து மொழிதல், குடித்திறங் கூறல், மானிட மகளாதல், இன்று அறிந்தே என்றலுமென இன்னவெல்லாம் வரைவுகடாதல் துறை என்று சொல்லுவர் புலவர் என்று இந்நூலின் பதிப்பாசிரியர் உ.வே.சா. விளக்குவர்.

## பிறநூல்கள் தரும் வரைவுகடாதல் செய்திகள்

மாறனகப் பொருள், இலக்கண விளக்கம், சுவாமி நாதம் என்ற மூன்று இலக்கண நூல்களும் வரைவுகடாதல் துறைப் பற்றி நம்பியகப் பொருள் என்ன நூற்பா கூறுகிறதோ அதையே இம்மூன்று நூல்களும் வேறுபாடு இன்றி குறிப்பிடுகிறது.

## முத்துவீரியம் கூறும் வரைவுகடாதல் செய்திகள்

முத்துவீரிய உபாத்தியாயர் பகற்குறியின் வகை பற்றிக் கூறும்போது

*“குறியிடங் கூறலு மாடிடம் படர்தலும்*
*குறியிடைச் சேறலு மிடத்துய்த்து நீங்கலும்*
*உவந்து கூறலு மொளிர்மருங் கணைதலும்*
*அறிவறி வித்தலு மவனுண் மகிழ்தலும்*
*ஆய்த் துய்த்துலுந் தோழிவந்து கூடலும்*
*ஆடிடம் புகுதலுந் தனிகண் டுரைத்தலும்*
*தடமென் முலையாற் பருவங் கூறி*
*வரவு விலக்கலும் வரைவுடம் படாது*
*மிகுத்து ரைத்தலு மெய்ம்மை யுரைத்தலும்*
*வருத்தங் கூறலும் தாயச்சங் கூறலும்*
*இற்செறி வுணர்த்தலுந் தமர்நினை வியம்பலும்*
*எதிர்கோள் கூறலு மேறுகோ ளியம்பலும்*
*ஏதிலார் தம்முரை கூறலு மவளோடு*

*கூறுவாள் போன்று தினைமுதிர்வு கூறலும்*
*பகல்வரல் விலக்கலும் பையு ளெய்தித்*
*தினையொடு வெறுத்தலும் சிறைப்புற மாக*
*வேங்கையொடு வெறுத்தலும் வெற்பமர் நாடற்குக்*
*கழுமலுற் றிரங்கலுங் கடிப்புனங் கையறக்*
*கொய்தமை கூறலும் பிரிவருமை கூறலும்*
*மயிலொடு கூறலும் வறும்புனங் காண்டலும்*
*பயில்பதி நோக்கிப் பதிமிக வாடலும்*
*சொன்னநா லெட்டுந் தோன்று மியற்கை*
*மன்னிய பகற்குறி வகையா கும்மே"*

(முத்து.பொருள்.களவு.நூ.847)

என்பது, குறியிடங் கூறல், ஆடிடம் படர்தல், குறியிடத்துக் கொண்டு சேரல், இடத்துய்த்து நீங்கல், உவந்துரைத்தல், மருங்கணைதல், பாங்கி அறிவு கூறல், உண்மகிழ்ந்துரைத்தல், ஆய்த்துய்த்தல், தோழி வந்து கூடல், ஆடிடம் புகுதல், தனி கண்டுரைத்தல், பருவங்கூறி வரவு விலக்கல், வரைவுடம்படாது மிகுத்து கூறல், உண்மை கூறி வரைவுகடாதல், வருத்தங்கூறி வரைவுகடாதல், தாயச்சங் கூறி வரைவுகடாதல், இற்செறிவறிவித்து வரைவுகடாதல், தமர் நினைவுரைத்து வரைவுகடாதல், எதிர்கோள் கூறி வரைவுகடாதல், ஏறுகோள் கூறி வரைவுகடாதல், அயலுரை வுரைத்து வரைவுகடாதல், தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதல், பகல் வரல் விலக்கி வரைவுகடாதல், தினையோடு வெறுத்து வரைவுகடாதல், வேங்கையோடு வெறுத்து வரைவுகடாதல், இரக்கமுற்று வரைவுகடாதல், கொய்தமை கூறி வரைவுகடாதல், பிரிவருமை கூறி வரைவுகடாதல், மயிலொடு கூறி வரைவுகடாதல், வறும் புனங்கண்டு வருந்தல், பதிநோக்கி வருந்தல் ஆகிய முப்பத்திரண்டும் பகற்குறியாகும் என விளக்கியுள்ளார்.

## இரவுக்குறி

வைத்தியநாத தேசிகர் இரவுக்குறியின் வகை பற்றிக் கூறுமிடத்து,

*"இரவுக்குறி வேண்டலு மாற்றருமை கூறலும்*
*நின்றுநெஞ் சுடைதலு நிலைகண்டு நோதலும்*
*உட்கோள் வினாதலு முட்கொண்டு வினாதலும்*
*குறியிடங் கூறுலுங் குறியேற் பித்தலும்*
*இரவர வுரைத்தலு மேதங் கூறலும்*
*குறைதனை நேர்தலுங் குறைநயப் புரைத்தலும்*
*மயின்மே லிசைத்து வரவுணர்ந் துரைத்தலும்*
*தாய்துயி லறிதலுங் தலைவிதுயி லெடுத்தலும்*
*இடத்துய்த்து நீங்கலும் தளர்வகன் றுரைத்தலும்*
*மருங்கனை தலோடு முகங்கண்டு மகிழ்தலும்*
*பள்ளியிடத் துய்த்தலும் பள்ளியிடத் துய்த்து*
*வரைவு கடாவி வரவு விலக்கலும்*
*வரைவுடம் படா தாற்றா துரைத்தலும்*
*அதரிடைச் செலவிற கிரக்கங் கூறலும்*
*இருளற நிலவு வெளியிப்பட வருந்தலும்*
*வேற்றுக்குறி கூறலுங் கடலிடை வைத்துத்*
*துயரறி வித்தலும் தோழியு மின்றித்*
*தானே கிடந்து தனிமையுற் றாற்றும்*
*காமமிக்க கழிபடர் கையுறு கிளவியும்*
*காப்புச் சிறை மிக்க கையறு கிளவியும்*
*ஆறுபார்த் துற்ற அச்சக் கிளவியும்*
*தன்னுட் கையா றெய்திடு கிளவியும்*
*நிலைகண் டுரைத்தலு நெடுங்கடற் சேர்த்தலும்*
*அலரறி வித்தலு மாறைந் தோடு*
*மூன்று மிரவுக் குறியென மொழிப"*

(முத்து.பொருள்.களவு.நூ.348)

என்பது இரவுக்குறி வேண்டல், வழியருமை கூறி மறுத்தல், நின்று நெஞ்சுடைதல், இரவுக்குறி நேர்தல், உட்கோள்வினாதல், உட்கொண்டு வினாதல், குறியிடங் கூறல், இரவுக்குறியேற்பித்தல், இரவரவுரைத்தல், ஏதங்குறி மறுத்தல், குறைநேர்தல், குறைநேர்ந்தமை கூறல், வரவுணர்ந்துரைத்தல், தாய் துயிலறிதல், துயிலெடுத்துச்சேறல், இடத்துய்த்து நீங்கல், தளர்வகன் றுரைத்தல், மருங்கணைதல், முகங்கண்டு மகிழ்தல், பள்ளியிடத்துய்த்தல், வரவுவிலக்கல், ஆற்றாதுரைத்தல், இரக்கங்கூறி வரைவுகடாதல், நிலவு வெளிப்படவருந்தல், அல்லகுறியறிவித்தல், கடலிடைவைத்துத் துயரறிவித்தல், காமமிக்க கழிபடர்கிளவி, காப்புச் சிறைமிக்க கையறு கிளவி, ஆறுபார்த்துற்ற வச்சக் கிளவி, தன்னுட்கையாய் எய்திடு கிளவி, நிலை கண்டுரைத்தல், இரவுறு துயரங் கடலொடு சேர்த்தல், அலரறிவுறுத்தல் ஆகிய முப்பத்துமூன்றும் இரவுக்குறியின் வகையாக அமைத்துள்ளார். இவை தொல்காப்பியத்தில், மற்ற இலக்கண நூல்களில் கூறாத வரைவுகடாதல் என்ற சொல்லைப் பயன்படுத்தியே வந்துள்ளது.

## களவியற்காரிகை கூறும் வரைவுகடாதல் செய்திகள்

## தோழியாலாய கூட்டக் கிளவித் தொகை

"களவியற் காரிகை" என்று நூலில் வையாபுரிப்பிள்ளை அவர்கள் அகப்பொருள், களவொழுக்கம், தோழியாலாய கூட்டம், கற்பொழுக்கம் போன்ற நான்கு இயல்களை உடையது என்றும், இதில் தோழியாலாய கூட்டம் இயலில் வரைவுகடாதல் நூற்பாக்களைத் தொகுத்துரைக்கும்போது.

*"உடன்படு தோழிஅயர்த் தன்றுரைத்தல் சுனையாட்டுதல்*
*அடர்ந்தெதிர் நன்சுனையின் வியப்பம்புலி யவ்வணங்கு*
*நடம்பயி லுஞ்சுனை தன்னைமிகுத்தல் நடுங்கநாட்டம்*
*குடங்கையை வென்று விழியாய் குறையை யுறவுணர்வே"*

(கள.கா.பொருள்.நூ.31)

உறவா யிருவரிடத்து முரவோன் வரவுணர்தல்

*"திறமார் வகைமைக் கரவுநாட்டஞ்சேட் படுத்தலந்த*
*விறலா ரவனை மறையே லெளல்கூ றெனவிடுத்தல்*
*அறலார் குழலையறியே னெனல்குறி யா(ள்) கூறலே"*

(கள.கா.பொருள்.நூ.32)

*". . . . . . . . . . . . . . . . . . கையுறை பறைசீர்*
*மாறுந்தகைத்தா நகைத்துரையாடல் தகைமறுப்பே*
*மறுத்தாள் குறிப்பறிந் தேற்றல்மடற்றிறங் கூறுதல்பன்*
*வெறுப்பார் மடலை வெளிப்படுத்த(ல்)லம் மடல்விலக்கல்*
*செறுப்பாலெழு தரிதே(யெ)ன்றலச் சேட்படைக்கழிதல்*
*ஒறுத்தா ளுருனின்றுடை யளானாளென் றுரைத்தவே"*

(கள.கா.பொருள்.நூ.34)

*"உரைக்கத் தகுந்தழை கோடல்குறிப்பை யறிவுறுத்தல்*
*விரைப்பொற்குடிலை வலிக்கு குறைநயப்பித்தல் மிக்க*
*வரைக்குற்ற கொங்கை"*

(கள.கா.பொருள்.நூ.35)

31–42 இன் நூற்பாக்கள் என்னவெனில் 1. தோழி அயர்த்துரைத்தல், 2. சுனையாட்டுரைத்தல், 3. சுனைவியந்துரைத்தல், 4. பிறைதொழுகென்றல், 5. தகையணங்குறுத்தல், 6. நடுங்க நாட்டம், 7. குறையுணர்வு, 8. இருவருமுள் வழி அவன் வரவுணர்த்தல், 9. கரவுநாட்டம், 10. சேட்படை, 11. மறையேன் எனல், 12. கூறென விடுதல், 13. அறியேன் எனல், 14. குறியாள் கூறல், 15. அரியளாம் எனல், 16. குலமுறை கிளத்தல், 17. நகைத்துரையாடல், 18. தழைமறுத்தல், 19. குறிப்பறிந்தேற்றல், 20. மடற்றிங் கூறல், 21. மடல் வெளிப்படுத்தல், 22. மடல் விலக்கல், 23. எழுதரிது என்றல், 24. சேட்படைக்கு அழிதல், 25. அருள் உடையள் என்றால், 26. தழை கோடல், 27. குறிப்பறிவுறுத்தல், 28. வலிதாகச் சொல்லி குறை நயப்பித்தல், 29. மெலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தல், 30.நாணொடு

கூறல், 31. முகம் புகுதல், 32. நயந்தமை கூறல், 33. பகற்குறியிடம் காட்டல், 34. இடத்துய்த்தல், 35. இடத்துய்த்து அகறல், 36. எதிர்ப்படல், 37. கோலஞ் செய்து உரைத்தல், 38. உண்மகிழ்ந்து உரைத்தல், 39. கொண்டு நீங்கல், 40. வாய்விடு கிளவி, 41. பொழுது கண்டிரங்கல், 42. படருறு களவி, 43. வருந்துதல் கிளத்தல், 44. இன்றறிந்தே கென்றல், 45. குடித்திறங் கூறல், 46. இற்செறிவுரைத்தல், 47.சிறைப்புறக் கிளவி, 48. வெளிப்பட உரைத்தல், 49. கணியென உரைத்தல், 50. நனைகெடச் செய்திலமென்றல், 51. ஏறு விடுத்தல், 52. சூளென நினைத்தல், 53. புனங்கண் பழிதல், 54. இரவிடங் காட்டல், 55. வரவுணர்ந்துரைத்தல், 56. தாய் தூயிலெறிதல், 57. இரவுக்குறி நயப்பித்தல், 58. குறியுய்த்தகறல், 59. குறியெதிர்ப்படல், 60. திங்கட்கு உரைத்தல், 61. அன்னத் தொலி உணர்தல், 62. கடலொலி கூறல், 63. இரவுக்குறி கழிதல், 64. கழிபடர் கிளவி, 65. கையறு கிளவி, 66. அச்சக் கிளவி, 67. பகல்வரல் என்றல், 68. இரவு வரல் என்றல், 69. இரவும் பகலும் குறிவாரல் என்றல், 70. தன்னுட் கையாறெய்திடு கிளவி, 71. கடலொடு கவலல், 72. ஆற்றாமை கூறல், 73. வரைவுகிளத்தல், 74. குறிப்புரைத்தல், 75. இல்லதுரைத்தல், 76. அலர் அறிவித்தல், 77. அயன் மணம் உரைத்தல், 78. மண முரசு அறைதல், 79. பரிசங் கிளத்தல், 80. உடன்போக்கு உரைத்தல், 81. செலவுடன்படுத்தல், 82. செலவழுங்கு வித்தல் எனப்படும்.

1 முதல் 53 வரையுள்ள நூற்பாக்கள் பகற்குறியையும், 54 முதல் 63 வரையுள்ள நூற்பாக்கள் இரவுக்குறியையும், 64 முதல் 82 வரையுள்ள நூற்பாக்கள் வரைதல் வேட்கையையும் குறிக்கின்றன.

## எட்டுத்தொகை நூல்களுள் வரைவுகடாதல் பாடல்களின் எண்ணிக்கை

தலைவி, தோழி இருவரும் வரைவு கடாவுவதாக அமைந்த பாடல்களின் விவரம்:

| | | |
|---|---|---|
| ஐங்குறுநூறு | – | 56 |
| குறுந்தொகை | – | 79 |
| நற்றிணை | – | 127 |
| அகநானூறு | – | 86 |
| கலித்தொகை | – | 22 |
| மொத்த எண்ணிக்கை | | 370 |

சங்க இலக்கியங்களில் வரைவு கடாதல் துறை சார்ந்த 370 பாடல்கள் இவ்வாய்விற்குத் துணைபுரிகின்றன.

## வரைவுகடாதல் துறை பாடிய புலவர் தொகை

சங்க இலக்கியங்களில் வரைவுகடாதல் துறை பற்றி 135 புலவர்களுக்கும் மேல் பாடியுள்ளனர். இவர்களில் பெயர் அறியப்படாத புலவர்களும் உளர். இப்பெயர் அறியப்படாதோர் குறுந்தொகையில் மூன்று பாடல்களையும், நற்றிணையில் பதின்மூன்று பாடல்களையும் இயற்றியுள்ளனர். இவை தவிர்ந்த இத்துறைச் சார்ந்த 370 பாடல்கள் 135 புலவர்கள் இயற்றியுள்ளனர். இப்புலவர்களில் பெயர் நிரலும், ஒவ்வொரு வரும் பாடிய பாடல்களின் மொத்த எண்ணிக்கையும், பாடிய இலக்கியங்களின் பாடல் எண்களும் பின்னிணைப்பில் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன.

## வரைவுகடாதல் துறை அதிகம் பாடிய புலவர்கள்

சங்க இலக்கியங்களுள் வரைவுகடாதல் குறித்துப் பெரும்பாலான புலவர்கள் பாக்கள் பாடியிருப்பினும் இவருள் அம்மூவனார் உலோச்சனார், கபிலர், பரணர், நல்லந்துவனார் ஆகிய புலவர்கள் அதிகம் பாடியுள்ளனர். இவர்கள் பாடிய பாவெண்களும், பாடிய இலக்கியங்களும் அட்டவணைகளில் குறிக்கப்பட்டுள்ளன.

## தொகுப்புரை

- தமிழ் இலக்கியங்கள் காட்டும் நாடக வழக்கும் உலகியல் வழக்கும் இணைந்து புலனெறிக் கொள்கை மிக நுட்பமானதாகும். அவை சிறந்த வாழ்வினின்றும் முகிழ்த்து, ஆழமான மனிதப் பண்புகளை விளக்குகின்றன. இலக்கியத்தின் ஆற்றலால் படிப்போரின் வாழ்க்கை உயர்வு பெறுகின்றது. இத்தகைய கண்ணோட்டத்துடனேயே சங்கப் பாடல்களின் உட்கருத்துகள் அமையப் பெற்றுள்ளன. அவை அகம், புறம் என்னும் இரு திணைகளைக் கொண்டு, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருட்களையும் தருகின்றன. இவற்றுள் இன்பம் எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. இவ்வின்பத்தை ஒழுக்கத்துடன் கூடிய முறையில் அனுபவிப் பதையே தமிழ் இலக்கியங்களின் களவியலும் கற்பியலும் எடுத்துக்காட்டுகின்றன.
- களவு கற்பறமாக அமையத் துணை செய்யும் துறையாக வரைவுகடாதல் துறை அமைகின்றது. தலைவியின் இன்ப வாழ்வை உலகோர் போற்றும் வண்ணம் அமைத்துக் கொடுக்கத் தோழி மேற்கொள்ளும் செயல்களே இத்துறையின் பாடல்களாக அமைகின்றன.

- தலைவியை விரும்பிய தலைவன் ஒருவன் கல்வி கேள்வி ஒழுக்கங்களில் சிறந்தவனாயினும், களவின்பம் கருதி வரைவினை நீட்டிக்கின்றான். இந்நிலையில் ஊரலரும், இற்செறிப்பும், வெறியாட்டும், நொதுமலர் வரைவும் போன்ற சூழல்களைக் கற்பித்தும், உண்மையாக நடைபெற்றதாகவும் கூறித் தோழி தலைவன் மனத்தில் படுமாறு மென்மையாகவும், வன்மையாகவும் அக்களவு நீட்டிப்பை அவன் உணருமாறு செய்கிறாள்.

- அவளது கூற்றுக்களில் உலகியல் உண்மைகள் கலந்து காணப்படும். களவு நிலையில் ஏற்படும் பல சிக்கல்களைத் தலைவனிடம் வினாக்கள் மூலமாக உணர வைப்பாள். இவ்வினாக்கள் 'கடாதல்' என்ற சொல்லுக்குரியவையாகும். தோழியின் பல்வேறு வினாக்களுக்குரிய பயனே வரைவாகும். எனவே வரைவுகடாதல் என்ற பெயர் இத்துறைக் கருத்துகளுக்குப் பொருந்துவதை உணர முடிகிறது.

- தொல்காப்பியம், இறையனார் களவியல் உரை, நம்பியகப் பொருள், தமிழ்நெறி விளக்கம், இலக்கணவிளக்கம், முத்துவீரியம், மாறனகப் பொருள், சுவாமிநாதம், களவியற் காரிகை என்ற ஒன்பது இலக்கண நூல்கள் கூறும் வரைவுகடாதல் செய்திகளைத் தொகுத்துக் கண்டபொழுது கீழ்வரும் முடிவுகள் பெறப்பட்டன.

ஒன்பது இலக்கண நூல்களிலும் காணப்படும் பொதுக் கருத்துகள்,

* தலைவன் தலைவியைச் சிறிது காலம் பிரிந்த நிலையிலும்,

* தலைவி தலைவனால் காண்பதற்கு அரிதாகிய பொழுதும், அவன் வருதலைத் தவிர்ந்து பொழுதும்,

* ஊரலர் காரணமாகத் தலைவி, அவன் வந்தபொழுது அவனைக் கண்டு அஞ்சிய நிலையிலும்,

* தலைவியின் ஆற்றாமை மிகுந்த நிலையிலும்,

* அவ்வாற்றாமையைத் தாய் அறியாது மறைக்குமிடத்தும்,
* தலைவன் வரும் வழிகளை நினைத்துத் தலைவி அஞ்சும்பொழுதும்,
* வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்த நிலையிலும்,
* இற்செறிக்கப்பட்ட பொழுதும்,
* வரைவு மேற்கொண்டு நொதுமலர் வரைவு வந்த நிலையிலும்,
* தலைவியின் நோய்க்குரிய காரணத்தை அறிவதற்காகத் தாய் வெறியாட்டு நிகழ்த்துவிக்கக் கருதிய இடத்தும்,
* குறி பிழைத்த நிலையிலும்,
* குறி பிழைத்தமையால் தலைவன் வறிதே மீண்ட பொழுதும்,
* தலைவனுடைய சான்றாண்மையை வலியுறுத்தியும்,
* தமர் உடன்பட்ட செய்தியைத் தலைவனிடம் கூறி "விரைந்து மணம் புரிய வருக" என்று கூறுமிடத்தும், 'வரைவுகடாதல்' என்னும் துறை அமையும் என ஒன்பது இலக்கணநூல்களும் எடுத்துக் காட்டுகின்றன.

- நம்பி அகப்பொருள், இலக்கண விளக்கம், களவியற் காரிகை நூல்கள் மட்டும் நொதுமலர் வரைவு பற்றி கூறும் பொழுது தோழி வரைவிற்குரிய நாள் குறிக்கப்பட்டது என்று கூறித் தலைவனை அச்சுறுத்துவதாக வரும் குறிப்பு, மற்ற இலக்கண நூல்களில் காணப்படாத செய்தியாக உள்ளது.
- இலக்கணங்களில் வரைவுகடாதல் துறையின் வளர்ச்சி நிலையினை நம்பி அகப்பொருளில் காண முடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. தேவிரா, தமிழ் இலக்கியத் தகவல் காஞ்சியம், ப.24.
2. இறையனார் களவியல் உரை, பக்.6–7.
3. தமிழண்ணல் இராம பெரிய கருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு, இலக்கியக் கொள்கைகள், பக்–89–90.
4. மேலது, ப.20.
5. மேலது, ப.20.
6. மேலது, ப.22.
7. தொல் பொருள். இளம். உரை., ப.3.
8. தமிழண்ணல் இராம பெரிய கருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய கொள்கைகள், பக்.34–35.
9. இராகவையங்கார், தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி, ப.71.
10. மேலது, ப.71.
11. மாணிக்கம் வ.சுப., தமிழக்காதல், ப.64.
12. மேலது, 64–65.
13. தமிழண்ணல் இராம கருப்பன், குறிஞ்சிப்பாட்டு இலக்கியத் திறனாய்வு விளக்கம், ப.55.
14. கதிரைவேற்பிள்ளை நா., தமிழ்மொழியகராதி ப.356.
15. அருணாசலம் மு., தமிழ் இலக்கிய வரலாறு, ப.174.
16. இளங்குமரன் இரா. (பதி), 1973. ஆராய்ச்சி முன்னுரை, ப.7.
17. வெள்ளைவாரணன் க., தொல் களவியல் உரைவளம், நூ.21, பக்.151–153.
18. மேலது, பக்.107–108.

19. மேலது, பக் 207–209.

20. க.வெள்ளவாரணன், தொல்.பொருளியல் உரைவளம், ப.56.

21. ராவ் பகதூர் பவானந்தம் பிள்ளை, இறையனார் அகப்பொருள், நூ.16–ன் விளக்கம், பக்.124–125.

22. மேலது, நூ.17–ன் விளக்கம் ப.126.

23. மேலது, நூ.18–ன் விளக்கம், பக்.128–129.

24. மேலது, நூ.20–ன் விளக்கம், ப.140.

25. மேலது, நூ.22–ன் விளக்கம் ப.142.

26. மேலது, நூ.–30ன் விளக்கம், ப.172.

27. இராமசுப்பிரமணியன், வ.த., நம்பி, சூன்.43 விளக்கம், ப.41.

28. மேலது, நம்பி.களவு., நூ.156 விளக்கம், ப.198.

29. மேலது, நம்பி.களவு., நூ.166 விளக்கம், ப.249.

## இயல் - இரண்டு

# நெறிமுறையும் கதைப்போக்கும்

இயல் - இரண்டு

# நெறிகளும் கதைப்போக்கும்

## முன்னுரை

தொல்காப்பியம் மக்களின் வாழ்வியல் நெறிகளைப் பொருள் அதிகாரத்தில் கூறுகிறது. சங்க கால மக்களின் அகவாழ்க்கையின் நெறிமுறைகளுக்கும், புறவாழ்க்கையின் நெறிமுறைகளுக்கும் உரையாசிரியர்கள் விரிவாக விளக்கம் அளித்துள்ளனர்.

## அகம்

“உள்ளத்தளவில் உணரப்படுவதாகிய காதல் பற்றிய பாட்டுகள் அகம் என்றும், புறத்தார்க்கும் புலனாகும் வீரம், கொடை முதலியன பற்றிய பாட்டுகள் புறம் என்றும் தமிழ்ச் சான்றோர் எடுத்துரைத்துள்ளனர்.

காதல் பற்றிய பாட்டுகளிலும் காதல்ர் இன்னார் என்று அறிய முடியாதவாறு இயற்பெயரோ, இனப்பெயரோ, முதலியன இல்லாமல் அமைந்த பாட்டுகளே அகம் என்றும், அவ்வாறு பொதுவாக அமையாத பாட்டுகள் புறம் என்றும் கொள்ளப்பட்டன”[1] என்பதும் தெரிய வருகிறது.

சங்க காலத்து அகப்பாட்டில் கதைமாந்தரின் பெயரைச் சுட்டிப் பேசுதல் கூடாது என்பதை,

*“மக்கள் நுதலிய அகனைந் திணையும்*
*சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்”*

**(தொல்.பொருள்.அகத்.54)**

என்ற நூற்பாவின் வழி அறிய முடிகிறது.

ஒரு மனிதனின் தனித்தன்மையை உறுதிப்படுத்தும் உத்திகளுள் எல்லாம் தலைமையானது அவனது பெயரேயாகும். சங்க அகப்பாட்டில் வரும் தலைவன், தலைவி, தோழி முதலியோர் பெயர் சுட்டி வழங்கப்படாது. அவர்களை அவன், அவள் என்றே குறிப்பிடுவர். இதுதான் அகமரபாகும். இந்தச் சூத்திரத்தைப் பின்பற்றியே எட்டுத்தொகையில் சேர்ந்த அகப்பாட்டுகள் எல்லாம் இயற்றப்பட்டன. ஆகவே சங்கத் தமிழன்தான் உலகின் முதன் முதலாக உணர்ச்சிப் பொதுமையின் சிறப்பை உணர்ந்து நூல் இயற்றியவன் என்பது புலனாகிறது.

தொல்காப்பியத்தின் கண் குடும்பத்துக்கும், சமுதாயத்துக்கும், நாட்டுக்கும், அரசியலுக்கும், காதலுக்கும், வீரத்துக்கும், மெய்யுணர்வுக்கும், மொழிக்கும், இலக்கியத்துக்கும் பல நெறிகள் எளிமையாகவும்,தெளிவாகவும் கூறப்பட்டுள்ளன.

## குடும்ப நெறிகள்

*"ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப"*

(தொல்.பொருள்.களவு.2)

என்பதில் உள்ள ஒத்த என்பது ஒப்புமை எனப்படும்.

தொல்காப்பியர் ஒன்றுபடுத்தும் ஊழ்நிலையாலும், வேறுபடுத்தும் ஊழ்நிலையாலும் அமையும் வாழ்க்கையில் ஒன்ற வைக்கும் ஊழ்நிலையின் ஆணையால் ஒத்த தலைவனும் ஒத்த தலைவியும் காண்பர் என்று சுட்டுவார். களவியலில் தலைவி, தலைவன் களவொழுக்க உணர்வுகளைச் சுட்டி, அவர்தம் உறவினைப் புலப்படுத்துகிறார். ஆனால் களவியலில் சுட்டும் ஒத்த தலைவன், தலைவி என்பதற்கான விளக்கத்தை அங்கே கூறவில்லை. 'ஒத்த' என்பதற்கு மெய்ப்பாட்டியலில் தான் குறிப்பிடுகின்றார்.

ஓர் ஆணும், பெண்ணும் இணைந்து இனிமையாக இல்லறம் நடத்துவதற்கு ஏற்ற பத்துப்பொருத்தங்களைத் தொல்காப்பியர் கூறியுள்ளார். அவை,

*"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு*
*உருவு நிறுத்த காம வாயில்*
*நிறையே அருளே உணர்வோடு திருஎன*
*முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"*

(தொல்.பொருள்.மெய்.25)

என்பனவாகும்.

| | | |
|---|---|---|
| பிறப்பு | – | நல்குடியில் பிறத்தல் வேண்டும் |
| குடிமை | – | பிறந்த அக்குடியின் சிறப்புக்கேற்ற ஒழுக்கமுடைமையுடன் இருத்தல். |
| ஆண்மை | – | ஆளும் தன்மை, பெருமிதமானவை அனைத்தும் இருத்தல் வேண்டும். |
| ஆண்டு | – | அகவை ஒப்புமை வேண்டும் |
| உருவு | – | உடல் தோற்றம் |
| நிறுத்த காம வாயில் | – | உடற்கண் அமைந்த காம இன்பம் நுகர்தற்கான கூறுகளுடன் இருத்தல் வேண்டும். |
| நிறை | – | திருமணமான பின் மனதை ஒருவழி நிறுத்தவல்ல தற்கட்டுப்பாட்டோடு இருத்தல். |
| அருள் | – | அருள் உடைமையும் அதன் அடித்தளமான அன்பும் நிறைந்திருத்தல். |

உணர்வு – மன உணர்ச்சி நிலைகள்

திரு – செல்வ முடைமை உள்ளக் குறிப்பு அறிந்து பிறர் விரும்பும் தன்மையோடு சிறத்தல்.[2]

இல்லறக் குடியாக இருவர் ஆனது தாங்கள் மட்டும் வாழ்வதற்கு அன்று. பெருஞ்சமுதாயத்தின் ஓர் உறுப்பே குடும்பமாகும். அக்குடும்பம் உலகத் தொடர்போடு பல்வகை உறவு கொள்ளுதற்குரியது என்று சான்றோர் விளக்கியுள்ளனர்.

**பெண் நெறிகள்**

தொல்காப்பியம் பெண்மைக்குரிய பண்புகளாக சில வரையறைகளைத் தருகின்றது. அவை,

*"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த*
*நிச்சமும் பெண்பாற்குரிய என்ப"*

(தொல்.பொருள்.களவு.8)

***"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்***
***அறிவும் அருமையும் பெண்பா லான"***

(தொல்.பொருள்.பொ.இ.14)

என்னும் ஒன்பது பண்புகளைப் பெண்மை குணங்களாகக் குறிப்பிடுகிறது. பெண்ணைக் கல்வி அறிவில்லாதவள் எனவும், பிறரிடம் கேட்டுத்தான் அறிவு பெறுபவள் எனவும், சில நாடுகளில் உரிமை இல்லாத குடிகள் இருப்பது போல் பெண்ணினத்தைச் சமுதாயத்தில் இழித்துக் கூறியது இடைக்காலம். இக்கொள்கை தொல்காப்பியர் காலத்தில் சிறிதும் இல்லை.

பெண்ணுக்கு முதன்மையளித்து, இல்வாழ்க்கைக்குப் பொறுப்பாக்குவது, காப்பது, பெண்மையை வணங்குவது என்பது தொல்காப்பியம் புலப்படுத்தும் தமிழ் நெறிகளாகும். அதனால்தான்

காப்பியமான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் பெண்களைக் காப்பியத் தலைவியாக வைத்துப் பாடினர்.

திருவள்ளுவரும் இல்லறவியலில் வாழ்க்கைத் துணைநலம் என பெண்மைக்குத் தனியதிகாரம் வைத்துப் பாடினார். நம் முன்னோர் இதனால்தான் பெண்ணினத்தின் தனிப்பேராற்றலை உணர்ந்திருந்தார்கள் என்பதை அறிய முடிகிறது.

முதலுரிமை உடையவள் தலைவி என்றால் கடமையும் முதற்கண் செய்ய வேண்டியவள் அவளே என்பதே கருத்தாகும். உரிமையும், கடமையும் ஒன்றிச் செல்பவை. உரிமை எந்தளவுக்கு உள்ளதோ, அதே அளவுக்குப் பொறுப்பும் உள்ளது.

## ஆண் நெறிகள்

தொல்காப்பியம் அகம், புறம் என இருபொருளைக் கூறுகின்றன. இருவகையிலும் ஆணுக்கும், பெண்ணுக்கும் பங்கு உண்டு. ஆண், பெண் நட்பென்பது நீரும் நெருப்பும் போன்றவையாக உள்ளது. ஒற்றுமையில் வேற்றுமையும், வேற்றுமையில் ஒற்றுமையும் கொண்ட இணைப்புடையதாகும். பிறப்பிலே உறவுடைய இவ்விரண்டும் எவ்வகையாலும் முரணாகப் பார்த்தல் இயலாது. எனினும் உலகியலாகவும் கடமையாகவும் சில வேறுபாடுகள் வழிவழியாய் வந்துள்ளன.

இல்லறத்தில் பெண்ணுக்குக் கடமை பொறுப்பு மிகுதி. தொல்காப்பியம், காமநூல்கள் போல ஆண், பெண் உடல் உறுப்புகளைப் புனைந்து காட்டுவதில்லை. இருபாலரின் கடமைகளையும் மனவோட்டங்களையும் சமுதாயப் பார்வையில் செலுத்தி நெறிகளைக் கற்பிப்பது என்னும் உயர்ந்த பண்புநெறியினைத் தொல்காப்பியம் உணர்த்துகிறது.

ஆடவன் நெறிக்கு இரண்டு அடிப்படைக் குணங்கள் உண்டு என்பதை,

*“பெருமையும் உரனும் ஆடூஉ மேன”*

(தொல்.பொருள்.களவு.7)

என்னும் நூற்பா வழி அறிய முடிகின்றது.

ஆண் உலகுக்கு புறவுலகத் தொடர்பு எளிது. தற்காப்பு அவனுக்கு இயல்பு நிலையில் வேண்டியதில்லை. ஆடவன் பொருளீட்டலுக்குச் செல்வது கடமையாகின்றது. பொருளில்லை எனின் அவன் குடும்பம் பெருமை இழந்து சிறுமைபடும்.

எனவே, காலத்தின் அருமை, இளமையின் அருமை, விருந்துபுரத்தலின் மேன்மை, இன்மையின் இளிவு, உடைமையின் உயர்ச்சி முதலியவற்றை மனதிற் கொண்டு தலைமகன் தலைமகளை விடுத்துப் பொருள்வயிற் பிரிந்தான் என்பதை,

*“நாளது சின்மையும் இளமையது அருமையும்*
*தாளாண் பக்கமும் தகுதியது அமைவும்*
*இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும்*
*அன்பினது அகலமும் அகற்சியது அருமையும்*
*ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலுளனும்”*

(தொல்.பொருள்.அகத்.44:7–11)

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்குகின்றது. அஃதாவது, அண்மையில் மணந்த தலைவியைப் பிரிந்து இன்பந் துறந்து செல்வது என்பது எளிதான காரியமன்று. இளமைக் காலத்தை மீண்டும் நினைத்துப் பார்க்கும் சிந்தனை வல்லார்க்குப் புலப்படும். இளைய ஆடவனின் மனப்போராட்டத்தை இன்பத்துக்கும் பொருளுக்கும் இடைப்பட்ட நெஞ்சப் பூசலைத் தொல்காப்பியம் வழி அறிய முடிகின்றது.

ஆண்மை நெறியென்பது அன்பு நெறி தழுவியது. அன்பை முறிப்பது ஆண்மையும் ஆகாது. இல்லறமும் ஆகாது. ஆதலின் பொருளுக்கோ, பிற காரியங்கட்கோ செல்லும் தலைவன் தன் தலைவியின் உள்ளத்துயரை ஓரளவாவது தணித்துத்தான், அதற்காகச் சிலநாள் கூடத் தங்கியிருந்து தான் மறுபடி புறப்பட வேண்டுமென ஆடவனை எச்சரிப்பது தொல்காப்பியம்.

*"துன்புறு பொழுதினும் எல்லாம் கிழவன்*
*வன்புறுத் தல்லது சேறல் இல்லை"*

**(தொல்.பொருள்.களவு.43)**

என்றபடி இல்லறத்தைப் போற்றும் வழிகாட்டுவது இத்தமிழ் நூலேயாகும்.

புகழ்நாட்டமும், நெஞ்சுரமும் உடைய தலைவன் கடமைக்குரிய காலத்தினையும், காம இன்பத்திற்குரிய காலத்தினையும் பகுத்தறிந்து கொள்வான் என்பதை,

*"கிழவி நிலையே வினையிடத்து உரையார்*
*வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்"*

**(தொல்.பொருள்.கற்பு.45)**

என்ற நூற்பா விளக்குகின்றது. கடமை முடியும் வரை காதலியை நினையான். கடமை முடிந்த பின்னே மறந்த காதலியை நினைப்பான் என்று கடமைக்கும் காதலுக்கும் உரிய வரைமுறைகளைத் தொல்காப்பியர் வகுத்துக்காட்டுகின்றார்.

## பண்பு நெறிகள்

எந்தவொரு உயிரினத்தையும் பண்பாக நடந்து கொள்கின்றன என்றோ, பண்பாக நடக்கவில்லை என்றோ பாராட்டுவதும், பழிப்பதும் இல்லை. மக்களின் நிலைவேறு. பழக்கத்தினாலும், பயிற்சியினாலும், உறவினாலும் மக்களைத் திருத்த முடியும். பண்படுத்த முடியும். மனித

இனத்தைப் பண்பாட்டுக்குக் கொண்டு வர இயலும் என்ற ஒரே கொள்கையினால் நீதிநூல்கள் எழுதப்பட்டன. கல்வி நிலையங்கள், சமயத் துறைகள் ஏற்படுத்தப்பட்டன. திருத்துவதற்குத்தானே சட்டங்களும் இயற்றப்பட்டன.

பண்பு எனப்படுவது என்பதற்குப் பொருள் யாதென்று கலித்தொகைப் பாடலொன்று அழகாகச் சித்திரித்துக் காட்டும். அதாவது,

*"பண்பு எனப்படுவது தன்கிளை அறிந்து ஒழுகுதல்*
*அன்பு எனப்படுவது தன்கிளை செறாஅமை*
*அறிவு எனப்படுவது பேதையர் சொல்நோன்றல்*
*செறிவு எனப்படுவது கூறியது மறாஅமை*
*நிறை எனப்படுவது மறைபிறர் அறியாமை*
*முறை எனப்படுவது கண்ணோட்டாது உயிர்வௌவல்*
*பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்"*

**(கலித்.133:8–14)**

என்பதாகும்.

தலைவன் களவொழுக்கத்தை உடையவனாய்த் தலைவியை மணந்து கொள்ளாமல் வரைவு நீட்டித்தான். தோழி உலகியல்புகளைக் கூறி மணந்து கொள்ளும்படித் தலைவனை வேண்டினாள்.

மக்கள் பண்பு எனப்படுவது உலக ஒழுக்கம் அறிந்து ஒழுகுதலேயாகும். மற்றவரோடு பழகும்போது நடந்து கொள்ளும் தன்மையைக் குறிக்கும். கூட்டத்தை மதித்தல், பணிவாகப் பழகுதல், பிறர் எளித்தல் போதும் அடக்கமாக மறுமொழிதல், ஏழை எளியவரிடம் இரக்கமாக நடந்து கொள்ளுதல், குறிப்பாக ஆண் பெண்ணிடத்தும், பெண் ஆணிடத்தும் அளவாக நாகரிகமாகப் பழகுதல், உயிரனங்களைத் துன்புறுத்தாது இரக்கம் காட்டுதல், பகைவரையும் மதித்தல், பெரியோரையும்

சிறியோரையும் இகழாதிருத்தல், உலகத் தொடர்பில் பெருமைப்படுத்தியும் பெருமையாகவும் நடந்து கொள்ளல் முதலியனவாகும்.

இன்பம் என்பது எல்லா உயிர்க்கும் பொதுவானது என்பதை,

*"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
*தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்"*

(தொல்.பொருள்.27)

என்ற நூற்பாவின் வழி தொல்காப்பியர் எடுத்துரைக்கிறார்.

அஃறிணைப் பொருளாயினும், உயர்திணைப் பொருளாயினும் ஒவ்வோர் உயிரும் துன்பமின்றி இன்பமாக வாழ்வதையே நாடுகின்றது. இதனால் தன்னுடைய இன்பத்துக்காகப் பிறிதோர் உயிர்க்குத் தீங்கு செய்யக் கூடாது என்ற பண்பும் பிறவுயிர்கட்குத் தன்னால் எந்தத் துன்பத்தையும் தராது, அத்துணை இன்பம் செய்ய வேண்டும் என்ற பண்பும் நமக்கு எடுத்துக்காட்டிப் புலப்படுத்துகின்றார், தொல்காப்பியர்.

*"செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென்று*
*அல்லல் நீத்த உவகை நான்கே"*

(தொல்.பொருள்.மெய்.11)

என்ற நூற்பாவில் செல்வத்தில், கலையில், இன்பத்தில், விளையாட்டில் கூடப் பிறருக்குத் தீங்கு செய்யாத, அல்லல் இல்லாத மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்ற பொதுமைப் பண்பு வலியுறுத்தப்படுகின்றது.

## இலக்கிய நெறி

எவ்வகை கவிஞனும், எழுத்தாளரும் ஆண், பெண் காதல் பற்றி எழுதுவது இயற்கையாகும். காதலின்றி இலக்கியம் அமைவதில்லை. இலக்கியத்துக்குக் காதல் உயிர் போன்றது. உயிரின்றி உணர்வில்லை. உணவின்றி உயிர் இல்லை. எனினும் நோயற்ற வாழ்வுக்கு உணவில் தூய்மை

வேண்டும். உணவில் அளவு தேவை, சத்துத்தேவை, உண்டது செரிமானமாதல் தேவை.

*“மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துஉண்ணின்*
*ஊறுபாடு இல்லை உயிர்க்கு” (திருக்.945)*

*“இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்*
*கழிபே ரிரையான்கண் நோய்” (திருக்.946)*

என்ற குறட்பாக்கள் மாறுபாடு இல்லாத உணவை அளவொடு உண்டால் உயிர் உடம்பில் உறைவதற்கு ஊறு உண்டாகாது என்று உணர்த்துகின்றன.

குறைந்த அளவு உணவு உண்பவன் இன்பம் நிலைத்து நிற்கும். அதுபோல நிறைந்த அளவு உணவு உண்பவனிடம் நோய் நிலைத்து நிற்கும். குறைந்த அளவு உணவை உண்டு, செரிமானம் அடைந்த பின் உணவை உட்கொள்ளவும், நன்றாகப் பசித்த பின்பும் உணவை உட்கொள்ள வேண்டும்.

தொல்காப்பியம், தலைவன் தலைவியின் உறவுகளைப் பற்றி விளக்குகிறது. காதலைப் புனையும்போது பெரும்பகுதி பெண்களைப் பற்றித்தான் இருக்கும்.

*“காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்*
*நாணும் மடனும் பெண்மைய” (தொல்.பொருள்.களவு.18)*

ஆதலால் பெண்ணின் நாணத்துக்கும், அடக்கத்துக்கும் இழிவின்றி எழுத வேண்டும் என்ற குறிப்பினைத் தொல்காப்பியம் பல இடங்களில் சுட்டிக்காட்டுகின்றது.

ஆண்மைக் குணங்களாகத் தொல்காப்பியம் கூறும் பெருமையும் உரனும் ஆடவருக்குத் தேவையென்பதை எடுத்துரைத்துகிறது.

தொல்காப்பியம் தொன்னூல் ஆயினும் பழமையை போற்றிக் கொண்டிருக்கிறது. புதுமையையும் வரவேற்கின்றது. புதிய வகைகளை 'விருந்து' என்ற சொல்லால் இந்நூல் குறிப்பிடும். இலக்கியத்துக்குத் தக்கவர்களை அதாவது, ஐவகை நிலத்தில் வாழ்கின்ற எளிய ஊர் மக்களும், கருப்பொருட்களும் புலவர்களால் பாடுவதற்குத் தக்கவர்கள் என்பது இந்நூலின் பெருங்கோட்பாடாகும்.

இந்நெறி முறைகளை பின்பற்றித் தான் சங்கப் புலவர்கள் பாடல்களைப் புனைந்துள்ளனர். தலைவன், தலைவியரின் வாழ்க்கை முறையைத் தொல்காப்பியம் சுட்டியதால் தான், புலவர்களுக்கு நெறிகள் எளிதாகப் புரிந்து, அவர்களின் கதாபாத்திரமாகவே வாழ்ந்திருக்கின்றனர் என்பது புலனாகிறது.

## கதைப்போக்கு

"சங்கப் புலவர்கள் அகப்பாட்டுகளாகப் பாடியுள்ளவை எல்லாம் பாடிய புலவரின் சொந்த உணர்ச்சிகளைப் பற்றியன அல்ல. புலவர் படைத்துக் கொண்ட காதலன், காதலி, தோழி முதலியோருடைய உணர்ச்சிகளையே அகப்பாட்டில் பாடியுள்ளனர். ஆகவே, நாடக ஆசிரியர் கற்பனையாகச் சில மாந்தரைப் படைத்து அவர்களைப் பேசச் செய்வது போல், பழந்தமிழ்ப் புலவரும் காதலி, காதலன் முதலானோரைப் படைத்த அவர்களின் உணர்ச்சிகளை அவர்கள் வாயிலாகவே புலப்படச் செய்துள்ளார். ஆதலின் அகப்பாட்டுகள் எல்லாம் கற்பனை மாந்தரின் உணர்ச்சிகளாக இருக்கக் காணலாம். அவற்றில் புலவரின் கூற்றுகள் இல்லை. புலவர் படைத்த கற்பனை மாந்தரின் கூற்றுகளே உள்ளன. அவற்றில் புலவர் மறைந்து நிற்க அவர் படைத்த கற்பனை மாந்தரே பேசக் காண்கின்றோம். அவ்வாறு புலவர் தம் சொந்த உணர்ச்சிகளைப் பாடாமல், தாம் படைத்த கற்பனை மாந்தரின்

உணர்ச்சிகளைப் பாடும் பாட்டுகள் நாடகப் பாட்டுகள் எனப்படும்''[3] என மு.வரதராசனார் அவர்கள் கூறியுள்ளார்.

சங்க அகப்பாடல்கள் ஒவ்வொன்றும் அதனளவில் தனிக் கட்டமைப்புடைய சின்னஞ்சிறு நாடகமாகும். ஒரு பாடலுக்கும் அடுத்து வரும் பாடலுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்றாலும் பண்டைத் தமிழ் மக்களின் அகவாழ்வைச் சொல்லுதல் என்ற நிலையில் ஏதேனும் ஒரு கருத்தை அல்லது செய்தியை அல்லது கதைமாந்தரின் மன உணர்வைப் பதிவு செய்வனவாக அப்பாடல்கள் விளங்குவதைக் காண முடிகின்றது.

**புலவரின் பாடல்கள்**

''நாடகங்களின் அமைப்பு முறையைத் தழுவி இயன்ற சின்னஞ்சிறு நாடகங்களாகவே ஆகிவிடுகின்றன. குறிஞ்சிக் கலியில் அமைந்த பாடல்கள் சில சின்னஞ்சிறு நாடகங்களாகவே திகழ்கின்றன''[4] என்னும் கருத்து புலவரின் பாடல்கள் நாடகக் கூறுகளைக் கொண்டு விளங்குகின்றன என்பதைச் சுட்டுகிறது.

சங்க இலக்கியம் படைப்பிலக்கியம் என்றாலும், நாடகத்தினுக்கு உரிய உத்திகளைப் பெற்றுள்ளது. நாடகம் என்பது ஒரு சிக்கலை மையமாகக் கொண்டு அச்சிக்கலின் தோற்றம், வளர்ச்சி, உச்சம், வீழ்ச்சி, முடிவு எனும் அமைப்பில் உருவாக்கப்பட்டுள்ளது.

சங்க காலத்தில் மூன்று கதாபாத்திரங்களை வைத்தும், பின்னர் செவிலி, நற்றாய், ஊர்ப்பெண்டிர் போன்றவர்களால் கதை நிகழ்த்தப்படுவதும் நாடகத்திற்குரிய திருப்புமுனைபோல் இலக்கியத்தில் அமைந்துள்ளமை புலப்படும்.

## கதைத்தோற்றம்

### காட்சி

காட்சி என்பது தலைமகன் தலைமகளை முதன்முதலில் காணல். புணர்வதும், பிரிவதும் ஆகிய இருவேறு வினைகள் தெய்வத்தின் காரணமாகத் தலைமகன் தலைமகளைக் காண்பான்.

*"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்*
*ஒன்றி உயர்ந்த பால தாணையின்*
*ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப*
*மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே"*

(தொல்.பொருள்.களவு.2)

கதையின் தலைவனும், தலைவி இருவரும் ஒருவரையொருவர் விதியின் காரணத்தால் சந்திக்கின்றனர். அச்சந்திப்பு காதற் குறிப்பினால் பெறப்படும்.

### குறிப்புணர்தல்

ஒத்த தலைமகனும் தலைமகளும் அவரவர் உள்ளக் கருத்தை அறிதற்குத் துணை நிற்கும் கருவி கண்களேயாகும். ஒருவர் உள்ளத்தில் தோன்றிய காதலை மற்றொருவர் அவரவர் கண்கள் தரும் குறிப்புரையாலே உணர்ந்து கொள்வர். ஒருவர் குறிப்பை ஒருவர் உணர்ந்து கொள்ளும் போது மட்டுமே குறிப்புரை நிகழும். காதல் உடம்பாடு ஏற்றுக் கொள்ளப்படும்.

*"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்*
*கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்"*

(தொல்.பொருள்.களவு.5)

*"குறிப்பே குறித்தது கொள்ளு மாயின்*
*ஆங்கவை நிகழும் என்மனார் புலவர்"*

(தொல்.பொருள்.களவு.6)

கண்கள் காதல் உடம்பாட்டைச் சொல்லும் கருவி என்பதை,

*“கண்தர வந்த காம ஒள்ளெரி”* *(குறுந். 305:1)*

*“இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு*
*நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து” (திருக்.1091)*

தலைமகளுடைய கண் பார்வைக்கு இருநோக்கங்கள் உண்டு. ஒன்று நோயை உண்டாக்கும். மற்றொன்று மருந்தாகும் என்றும் குறுந்தொகை வரிகளும் திருக்குறளும் உணர்த்துகின்றன.

விதியின் காரணமாகத் தலைமகனும் தலைமகளும் கூடிய காமக் கூட்டம் மூன்று நாள்கள் மட்டுமே பிறர் துணையில்லாமல் நிகழும். சில நேரங்களில் மூன்று நாள் கூடத் துணையில்லாமல் நிகழாது என்பார் தொல்காப்பியனார்.

**வளர்ச்சி : இருவகைக் குறியில் காணல்**

**குறி**

தலைமகளும் தலைமகனும் சந்தித்துக் கொள்ளும் இடம் குறியாகும். குறி இரண்டு வகைப்படும். ஒன்று பகற்குறி. மற்றொன்று இரவுக்குறி. இதற்குப் பின்னர் தலைமகனும் தலைமகளும் தோழியின் உதவியாலோ, அல்லது தோழனின் துணையாலோ தான் புணர்ச்சி எய்துவர். பகற்குறியில் புணர்ச்சி நிகழும்.

**பகற்குறி**

களவொழுக்கத்தில் தலைவன் நாள்தோறும் பகற்குறியில் வந்து தலைவியுடன் கூடிச் செல்பவனாய் இருந்தான். இவ்வகையால் தலைவிக்கு வேட்கைக்குத் தீரவில்லை. அவளது எண்ணத்தைக் குறிப்பால் உணர்ந்த தோழி தலைவனை நோக்கி “நீ என்னுடன் என் இல்லத்தில் வந்து என்

விருந்தினனாகி இரவில் தங்கிச் செல்ல வேண்டும்''[5] எனத் தலைவனை வேண்டிக் கொண்டாள். அப்பொழுதாவது, தலைவனுக்கு இல்லறத்தின் சுவையைத் தோற்றுவிக்கலாம் என்று குறிப்பால் எடுத்துரைக்கிறாள்.

### பகற்குறி நேர்தல்

பகற்குறி நேர்ந்த தலைமகனுக்குக் குறிப்பினால் குறியிடம் பெயர்த்துச் சொல்லும் மாதிரத்தனார் பாடல்,

*"ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச்*
*சேய்த்து மன்றே சிறுகான் யாறே*
*இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்*
*துன்னல்போ கின்றாற் பொழிலே யாமெம்*
*கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்*
*ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே (குறுந்.113)*

தலைவனே! எங்கள் ஊர் அருகில் பொய்கை உள்ளது. பொய்கை அருகில் காட்டாறு உள்ளது. சோலையில் இரை தேடும் நாரைகளைத் தவிர வேறு யாரும் இருக்கமாட்டார்கள். சோலைப்பக்கம் நாங்கள் எம் கூந்தலில் அணிந்து கொள்ளச் செங்கழுநீர் கொண்டு வரச் செல்வோம். அங்குத் தலைவியும் வருவாள் என்று தலைவனிடம் தோழி கூறிப் பகற்குறிக்கு இசைவுத் தெரிவிப்பாள் என்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

### பகலில் வாராதே

தலைவியை வரைந்து கொள்ளாமல் களவொழுக்கத்தை விரும்பும் தலைவனிடம் தோழி பேசுவதாக அமைந்த பாடல்,

*"நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப*
*நும்மினுந் சிறந்தது நுவ்வை ஆகுமென்று*
*அன்னை கூறினள் புன்னையது சிறப்பே*
*அம்ம நாணதும் நும்மொடு நகையே" (நற்.172:3-6)*

வழக்கமாகத் தலைவனும் தலைவியும் கூடும் புன்னை மரத்தைக் காட்டி இது தலைவியின் தமக்கையாகும். இதன்கீழ் நீங்கள் இருவரும் கூடுவது தலைவிக்கு வெட்கத்தைத் தருகிறது. வேறு புன்னை மரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஏதாவது ஒன்றன் நிழலில் நீங்கள் சந்திக்கலாம் என்பாள்.

புன்னைமரம், வெண் மணல் இவை நெய்தலைக் குறிப்பிடும். இவ்வகையில் குறியை அடிக்கடி மாற்றி இடுவதே தலைவன், தலைவியைச் சந்திக்க இயலாமல் செய்து அவனது ஆவலைப் பெரிதாக வளர்த்து, திருமணம் செய்து கொள்ளத் தூண்டும் நோக்கத்துடன் தோழி செயல்படுவாள் என்பது தெளிவாகிறது.

## இரவில் வந்து மீளுதல்

திருமணத்துக்கு முயற்சி செய்யாமல் இரவுக்குறியில் வந்து போகும் தலைவனிடம் தோழி ''இவளை நீ விரைவில் மணம் புரிந்து கொள்ளாவிடில் இவள் இறந்து விடுவாள். களவிலே இயல்பாக உள்ள பிரிவை இவளால் தாங்க முடியாது. இவளது உயிர் மென்மையானது. இவளது காதல் திறமோ மிக்க வலிமையுடையது என்று எச்சரிக்கிறாள்.

தலைவியின் நிலைக்கு அழகியதொரு சான்றும் தருவாள். மலையில் பழுக்கும் பலாப்பழம் கனம் மிகுந்து போகுங்காலை அதன் மென்மையான கொம்பில் தங்காது முறித்துக் கொண்டு விழும். அவை யாருக்கும் பயன்படாது. தலைவியின் உயிர் பலாப்பழத்தின் காம்பு என்றால் அவளது காதலே நெருப்பாகும். இப்பாடலில் தலைவியின் உயிருக்கு பலாப்பழத்தைச் சுட்டி தலைவியின் நிலையை எடுத்துரைக்கிறார் கபிலர். அப்பாடல்,

*"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்*
*சாரல் நாட செவ்வியை ஆகுமதி*
*யார்அஃது அறிந்திசி னோரே சாரல்*
*சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு இவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிது"* *(குறுந்.18)*

என்பதாகும்.

### இரவுக்குறியின் ஏதம்

களவொழுக்கத்தில் தலைவன், இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்கக் கூடி இன்பம் எய்துகிறான். அவளோ அவன் வரும் வழியின் ஏதம் அறிந்து வராதே என்று கூறுகிறாள். இச்சூழலில் அவளையும் தேற்றி, தலைவனைப் புகழ்ந்து இரவுக்குறி இன்பத்தையும் தொடர்ந்து துய்க்க வேண்டுமானால்,

*"குருதி வேட்கை உருகெழு வயமான்*
*வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்*
*மரம்பயில் சோலை மலியப் பூழியர்*
*உருவத் துருவின் நாள்மேயல் ஆரும்*
*மாரி எண்கின் மலைச்சுர நீளிடை"* *(நற்.192:1-5)*

என்று வழிக்காட்சியைக் காட்டுகின்றார் புலவர். இவற்றில் புலி, களிற்றைக் கொல்லப் பார்த்திருக்கும் சோலையில், கரடி அஞ்சாது இயங்கும் என்று கூறி, அன்னை காவலாக இருக்கும் மனையகத்தும் யாம் அஞ்சாது வருவதற்கு வல்லமை உடையோம் என்பதைக் குறிப்பதாகும். உன் மேனி ஒளியில் வருவேன் என்றது, அவளைப் புகழ்ந்தேற்றும் நோக்கம் கொண்டதாகும். இதனால், உனக்காக எதையும் செய்வோம் என்றும் தலைவனின் காதல் மிகுதியையும் அறிய முடிகிறது.

**உச்சம்**

**பிரிவுத்துயிர்**

களவொழுக்கத்தில் ஒரு நிகழ்ச்சி, இரவுக்குறியில் வந்த தலைமகன் வரும் வழியை எடுத்துரைத்துக் கதைபோல் அமைக்கப்பட்டுள்ளது. இது கதையின் உச்சகட்டமாக பிரிவுத்துயர் மற்றும் அலர் விளங்குகிறது.

இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குத் தன் மனக்கவலையை வெளியிடுகிறாள். காடும், கல்லும் அச்சந் தரும் விலங்குகளும் ஆபத்து நிறைந்த வழியில் தலைவன் நடந்து வரும்பொழுது அவனது தளரடி தாங்கி உதவும் விழைவுடனே தன் நெஞ்சம் அவனுடனேயே செல்கிறது என்பாள் தலைவி உருக்கத்துடன், சுனை, குவளை, மலர், காட்டு வழி, மாரி வானம் என்ற குறிஞ்சிக்கேற்ற எல்லாம் இங்குச் சுட்டியப் பொருளாக வந்து களவொழுக்கத்தைக் குறியிட்டு நிற்கும். இப்பாட்டில் இந்த குறிஞ்சித் திணைக் கருப்பொருள்கள் இதன் இதயமான உணர்ச்சிச் சித்திரத்தில் தலைமையாய் அமைந்துள்ளன.

*"மன்றுபாடு அவிந்து மனைமடிந் தன்றே*
*கொன்றோ ரன்ன கொடுமையோடு இன்றே*
*யாமம் கொளவரின் கனைஇக், காமம்*
*கடலினும் உரைஇ, கரைபொழி யும்மே*
*எவன்கொல் வாழி தோழி மயங்கி*
*இன்னம் ஆகவும் நன்னர் நெஞ்சம்*
*என்னோடும் நின்னோடும் சூழாது கைம்மிக்கு*
*இறும்புபட்டு இருளிய இட்டுஅருஞ் சிலம்பில்*
*குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடி*
*கான நாடன் வரூஉம் யானைக்*
*கயிற்றுப் புறந்தன்ன கல்மிசைச் சிறுநெறி*
*மாரி வானம் தலைஇ நீர்வார்பு*
*இட்டுஅருங் கண்ண படுகுழி இயவின்*

*இருளிடை மிதிப்புழி நோக்கி அவர்*
*தளிர்அடி தாங்கிய சென்றது இன்றே"* *(அகம்.128)*

இப்பாடலில், தலைவனைப் பிரிந்து தனித்திருக்க இயலாத தலைவியின் நெஞ்சம் அச்சம் மிகுந்த அந்த மலை மீதுள்ள சிறுநெறியில் நள்ளிரவில் அவனுடன் நடக்கவே மனம் விரும்புகிறது என்றது காமத்தின் கொடுமுடியாகும். அப்படிச் செல்வதும் தலைவனது அடிகள் கல்லினால் துன்பமடையக் கூடாது என்ற பரிவினால் அவனது தளிர் அடி தாங்காமல் போகும் என்ற கருத்தின் வழியாக கபிலர் இக்காம உணர்ச்சியைப் பின்னும் பன்மடங்காகச் செய்கிறது எனத் தலைவியின் நெஞ்சம் துன்பப்படுகிறது. இங்கே கதையின் உச்சம் ஆரம்பமாகிறது.

**அலர்**

தலைவியைச் சந்திப்பதற்காக தலைவன் இரவில் வந்தான். அவன் வழக்கம்போல் அவளைச் சந்திக்கும் இடத்தில் மறைவாக வந்து நின்றான். அதை அறிந்தாள் தலைவி. தோழியிடம் ஊரார் உரைக்கும் பழியைப் பற்றி உரைத்து, தலைவன் நள்ளிரவிலே, தேர் மீது ஏறிக்கொண்டு இங்கு வந்து போவதை என்னுடன் விளையாடும் பெண்கள் அறிந்துவிட்டனர். அவர்கள் வாயிலாக இச்செய்தி ஊரார்க்கும் தெரிந்துவிட்டது. அவர்கள் இப்பொழுது எனக்கும் தலைவனுக்கும் உள்ள காதலைப் பற்றி பேசத் தொடங்கி விட்டனர். ஆதலால் இனி அவன் நம்மை மணம் புரிந்து கொண்டால்தான் பழியின்றி வாழலாம். தலைவியின் இச்செய்தியைப் பற்றிக் கூறும் சேந்தன் கீரனார் பாடலாவது,

*"அலர்யாங் கொழிவ தோழி பெருங்கடற்*
*புலவுநா றகன்துறை வலவன் தாங்கவும்*
*நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர்*
*யான்கண் டனனோ விலனோ பானாள்*
*ஓங்கல் வெண்மணற் றாழ்ந்த புன்னைத்*

*தாதுசேர் நிகர்மலர் கொய்யும்*
*ஆய மெல்லா முடன்கண் டன்றே"* *(குறுந்.311)*

பெரிய கடலின் புலால் நாற்றம் வீசுகின்ற துறையின் அருகே தலைவன் தேர் வந்தது. கல்லென்ற ஓசையுடன் விரைந்து வந்த இத்தேர் தேரோட்டும் பாகானாலும் தடுக்க முடியாமல் விரைவிலேயே திரும்பி போய்விட்டது. இந்தத் தேரை நள்ளிரவிலே நான் பார்த்தேனா? இல்லையோ அதைப் பற்றிக் கவலையில்லை. உயர்ந்த வெண்மையான மணற்குன்றிலே பரவி வளர்ந்திருக்கின்ற புன்னை மரத்திலேயுள்ள மகரந்தம் பொருந்திய பிரகாசம் உள்ள மலர்களைக் கொய்யும் கூட்டமான பெண்கள் அனைவரும் அந்தத் தேரின் போக்குவரவைக் கண்டனர். ஆதலால் ஊர் எங்கும் நம் காதல் நிகழ்ச்சி வெளிப்பட்டு பரவிவிட்டது. ஊரார் நம்மைப் பற்றி பலவாறு ஏதோதோ பேசி பழிச்சொல் சொல்லுகின்றனர் என்றாள் தலைவி. தலைவியின் ஊரலர் கதைப்போக்கின் அடுத்த உச்சக் கட்டத்துக்கு எடுத்துச் செல்கிறது.

**இற்செறித்தல்**

"தலைவியது தோற்றப் பொலிவு கண்டும், அவளைப் பற்றி ஊரவர் குறிப்பாகப் பேசிக் கொள்வதைக் கேட்டும் தலைவி தன் இல்லத்தை விட்டு விளையாடல் முதலியவற்றிற்குப் புறம் செல்ல இயலாதவாறு செவிலி அவளை இல்லத்திற்குள்ளேயே தங்கச் செய்தல்.

*"காப்பும் பூண்டிசின் கடையும் போகலை*
*பேதை அல்லை மேதைஅங் குறுமகள்"* *(அகம்.7)*

என்றாற்போலச் செவிலி கூறி, இற்செறிப்பாள்."[6] இது இற்செறித்தல் எனப்படும்.

இற்செறிக்கப்படுவேனேன்று அஞ்சும் தலைவியை ஆற்றுவிக்கும் தோழி வாயிலாக,

*"கானல் பெண்ணைத் தேனுடை அழிபழம்*
*வள்ளிதழ் நெய்தல் வருந்த மூக்கிறுபு*
*அள்ளல் இருஞ்சேற்று ஆழப் பட்டெனக்*
*கிளைக்குருகு இரியுந் துறைவன்"* *(நற்.372:1-4)*

என்ற பாடலில், பனம்பழம் நெய்தல் வருந்தச் சேற்றில் விழகண்டு குருகினம் பறந்தோடும், தலைமகன் களவொழுக்கம் கெட நின்னை மணப்பின் அலர்வாய்ப் பெண்டிர் தூற்றுதல் என்ற உள்ளுறைக் குறிப்பினால் தலைவியை விரைவில் வரைந்து கொள்ளல் வேண்டும் என்பதை புலப்படுத்துகிறது.

**வெறியாட்டு**

"களவுக்காலத்தில் பிரிவினால் வேறுபட்ட தலைவியை நோக்கி இது முருகனால் ஆயதோ என முருகனுக்குப் பலி பூசனை செய்வதை வெறியாட்டு என்பர்"[7] என விளக்கம் அளிப்பர் உரையாசிரியர்.

களவிடையீட்டினால் தலைவி உணவும், உறக்கமும் துறந்து உடல் வேறுபடுகின்றாள். தாயோ தன் மகள் புனங் காக்கச் சென்ற இடத்தில் அணங்கு வருத்தினளோ என வருந்தி அதனை அறிவதற்கு வேலனை அழைத்து வெறியாட்டு நடத்துகின்றாள். தாயின் இம்மன நிலையைச் சிறைப்புறமாக நிற்கும் தலைவனுக்கு உணர்த்தி வரைவுகடாவுகிறாள் நற்றிணையில் தோழி ஒருத்தி,

*"கூறின் எவனோ தோழி வேறுணர்ந்து*
*அணங்கறி கழங்கிற் கோட்டங் காட்டி*
*வெறியென உணர்ந்த உள்ளமொடு மறிமறுத்து*
*அன்னை அயரும் முருகுநின்*
*பொன்னேர் பசலைக் குதவா மாறே"* *(நற்.47:7-11)*

இப்பாட்டில் மகளின் நோயை அறிந்து, அதனை போக்க விழையும் தாயின் துடிப்பும் வெளிப்படுகிறது என நல்வெள்ளியார் பாடல் மூலம் அறியமுடிகிறது.

**சிக்கல்**

கதையின் மையப்பொருளாக சிக்கல் விளங்குகிறது. தலைவனைத் தோழி இரவில் வருவானைப் பகலில் வா என்றாலும், பகலில் வருவானை இரவில் வா என்றும், குறி மறுத்தல், அல்ல குறிப்படுதல் போன்றவற்றின் மூலம் தலைவனுக்கும் தலைவிக்கும் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படாமல் இருப்பதால் சிக்கல் ஏற்படுகிறது.

## குறியில் வரும் தலைவன்

களவினைத் தாய் அறிந்தமையும், தலைவி இனி பகற் குறிக்கண் வர இயலாது தடுக்கப்பட்டமையையும் அறிகிறான் தலைவன். தலைவினால் கிடைக்கும் இன்பம் நுகர்ந்து வரும் தலைவன், இனி அத்தகைய சந்திப்பு கிடைக்காது என்று தெரிந்தால் வரைவிற்கு முயல்வான் என்பது தோழியின் கணிப்பாகும். இதனால் தோழி இரவுக்குறி, பகற்குறி அமைக்கிறாள்.

## இரவு வருவானைப் பகல் வருக எனல்

களவின்பத்தை பெரிதும் விரும்பி, மணந்து கொள்வதில் கருத்தில்லாமல் இரவுக்குறியிடத்து வந்து நாளும் வரும் தலைவனை நோக்கித் தோழி, இரவுக் குறியில் வருவதால் உண்டாகும் துன்பத்தை எடுத்துக்கூறி, அதனை மறுத்து நீ பகற்குறியில் வருக எனச் சொல்லி அதற்கும் இடையூறு உள்ளது என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறாள் தோழி என்பதை,

*"பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்று*
*கராஅம் துஞ்சும் கல்உயர் மறிசுழி*
*மராஅ யானை மதம்தப ஒற்றி*
*................ ..................................*
*பழம்தூங்கு நளிப்பின் காந்தள்அம் பொதும்பில்*
*பகல்நீ வரினும் புணர்குவை அகல்மலை*

(அகம். 18:2–4, 15–16)

என்ற பாடல் உணர்த்துகிறது. அதாவது, தாய் தன் கண்களை விட இவளிடம் அன்புடையவள். எங்காவது இவள் செல்வதைக் கண்டால் தந்தை 'இளைய மகளே! உன் சிறிய அடி சிவக்க எங்கே செல்கிறாய்? எனக் கேட்பான்.

யானையின் மதமும், காட்டாற்று வெள்ளத்தை நீ நீந்தி இரவில் வரும்போது தலைவி வருத்தப்படுவாள். நீ ஒருநாள் வழியில் துன்பம் அடைந்தாலும் மறுநாள் என் தோழி உயிர் வாழமாட்டாள். தலைவிக்கு ஏதேனும் ஊறு நேர்ந்தால் அவள் தாயோ, தந்தையோ, தோழியோ உயிர் வாழ மாட்டார்கள். எம்மலையில் பழங்கள் உள்ள, காந்தள் மலர்ந்துள்ள புதரில் பகற்பொழுதில் வருவதால் தலைவியின் தோளைப் பெறுவாய் எனக் கூறிப் பகற்குறிக்கண் வருமாறு கபிலர் பாடல் வழி உரைக்கிறாள் தோழி. எனவே தங்கள் அனைவருக்காகவும் இரவில் வருவதைத் தவிர்த்து, பகலில் வரைவோடு வருக என்கிறாள்.

பகலில் தேன் எடுக்க வருபவர், பழம் பறிக்க வருபவர், பூக்கொய்ய வருபவரால் பகற்குறி அரிதாகும் எனக் குறிப்பினால் தலைவனிடம் வரைந்த கொள்ளுமாறு வலியுறுத்துகிறாள்.

தலைவனைக் குறியில் நிறுத்தி, அவன் அன்பில்லாதவன் என்றும் அருளில்லாதவன் என்றும் அவளால் கூறப்படும் கடிந்துரைகள் தோழி

எண்ணியவாறே தலைவனின் தன்மான உணர்வைத் தூண்டுபவையாய் அமைந்து, அவன் தலைவியைச் சந்திக்க அடுத்த முறை வரும்போது வரைவொடு புகுவான் என்றும் எண்ண வைக்கின்றன.

## பகல் வருவானை இரவில் வருக எனல்

ஒரு தலைவனும் தலைவியும் பகற்பொழுதில் தோட்டத்தில் கண்டு மகிழ்ந்தனர். இனி இவ்வாறு அடிக்கடி சந்திக்க முடியாத நிலைமை உண்டாயிற்று. இரவில் இருவரும் சந்தித்தால்தான் நீண்ட நேரம் சேர்ந்து அளவளாவ முடியும் என்று தலைவி நினைத்தாள். தன் நினைப்பை அவள் குறிப்பாகத் தோழிக்குத் தெரிவித்தாள். தோழி பகலிலே வந்து போகும் தலைவனைப் பார்த்து 'இனி நீ இரவிலே இங்கு வந்து தங்கிப் போகலாம் என்று கூறினாள்.

தலைவனே! பெரிய நீரே வேலியாகச் சூழ்ந்த எமது சிறிய ஊர் தங்குவதற்கு ஏற்ற நல்ல ஊராகும்.

*"இழையணிந் தியல்வருங் கொடுஞ்சி நெடுந்தேர்*
*வரைமரு ணெடுமணற் றவிர்த்துநின் றசைஇத்*
*தங்கினி ராயிற் றவறோ தெய்ய*
*தழைதா ழல்கு லிவள்புலம் பகலத்*
*தாழை தைஇய தயங்குதிரைக் கொடுங்கழி*
*இழுமென வொலிக்கு மாங்கட்*
*பெருநீர் வேலியெஞ் சிறுநல் ஊரே (குறுந்.345)*

தாழைகள் நிறைந்த, அலை வீசிக் கொண்டிருக்கின்ற வளைந்த நீரோடை இழும் என்று அலை ஒலித்துக் கொண்டிருக்கும் அழகான ஊர் எம் ஊராகும். ஆதலால், இரவிலே அலங்காரம் பூண்டு ஓடி வருகின்ற சிகரத்தையுடைய பெரிய தேரிலே ஊர்ந்து வரலாம். மலையைப் போல் காணப்படும் பெரிய மணல் மேட்டில் தேரை நிறுத்தலாம். அங்கே

இளைப்பாரலாம். தழையைப் பூண்ட இத்தலைவியின் தனிமைத் துயர் நீங்கும்படி இரவில் தங்கிச் செல்லலாம் என்று தலைவனை இரவு வருமாறு தோழி பணிக்கிறாள்.

## குறிமாற்றுதலின் நோக்கம்

இவ்வாறு பகற்குறியும், இரவுக்குறியும் விலக்குதலின் பயன் 'வரைவுகடாதலே' என்று தோழி தலைவிக்குக் கூறுவதாக குறுந்தொகையின் பாடல் உள்ளது.

தோழி, தலைவியைப் பார்த்து, "நீ அவனை மிகவும் விரும்புகிறாய் எனத் தெரிந்தும் இரவில் வராதே என மறுத்தேன். அவன் வரைந்துகொள்ள முற்படான் ஆதலால் இவ்வன்கண் செயலைச் செய்ய வேண்டியது இன்றியமையாததாயிற்று"[8] என்கிறாள்.

எனவே குறிமாற்றுதல் என்பது தலைவனுக்கு வேறொரு குறியைக் காட்டுவதுபோல் அமையினும் தோழி தான் வரைவுகடாதலை அவனுக்கு உணர்த்துவதற்காகவே குறி மாற்றப்படுகிறது. அந்நிலையில் தலைவன் 'இனியும் இவ்வாறு குறிமறுத்தல் கூறப்படுமாயின் அது தனக்கு இழுக்கு' என நினைத்து வரைவினை மேற்கொள்வான். அத்தகைய செயல்பாட்டைக் குறிமறுத்தல் உருவாக்கும் என்பதை அறிய முடிகிறது.

## குறி மறுத்தல்

பகற்குறி, இரவுக்குறி என்ற இரண்டில் ஒன்று மறுக்கப்பட்டு, மற்றொன்று நேர்தல் உண்டு. இதனை, குறி மாற்றி வரைவுகடாதல் என்று கூறுவர். இவ்விரண்டு குறிகளுமே இனி வாய்த்தல் அரிது என்று தோழி கூறும் பாடல்களைக் குறிமறுத்து வரைவுகடாதல் என்ற துறைக்கு உரியனவாக உள்ளது.

தலைவன் வரும் வழியின் இடையூறுகளைக் கூறி, இரவில் அத்தகைய பாதையின் வழியாகத் தலைவன் வருதலைத் தவிர்க்க வேண்டும் என்ற கருத்தமைந்த பாடல்,

*களிறுபொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை*
*ஒளிறுவான் பளிங்கொடு செம்பொன் மின்னுங்*
*கருங்கற் கான்யாற்று அருஞ்சுழி வழங்குங்*
*கராஅம் பேணாய் இரவரின்*
*வாழேன் ஐய மைகூர் பனியே (நற்.292:5-9)*

நல்வேட்டனார் பாடல் மூலம் புலனாகிறது. இப்பாடலை 'இரவுக்குறி மறுத்தது' எனக் குறித்தனர்.

பகலிலே தினைப் புனத்தில் அவர்களது கூட்டம் நடைபெற்றதால், இனி தினைக் கதிர்களைக் காவல் செய்ய வர இயலாது என்ற தோழியின் குறிப்பால் பகற்குறி மறுக்கப்பட்டது.

"கடலில் ஆயத்தாரோடு நீராடியும், தழையுடை உடுத்தியும் நாம் தலைவனோடு தங்கி வருதலைப் பற்றி ஊரில் அலர் கூறும் பெண்டிர் கூறுதலாகிய பேய் பிடித்துள்ளது. ஊர்ப்பெண்டிர் கூறும் சொல்லைக் கேட்டு நம் அன்னையும் நம்மை இற்செறித்தாள்"[9] என்று உலோச்சனார் பாடல் பகற்குறி மறுத்ததைக் காட்டுவதாக உள்ளது.

## இருகுறியும் மறுத்தல்

இரு குறிகளும் இனி களவிற்கு ஏற்றதல்ல. வரைதலே சிறந்தது எனக் கூறும் பாடல்களும் உள. கபிலரின் குறிஞ்சித் திணைப் பாடலொன்று இருகுறிகளும் மறுக்கப்பட்டச் செய்தியைத் தருகிறது.

*"கறங்கு வெள்அருவி பிறங்கு மலைக்கவாஅன்*
*தேம்கமழ் இணர வேங்கை சூடி*
*தொண்டகப் பறைச்சீர் பெண்டிரோடு விரைஇ*

*................ ........................ ..................*

*பகல்வரின் கவ்வை அஞ்சுதும் இகல்கொள*
*இரும்பிடி கன்றோடு விரைஇய கயவாய்ப்*
*பெருங்கை யானைக்கோள் பிழைத்து இரீஇய*
*அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள்*
*தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்*
*என் ஆகுவள் கொல்தானே பல்நாள்*
*புணர்குறி செய்த புலர்குரல் எனல்"* *(அகம்.118:1-12)*

அதாவது, வேங்கை மலரைச் சூடித் தொண்டகப் பறையின் தாளத்திற்கு ஏற்ப ஆடுவர். ஆடவர், பெண்டிரோடு கலந்து ஆடும் எமது சிறுகுடியில் நடமாடும் கண்காண வடிவம் கொண்டு வரும் முருகனை ஒப்ப, வலிய நாய் பின்னே வர பகலில் நீ வந்தால் ஊரார் அலர் தூற்றுவர் என அஞ்சுகிறோம். யானையைத் தாக்க கருதி புலி திரியும் அரிய வழியில் இரவில் நீ வந்தால் அதனாலும் அஞ்சுகிறோம். தினைப்புனத்தில் காணலாம் எனில் தினைக்கதிர்களும் முற்றின. இனி இரங்கத்தக்க என் தோழி என்ன ஆவாள். உனது அருளின்றி அவள் வேறு துணை இல்லாதவள் என்று தலைவனிடம் எடுத்துரைக்கின்றாள், தோழி.

## அல்ல குறிப்படுதல்

தலைமகனாலன்றிப் பிறிதொன்றால் நிகழும் குறியாகும். அல்ல குறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக் கொண்டு அவன் பின்பு வந்த வழி அவற்குத் தோழி சொல்லும் கபிலர்,

*"காமம் கடவ உள்ளம் இணைப்ப*
*யாம் வந்து காண்பதோர் பருவமாயின்*
*ஓங்கித் தோன்றும் உயர் வரைக்கு*
*யாங்கெனப் படுவது நம்மூர் தெய்யோ"* *(ஐங்.237)*

என்ற பாடல் வழி அறிய தலைவன் இரவில் வந்தான். தலைவியைக் காணாது வருத்தத்துடன் திரும்பினான். அவன் வாராதாகவே கருதிய, அவன் பின்பு ஒருகால் வந்தான். தோழி தலைவனை நோக்கி, எம்மிடை உண்டான காதலால், உள்ளம் வருந்தி யான் திரும்பிச் சென்றேன். இஃது உயர்ந்து தோன்றும் மலைக்கு நும்மூர் எவ்விடத்ததோ சொல்லுக எனத் தோழி கேட்பதாக உள்ளது.

**விழ்ச்சி**

கதையின் திருப்பத்தை வீழ்ச்சி தொடங்கி வைக்கிறது.

**தலைவனின் இயல்பைப் பழித்தல்**

இயல்பில் சான்றோராய் இருப்பவரால் பழிச்சொற்களைப் பொறுத்துக் கொள்ளுதல் இயலாது. சூழ்நிலை காரணமாக அவர்கள் அறியாமல் தவறு செய்தாலும், சுட்டிக்காட்டப்பட்டால் உடனே தம்மைத் திருத்திக் கொள்வர். தோழி தலைவனின் இயல்புகளைப் பழிப்பது போல் பேசினால் அவன் வரைவிற்கு விரைவான் என முடிவு செய்கிறாள். எனவே அவனுடைய களவு நீட்டியப்பின்னும் குறையைப் பலவாறாகக் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் எடுத்துக்காட்டுகிறாள்.

*"சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழ*
*மிருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பிற்*
*பெருந்தே னிறாஅல் கீறு நாடன்*
*பேரமர் மழைக்கண் கலிழத்தன்*
*சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்"* ***(ஐங்.214)***

தலைவியே, மலைநாடன் உனது பேரமர் மழைக்கண் நீர் சொரியுமாறு தன் நாட்டிற்குச் செல்ல நினைக்கிறான் என்றும் தன் பிரிவு தலைவியை வருந்த வைக்கும் எனத் தெரிந்தும் செல்கிறான் என்ற பழி தலைவன் மீது விழுவதை தெள்ளத் தெளிதின் புலனாகிறது.

“காதல் வளரும் தொடக்க நிலையில் காதலியின் உள்ளத்தைப் பண்படுத்தும் கடமை உடையவள் தோழி. திருமணம் செய்து கொள்ளாமல் காதலன் நாள் கடத்தியபோது கவலையுற்றாள். அந்நிலையில் ஒருபால் காதலனுக்குக் கடமையுணர்ச்சியூட்டி மற்றொருபால் காதலியின் உள்ளச் சோர்வைப் போக்கி வந்தாள் தோழி. உள்ளத்தே எவ்வளவு சோர்வுற்ற போதிலும் சில ஆழ்ந்த நம்பிக்கைகள் அசைக்க ஒண்ணாதவனாக விளங்கும். அவற்றைக் குறித்த பேச்சு எழும்போதெல்லாம் உள்ளச்சோர்வு நீங்கிவிடும். இந்த உண்மையை உணர்ந்த தோழி காதலியின் சோர்வைப் போக்கக் கருதி ஒரு முயற்சி செய்தாள். காதலியின் பெரு நம்பிக்கைக்கு உரியவனான காதலுனுடைய பண்புகள் சிலவற்றைப் பற்றி ஐயுற்றவள் போல் பேசத் தொடங்கினாள். “அவனை நம்புதல் தகுமோ” என்று ஐயுறுவாள் போல் தோழி கூறிய சொல் காதலியின் உள்ளத்தில் எழுச்சியை விளைவித்தது. சோர்வு இருந்த இடம் தெரியாமல் அகன்றது.

தலைவனுடைய நல்லுறவைக் குறித்து நீ ஐயுறுகின்றாயோ? ஒரு காலும் வேண்டா அவனோடு யான் கொண்ட நட்பு பெரிது. உயர்ந்தது. அளத்தற்கு அரியது. கற்பொழுக்கத்திற்கு வித்தாகிய உண்மைக் காதல் அவள் உள்ளத்தே நிறைந்திருந்தமையால் அவ்வாறு கூறினாள். அவள் உள்ளத்தின் தெளிவு கூறிய சொற்களில் புலனாகுமாறு அமைந்தது. காதலனோடு கொண்ட உறவின் பெருமையை நினைத்த அவள் நெஞ்சத்தில் பெரிய நிலவுலகம் உவமையாக நின்றது. அந்த உறவின் உயர்வை நினைத்தபோது வானம் தோன்றியது. அளத்தற்கரிய வெற்றியை நினைத்தபோது கடல்நீர் தோன்றியது. அவன் வாழும் மலையை நினைத்தபோதும் அவள் உள்ளம் பெருமிதம் எய்தியது. அந்த மலையில் இழைக்கப்படும் பெருந்தேனாக, அவற்றைத் தந்த மலர்கள் உயர்ந்த குறிஞ்சி மலர்களாக, அவளுடைய நினைவெல்லாம் சிறந்து விளங்குகிறது”[10]

என்பதை,

*“நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரற்*
*கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடனோடு நட்பே” (குறுந்.3)*

பாடல் உணர்த்துகிறது. கற்பு வழிப்பட்ட ஒரு பெண்ணின் உரமான நம்பிக்கையைப் புலவர் தேவகுலத்தார் இவ்வாறு எடுத்துரைத்துள்ளார். தலைவனைத் தோழி இயற்பழித்துக் கூறுவதால் வீழ்ச்சி தொடங்குகிறது. தலைவி நம்பிக்கையின் பெயரால் அவற்றை எதிர்கொண்டாள் என்பது அறியத்தக்கது.

## நொதுமலர் வரைவு

அயலார் மணம் பேச வருதல் நொதுமலர் வரைவு எனப்படும்.

களவின் தொடக்கத்தில் தலைவன் தலைவியைச் சந்திக்க ஏற்பாடு செய்யும்படி தோழியிடம் கேட்டு நிற்கிறான். ஆனால் தொடர்ந்த பல சந்திப்புகளின் பின்னர், களவு நீட்டித்தலை உணர்த்த தோழியும் தலைவியும் அவன் அக்களவிலேயே காலம் கடத்துவதை விரும்பவில்லை. அதனால், தலைவியை நொதுமலர் வரைவு கேட்டு வந்தனர் என்ற செய்தியைத் தெரிவிக்கின்றாள் தோழி.

ஐங்குறுநூறு பாடலொன்றில் தலைவன் உன்னால் விரும்பப்பட்ட தலைவியின் கண்கள் மிக்க நாணுடையவை. ஆதலின் பசந்து நீர் சொரிவன ஆயின என்கிறாள் தோழி,

*“சிறுகட் பன்றிப் பெருஞ்சின் வொருத்தலொடு*
*குறுங்கை யிரும்புலி பொரூஉ நாட*
*நனிநா ணுடைமைய மன்ற*
*பனிப்பயந் தனநீ நயந்தோள் கண்ணே” (ஐங்.266)*

இப்பாடலில் நொதுமலர் வரைவு குறித்த இரு குறிப்புகள் காணப்படுகின்றன.

நொதுமலர் வரைவு பிறந்தமையாலும் தன்னுறு வேட்கையைத் தானே கூறலாகாமையாலும் நாணமிகுதியால் தலைவியின் கண்கள் பசந்த நீர் சொரிந்தன என்பது முதற் குறிப்பாகும்.

தலைவனின் நாட்டைப் பற்றித் தோழி குறிப்பிடும்பொழுது "சினம் பொருந்திய ஆண் பன்றியொடு பெரிய புலி பொருந்துகின்ற நாடனே! என்பது இரண்டாவது குறிப்பாகும். எளிதில் தன்னால் வீழ்த்தப்படுகின்ற ஆண் பன்றியோடு வலிய புலி பொருதும் செயல் நாணத்திற்குரியது. அது வீரம் அல்ல. அதுபோல் வேற்று வரைவு கண்டும் ஆண்மையோடு பெண்கேட்டு வாராமல் தலைவன் களவிலேயே ஒழுகுதல் நாணமுடைய செயல் என்பது தோழியின் கூற்றில் அமைக்கப்பட்ட உள்ளுறை மூலம் தெளிவாகிறது. நற்றிணைப் பாடல் மூலம் தோழி

***"யாரை, எலுவ யாரே நீ எமக்கு***
***யாரையும் அல்லை நொதுமலாளனை***
***அனைத்தால் கொண்க நம்மிடையே நினைப்பின்***
***கடும்பகட்டு யானை நேடுந்தோ்க் குட்டுவன்***
***.................................................................................***
***ஆபுலம் புகுதரு பேர் இசை மாலைக்***
***கடல்கெழு மரந்தை அன்னஎம்***
***வேட்டனை அல்லையால் நலம் தந்து சென்மே" (நற்.395)***

தலைவனே எம்மை நீ விரும்பி ஒழுகவில்லையாதால் உன்னால் இழக்கப்பட்ட தலைவியின் நலனையாவது திரும்பக் கொடுத்துச் செல் என்று கூறுகிறாள். மணம் பேசி வரும் ஆண்மை மிக்கோனுக்கு ஈடாக இவளும் அழகுடையவளாக இருக்க வேண்டும். ஆதலால் இவள் நலனைத் தந்து செல் என்பதை உட்கருத்தாகக் கொண்டு தோழி புலப்படுத்துகிறாள்.

## முடிவு

இத்தகைய கூற்றுகள் அதாவது பகற்குறி மறுத்து, இரவுக்குறி மறுத்து, ஊரின் அலர் கேட்டு, இற்செறிப்பு செய்து, நொதுமலர் வரைவு வரை நிகழ்த்தப்படுகின்றன. இத்தகைய செயல்பாடுகள் மூலம் தலைவனின் மான உணர்வினைத் தூண்ட அவன் வரைவோடு வருவான் என்பது தலைவி, தோழி இருவரின் கருத்தாகும். பிறர் மகள் பேசி வருகிறார் என்ற குறிப்பு தலைவியின் ஆற்றாமயையும், பெருமையையும் உயர்த்திக் கூறுதற்கும் கையாளப்பட்டிருக்கிறது. இத்தலைவியின் மதிப்பு உனக்குத் தெரியவில்லைப் போலும், ஆனால் அதனை அறிந்த அயலார் மணம் பேசி வந்துள்ளனர் எனத் தலைவனிடம் கூறுவதற்குரிய உத்தியாகவும் தோழி இதனைப் பயன்படுத்தி வரைவுகடாவ மேற்கொள்ளும் உத்தியாக முடிவு எண்ணத் தோன்றுகிறது.

## தொகுப்புரை

- ✡ தொல்காப்பிய பொருளதிகாரம் மக்கள் வாழ்க்கைக்கு இலக்கணம் இயம்புவது. இவருக்கு இன்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும், இன்னென்ன நெறிகள் இப்படிதான் இருக்க வேண்டும் என்பதை வரையறை செய்துள்ளதை அறிய முடிகிறது.
- ✡ ஆண் மகனுக்குரிய நெறிகளாக ஒத்த குலத்தின் பிறப்பும், பிறந்த குடிக்கேற்ப பெருமையாக நடந்து கொள்ளும் பண்பும் வேண்டும். ஒத்த வயதும், இளமையும், உள்ளங் கவரும் பொருத்தமான உடல் வனப்பும் வேண்டும், பேராண்மை, ஆட்சித்திறம் உள்ள ஒற்றுமை வேண்டும் என்று கூறியுள்ளது.
- ✡ பெண் மகளுக்குரிய நெறிகளாக அச்சமும், நாணமும், மடனும் நிச்சயம் பெண்பாலுக்கு வேண்டும். பெண்ணுக்கு முதன்மை அளிப்பது, இல்லாட்சிக்குப் பொறுப்பாக்குதல், பெண்ணை

வணங்குதல், பெண்ணைக் காத்தல் போன்ற பண்புகளைப் போற்ற வேண்டும் என்பது தெளிவாகிறது.

✡ ஒருவனிடம் உள்ள நல்ல குணங்களைப் போற்றியும், கெட்ட குணங்களைத் திருத்திக் கொள்ளும் பண்பு இருக்க வேண்டும் என்பதும் ஏற்றுக் கொள்ளத்தக்கது.

✡ தலைவன் சிறைப்புறமாக நிற்கத் தோழியிடம் கூறுவாள் போலத் தலைவி தலைவன் நிற்பதை அறிந்து, அவன் வரைவினை உணர வேண்டும் என்பதற்காகவே பல கூற்றுக்களை அமைக்கிறாள். அவை அனைத்தும் தோழியால் தலைவன் சிறைப்புறமாக நிற்குங் காலத்துக் கூறப்பட்ட வரைவுகடாதற் கருத்துகளைப் போலவே அமைக்கப்படுவதால் அமையும். 'தலைவியின் வரைவுகடாதற் கூற்றுகள்' என்று இவ்வாய்வினால் கொள்ளப்பட்டுள்ளன.

✡ இவ்வாய்வின் மூலம் கதைப்போக்கு எவ்வாறு தொடங்கி, சிக்கல் அடைந்து உச்சம் பெற்று வீழ்ச்சி நிலையில் முடிவுடன் நிறைவுறுகிறது என்பதும் அறியப்படுகின்றது.

✡ அலரினைக் காரணம் காட்டி, தலைவன் அலருக்குக் காரணம் தானே என உணர்ந்து, அவ்வலரினை நீங்குவதற்குரிய வரைவிற்கும் தானே முயல வேண்டும் என எண்ணுதல்.

✡ இற்செறிப்பின் மூலம் இனி களவில் தலைவியைக் காணுதல் இயலாது. தலைவியின் காவல் கடுமையை வரைவினால் மட்டுமே நீக்க இயலும் என்று உணர்தல்.

✡ அன்னையின் சினத்தைக் கூறி, தலைவியின் மீது பரிவுணர்வு மிகும். அன்னையின் சினத்தால் இற்செறிக்கப்பட்ட தலைவி தான் களவின் பயன் பெறாது வறிதே செல்வதை அறிந்து வருந்துகிறாள் என்பதைக் கேட்ட தலைவன் மேலும் மகிழ்ச்சி அடைதல்.

- ✡ வெறியாட்டு எடுப்பதன் மூலம் தாய் வெறியாடல் எடுக்க நினைக்குமளவிற்குத் தலைவி சோர்ந்தாள் என்பதை அறிந்த தலைவனின் மனதில் அவள்மீது பரிவும் அன்பும் ஏற்படுதல்.
- ✡ குறியில் நிறுத்தும்போது, தோழி இப்படிக் களவில் சந்தித்தலை மட்டுமே நினைக்கிறாயே, வரைவிற்கு முயலவில்லையே என்று தலைவனிடம் சிறு கடுஞ்சொற்களைக் கூறி, தலைவியைச் சந்திக்கச் செல்லும் சூழலில் தோழியின் சொற்கள் அவனை வருத்துதல்.
- ✡ இன்றும் களவுக்கூட்டம் மறுக்கப்பட்டு விடுவோமோ என்ற அச்சமும் சேர்வதால், இனி வரைவிற்கு முயல்வேன் என்று உறுதி மொழியைத் தருகின்றான் தலைவன். உறுதிமொழி காக்கப்பட வேண்டும் என்ற உணர்வு அவனை வரைவோடு வரச் செய்தல்
- ✡ குறிமாற்றி, தோழி இரவுக்குறி மறுத்து பகற்குறி நேர்தல் போலவும், பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்தல் போலவும் பேசுவாள். ஆயினும் அறிவு நுட்பம் வாய்ந்த தலைவனுக்கு இவை குறி மறுக்கப்படும் சூழ்ச்சி என்பது புரியும். இவ்வாறு மறைமுகமாக களவுச் சந்திப்பைத் தவிர்த்து, மீண்டும் மீண்டும் தன்னை வேறொரு குறியில் வருமாறு கூறுவதைத் தனக்கு இழுக்காக நினைப்பான். எனவே வரைவிற்கு விரைந்து வருதல்.
- ✡ குறி மறுத்து, இருகுறிகளும் இனி வாய்க்காது என்று தோழி கூறுவதைக் கேட்டும், தலைவன், இக்களவு இடையீட்டினால் தலைவி இறப்பாள் என்றும் தோழியால் உணர்கிறான். தோழியின் இச்செயல் அவனை வரைவோடு வரச் செய்தல்.
- ✡ தலைவனின் இயல்பைப் பழித்து, தனது உயரியல்புகளை அறியாமல் களவு நீட்டிப்பின் காரணத்தால் மட்டுமே தன்னைத் தோழி பழிக்கும் செயல், இயல்பான அவனது மான உணர்வைத் தூண்டிவிட,

இத்தகைய பழிக்கும் கூற்றுகளிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள வரைவோடு வருதல்.

✡ தலைவன் 'வரைவேன்' என்று உறுதி கூறியும் வரையாது களவை நீட்டித்தமையால் அவனது இச்செயல் சான்றோர்க்கு உரியதன்று என்பதை நீதி கூறும் முறைபோல மறைமுகமாகத் தோழி எடுத்துரைப்பாள். 'நீ வரைவோடு வரின் தமரும் உன்னை ஏற்பார்' என்று உறுதி கூறுவது போலவும் தோழியின் கூற்று அமைந்து, தலைவன் மனத்துணிவு பெற்று வரைவோடு வருதல்.

✡ நொதுமலர் வரைவு கூறி, பிறர் மகட்பேசி வரக்கண்டும் தலைவன் வரைவிற்கு முயலாமல் இருப்பது அவனது ஆண்மைக்கு ஏற்ற செயலன்று எனக் காட்டுகின்றாள் தோழி.

✡ தலைவியின் உயர்வை அறிந்ததால் நொதுமலர் மணம் பேசி வந்தனர் எனத் தலைவியை உயர்ந்தவளாகக் காட்டி, அவளை விரைந்து வரைவு கொள்வதற்கான உணர்வையும் தூண்டுகிறாள். இவை தலைவன் தலைவியை விரைந்து வரைவுக்கு ஏற்பாடு செய்ய முயலுகின்றன. இச்செய்தியின் மூலம் அக்காலச் சமுதாயத்தின் பண்பாடு, மாந்தர் தம் அறிவுத்திறம், பாடல்களை அமைத்த புலவர்களின் நுண்மான் நுழைபுலம் ஆகியவற்றின் வழி அறிய முடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. வரதராசன் மு., இலக்கிய மரபு, பக்.6–7.
2. தமிழண்ணல், தொல்காப்பியர் விளக்கும் திருமணப் பொருத்தம், ப.27.
3. வரதராசன் மு., இலக்கிய மரபு, ப.29.
4. விஜயபாரதி எஸ்., கபிலர் கவிநயம், ப.23.
5. அகம்.300.
6. கோபாலையர் தி.வே., தமிழ் இலக்கணப் பேரகராதி, பொருள் அகம்–1, ப.31.
7. இராமையா பிள்ளை, நா., நற்றிணை மூலமும் உரையும், ப.68.
8. குறுந்.71.
9. அகம்.20.
10. வரதராசன் மு., குறுந்தொகைச் செல்வம், பக்.38–39.

இயல் - மூன்று

# புலவர்களின் ஆளுமைத்திறன்

## முன்னுரை

ஒரு மனிதன் சமுதாயத்தில் நடந்து கொள்ளும் பாங்கு அவனது செயல்பாடுகள், அறிதல் திறன், நினைவாற்றல் முதலியவற்றைக் கொண்டு ஆராய்வதே உளவியலாகும்.

மனிதன் மனவளர்ச்சிக்கேற்ப அவனது சிந்தனைகள் அமையும். மனதை மூன்று வகையாகப் பிரிப்பர். நனவு மனம், நனவிலி மனம், நனவடங்கு மனம் என்பனவாகும்.

உளவியலுக்கும் இலக்கியத்திற்கும் நெருங்கியத் தொடர்பு உண்டு. கவிஞனின் கவிதை, கதை, நாடகம் உணர்ச்சிப்பிழம்பின் வெளிப்பாடாகும். கவிதை உடலியல் சம்பந்தமானது. நல்ல கவிதையை உடலில் ஏற்படும் மகிழ்ச்சியைக் கொண்டு அறிய முடிகிறது.

“உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் வாக்கினிலே ஒளியுண்டாம்”[1] என்பார் பாரதி. ஒரு கவிஞனின் அகவுணர்வில் ஆழமாகப் பதிந்திருக்கும் அழகுணர்வு, காதல் வேட்கை, அவலம், வெற்றிப் பெருமிதம் முதலான உணர்வுகள் கவிதையாக உருவெடுக்கின்றன. இப்படைப்பின் மூலம் படைப்பாசிரியரின் மனநிலையை நன்கு அறிந்து கொள்ள முடியும்.

## உளவியல்

மனித மனத்தின் நடத்தையை அறியும் ஒரு விஞ்ஞானவியலாகும். மனித மனத்தின் எண்ணங்களையும், நடத்தைகளையும் ஆராய்வது

உளவியல் எனப்படும். "மனிதனின் நடத்தையானது குறித்த சூழ்நிலைத் தூண்டல்களினால் ஏற்படுவதன் காரணமாக சூழ்நிலை மனிதனின் நடத்தையை அறியவும் விவரிக்கவும் முக்கியமாக அமைகிறது".[2] என சி. மறைமலை அவர்களின் கருத்து குறிப்பிடத்தக்கது. இலக்கியங்கள் மனிதமனத்தின் வெளிப்பாடாக அமைந்து மற்ற மனிதர்களின் மனங்களைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

## உளவியல் அணுகுமுறை

இலக்கியங்களில் காட்டப்படும் மனித மனங்களை ஆராய உளவியல் அணுகுமுறை பயன்படுகின்றது. உளவியல் நோக்கில் இலக்கியத்தைப் பல்வேறுபட்ட கோணங்களில் அணுகி ஆராய முடியம்.

இயல்புநிலை, கால வளர்ச்சி நிலை, உணர்ச்சி நிலை, மயக்க நிலை தனிநிலை, ஐயநிலை, கூட்டுநிலை, சமூகநிலை, சுற்றுச்சார்பு நிலை, உறவுநிலை போன்ற பல நிலைகள் அடிப்படையாகக் கொண்டு உளவியல் இலக்கியத்தை அணுக முடியும்" [3] என்பது இரா.காஞ்சனா அவர்களின் கருத்தாகும்.

## உளவியல் அறிஞர்கள்

ஆளுமை என்னும் சொல்லுக்குப் பல்வேறு உளவியல் அறிஞர்கள் விளக்கம் தந்துள்ளனர். அதில் காரல்யுங், எரிக்சன், அட்லர், மக்டூகல் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்" [4] ஆவர்.

### காரல்யுங்

"பேசுதல், எண்ணுதல், நினைத்தல், நேசித்தல் ஆகிய செயலைச் செய்கின்ற முறையில் ஒருவரின் ஆளுமை வெளிப்படுகிறது"[5] என்கிறார்.

**எரிக்சன்**

“மனித ஆளுமையை நிர்ணயிப்பதில் மனத்தின் செயற்பாடுகளை மட்டும் முதன்மைப்படுத்தாமல், சமூகக் காரணிகளுக்கும் பங்கு உண்டு”[6] எனக் கூறுகிறார் எரிக்சன்.

**மக்டூகல்**

மக்டூகல் ஆளுமைப் பற்றி கூறியதாவது, “ஆளுமை என்பது ஏறக்குறைய நிலைத்தன்மையுடையது. ஒருவனின் ஒழுக்கம், நுண்ணறிவு, உடல் அமைப்பு – ஆகிய யாவும் சேர்ந்த அமைப்பு சூழ்நிலையில் அவனுடைய தனித்தன்மை வாய்ந்த பொருத்தப்பாட்டினை உண்டாக்குகிறது”[7] என விளக்கமளிக்கிறார்.

**ஆல்போர்ட்**

ஆல்போர்ட் அவர்கள் “ஆளுமை என்பது ஒருவனுடைய உடற் பண்புகள், மனப்போக்குகள், சமூக அறநெறிப் பண்புகள் போன்ற எல்லாப் பண்புகளின் கலவையைக் குறிக்கிறது மற்றும் உடல் தோற்றம், அனுபவம், நினைவுகள், கற்பனைகள், பழக்க வழக்கங்கள், பற்றுகள், ஆர்வங்கள், நடையுடை பாவனை, வாழ்க்கை முறை போன்றன யாவும் அடங்கியதே ஆளுமை. உடல் உள்ளப் பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பே ஒருவனுடைய ஆளுமை”[8] எனக் குறிப்பிட்டுள்ளார்.

**ஐசன்க்**

ஐசன்க் என்பவர் “ஆளுமை என்பது ஏறக்குறைய நிலைத் தன்மையுடையது. ஒருவனின் ஒழுக்கம், மனநிலை, நுண்ணறிவு, உடல் அமைப்பு ஆகிய யாவும் சேர்ந்த அமைப்பு சூழ்நிலையில் அவனுடைய

தனித்தன்மை வாய்ந்த பொருத்தப்பாட்டினை உண்டாக்குகிறது''[9] என மனித ஆளுமையை விளக்குகிறார்.

## இலக்கியமும் உளவியலும்

இலக்கியம் படைப்பாளியின் உள்ளார்ந்த உணர்வு, வாழ்வியல் அனுபவங்களைக் கொண்டு படைக்கப்படுகின்றது. மனித வாழ்க்கையில் இரண்டறக் கலந்த உளவியல் சிந்தனை, இலக்கியம் உருவாகக் காரணமாக அமைகின்றது. உலகில் உள்ள எல்லா மொழிகளுக்கும் உளவியல் தனித்த இடம் வகிக்கிறது.

''உள்ளத்தின் வழிமுறைகளை ஆராய்கின்ற உளவியல் இலக்கியம் பற்றிய ஏற்புடையதாக இருக்க முடியும்''[10] என்று யுங் கூறுகிறார்.

''மனித உள்ளத்தின் உணர்வே எல்லா அறிவியல்களுக்கும், கலைகளுக்கும் கருவறையாக விளங்குவது''[11] மனித மனத்தின் செயல்பாடு அனைத்துக் கலைகளுக்கும் கருவறையாக அமைகின்றது என சாரதாம்பாள் விளக்கம் தருகிறார்.

இலக்கியத்திற்கும் உளவியலுக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதை, ''வாழ்க்கையைப் படம்பிடிப்பது இலக்கியம், வாழ்க்கை என்பது உள்ளத்தைப் பெரிதும் சார்ந்து அமைகிறது''[12] என்று அறிய முடிகிறது.

''இலக்கியமும் உளவியலைப் போலவே மனித மனத்தின் பன்முகச் செயற்பாட்டைப் பல்வேறு நிலைகளில் எடுத்துக்காட்டுகிறது''[13] என ரெனிவெலாக் இலக்கியத்திற்கும் உளவியலுக்கும் உள்ள தொடர்பை நான்காக வகைப்படுத்துகிறார்.




**படைப்பாளர் உளவியல்**

படைப்பாளியின் படைப்பை சிந்தனையைப் புரிந்து கொள்வதில் படைப்பாளரின் உளவியல் உதவுகிறது. படைப்பாளன் தன் எண்ணங்களையும் விருப்பங்களையும் அனுபவங்களையும் அனுபவித்த இன்ப துன்ப உணர்வுகளையும் பாத்திரப் படைப்பில் பிரதிபலிக்கச் செய்கிறான்.

"கலைப் படைப்பில் ஆழ்ந்த பொருள்களையும் ஒரு மனிதன் என்ற முறையில் கலைஞனின் மன உணர்வுகளையும் உளவியல் ஆராய்ச்சியை ஆராய முடியும்"[14] என ப்ராய்டு கருத்து தெரிவித்துள்ளார்.

படைப்பாளியின் மன இயல்புகள் அவனது படைப்பில் பாத்திரங்களின் இயல்பான பண்பின் மூலம் வெளிப்படுகின்றன என நம்பும் பொழுது படைப்பாளன் தொடர்பான உளவியல் வளர்கிறது.

**படைப்பாக்க உளவியல்**

படைப்பாக்க உளவியல் என்பது படைப்புச் செயலுக்கும் அப்படைப்பாளனின் உளவியலுக்கும் உள்ள தொடர்பை விளக்குவதாகும். படைப்பாளனின் வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்கள் ஆழ்மனத்தில் பதிந்து அது படைப்பாக வெளிப்படுகிறது.

## படைப்பில் வரும் பாத்திரங்களின் உளவியல்

படைப்பில் வரும் பாத்திரங்களின் மனமுறிவு, உரையாடல் கனவு, வாழ்வியல் நடைகள், நடத்தைகள், கருத்துகள் போன்றவற்றைப் பற்றிய ஆய்வினைப் பாத்திரங்களின் உளவியல் மூலம் அறிய முடிகிறது.

இலக்கியப் பாத்திரங்களின் வழி படைப்பாளி தம் விருப்பப் புனைவுகளை நிறைவேற்றிக் கொள்ள இவ்வுளவியல் பயன்படுகிறது.

## வாசகர் உளவியல்

ஒரு படைப்பைப் படிப்பவனது கல்வி அனுபவம் இலக்கியத்தில் உள்ள புலமை, வாழ்வியல் அனுபவங்கள், இலக்கியத்தை அணுகும் முறைகள் இவற்றின் வாயிலாக வாசகன் வாசகத்தைப் புரிந்து இன்பம் காண்கிறான் என்பது வாசகர் உளவியலாகும்.

ஒரு சொல்லுக்குப் பல பொருண்மைகள் உண்டு. இதனைப் புரிந்து கொள்ள வாசகர் உளவியல் உதவும். காலச் சூழலுக்குக்கேற்பவும், வாசகர்களின் கலை நுகர்வுக்கு ஏற்பவும், காலத்தின் தேவைக்கேற்பவும் படைப்பிலக்கியத்தை தரவேண்டிய கட்டாயம் படைப்பாளனுக்கு ஏற்படுகின்றது.

## இலக்கியத்தில் உளவியலின் பங்கு

* படைப்பில் படைப்பாளியின் சுய வரலாறை அறிய முடிகிறது.
* இலக்கிய படைப்பாக்கம் அல்லது தோற்றம் பெறுவதை உளவியல் காரணம் கொண்டு அறிய முடிகிறது.
* இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தரின் உணர்ச்சி வெளிப்பாட்டினை விளக்க முடிகிறது.

ஆகியன இலக்கியத்தில் உளவியலைப் பொருத்திப் பார்ப்பதற்குரிய காரணங்களாகும்.

சங்க இலக்கிய அகத்திணைப் பாடல்கள் நூற்றுக்கு நூறு உளவியல் பற்றியனவேயாகும். ஏதேனும் ஒரு மனநிலையை அவை பாடுபொருளாய்க் கொண்டு விளங்குகிறது.

எனவே "உளவியல் கொள்கை பிராய்டு என்பவரின் உளவியற் பகுப்பாய்வுகளையும் கற்றுணர்ந்தால் சங்க இலக்கியக் கல்விக்கு அவை பெரிதும் துணை புரியும்"[15] எனத் தமிழண்ணல் குறிப்பிடுகிறார். சங்கப் புலவர்களின் அழகுணர்ச்சியும் அளவிற்குட்பட்ட புலனின்ப வேட்கையுமே அகப்பாடல்களில் கண்டு இன்புற முடிகிறது. சங்கப் புலவர்களில் தனிபட்டவர்களின் உளவியலைக் காண்பது இயலாததாகும். எனினும் கபிலர், பரணர், அம்மூவனார், உலோச்சனார் பற்றி ஓரளவு தனி மனவுணர்வுகளை அவர்தம் பாடல் மூலம் அறிய முடிகிறது.

இலக்கணமாய் இருந்தாலும், சங்க அகப் பாடல்களாக இருந்தாலும் அவை இலக்கணத்திற்கு முக்கியம் அளிக்காமல் துறைகளுக்குத் தரும் சிறப்பிலும் அகமாந்தரின் உணர்வுகளுக்கே சிறப்பிடம் தருகின்றன.

**அகமாந்தர்**

அகமாந்தரின் உளவியல் பண்புகள் அனைத்தையும் சங்க இலக்கிய வரைவுகடாதல் பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடியும். இதில் புலவர்களின் ஆளுமை வரைவுகடாதல் பாடல்கள் மூலம் குறிப்பிடப் படுகின்றன. இவற்றில் மூன்று கதாபாத்திரங்கள் மிக முக்கியமானவையாகும். சங்க அக இலக்கியங்களில் இடம் பெறும் அகமாந்தர்கள் தலைவன், தலைவி, தோழி போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

## அகமாந்தர் செயல்பாடு வழி ஆளுமை அறிதல்

அகமார்ந்தர் உணர்வுகளுக்குச் சிறப்புத் தருவன குறுந்தொகைப் பாடல்கள். மன உணர்வுகளை விளக்கும் பின்புலங்களுக்குச் சிறப்புத் தருவன அகநானூற்றுப் பாடல்கள். அகமாந்தர் மனவுணர்வை ஒரு தொடர்புப்படுத்திப் பார்க்கும் வாய்ப்புடையன. ஐங்குறுநூறு, கலி ஆகிய நூல்களின் பாடல்கள் இறந்த கால மரபுகளுக்கும், நிகழ்கால ஆக்கங்களுக்கும் இடையே கலைஞரின் கலைத்திறன் இணைப்பை உருவாக்கத் துணைபுரிகின்றன.

## தோழி மனவியல்

மனவியல் துறை சங்ககாலத்தில் இல்லை. மனவியல் கலைச் சொற்கள் சங்கத் தமிழருக்குத் தெரியாது. ஆனால் மனவியல் அடிப்படைகள் யாவும் அக்காலத்திலிருந்தன. சங்ககால மாந்தரில் தோழி மனவியல் கூறுகளைக் கையாண்டிருக்கிறாள் என்பது தெளிவாகத் தெரிகிறது.

## தோழி ஆளுமை

மனவியலில் ஆளுமை முக்கியமானதாகும். தன்னளவில் தன் பட்டறிவுக்கேற்றவாறு இயங்கும் தனித்த பண்பியல்களின் அமைப்பே ஆளுமை எனப்படுகிறது. இவற்றைப் புலவர் தம் பாடல்கள் வழி தோழி மூலம் எடுத்துரைக்கின்றார்.

## தோள் மெலிவு

வரைந்து கொள்ளும் விருப்பமின்றி களவின்பத்தைத் தொடரும் தலைவன் சிறைப்புறத்தானாகத், தலைவியின் துன்பநிலையை எடுத்துக்கூறித் தலைவனை வரைவிற்குத் தூண்டும் முகமாகப் பாடல் குறுந்தொகையில் அமைந்துள்ளது.

தலைவியின் துன்பத்தைத் தலைவி தானாகவோ அல்லது தோழியோ எடுத்துரைக்கும் விதமாகப் பாடல்கள் அமைந்துள்ளன. கபிலரின் குறிஞ்சிக்கலிப் பாடலில் வரைவு நீட்டிக்க ஆற்றாது மெலிகின்றாள் தலைவி. தலைவன் சிறைப்புறமாக தோழி ஆற்றுவித்ததனால் தலைவியின் மெலிவு நீங்கியது என்பதை,

*"கூடி அவர்திறம் பாடவென் தோழிக்கு*
*வாடிய மென் தோளும் வீங்கின*
*ஆடமை வெற்பன் அளித்தக்காற் போன்றே"*

(கலி. 43:29–31)

இது கேட்ட தலைவன் தலைவிக்கு இரங்கி விரைந்து திருமணம் செய்வான் என்று உணர்த்தப்படுகிறது.

தலைமகன் சிறைப்புறமாக வந்திருப்பதை அறிந்த தோழி தலைவியை நோக்கி அவர் நம்பால் வந்து போகின்ற களவொழுக்கத்தால் அடைந்த அலர் முதலானவை நாணத்தினால் நாம் கூறாவிடினும் நம்முடைய கண்ணீரே அவர் அறியும்படி உரை செய்து விடுகின்றது.

*"பிறைவனப்பு இழந்த நுதலும் யாழநின்*
*இறைவரை நில்லா வளையும் மறையாது*
*ஊரலர் தூற்றும் கௌவையும் நாணிட்டு*
*.......................................................................*
*கரப்பவுங் கரப்புவுங் கைம்மிக்கு*
*உரைத்த தோழி உண்கண் நீரே"* *(நற்.263)*

என்று இளவெயினனார் பாடலும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

ஒருவனின் நிரந்தரமான அடையாள இயல்புகளும் நடத்தைகளும் ஒருவனின் ஆளுமையை அமைக்கும். மனிதனின் ஆளுமைக்கு மரபும் சூழ்நிலையும் ஒருங்கே காரணமாக அமைகின்றன.

## தோழியின் சிறப்பு

தலைவியின் இன்னொரு கண்ணாக அமைந்துள்ளவள் தோழி. தோழி அறிவுத்திறனும் கூர்மையும் உடையவள். தோழி மிகவும் சிறப்புடையவள், அவள் தலைவன் தலைவியின் வாழ்க்கை மேம்பாட்டிற்காகச் செயல்படுகின்றாள். அக இலக்கியத்தில் இன்றியமையா இடம் பெற்று விளங்கும் தோழி தலைவியை முழுவதுமாக உணர்ந்தவளாகவும் அவளுக்காக வாழ்ந்து கொண்டிருப்பவளாகவும் அமைகிறாள்.

தோழி செவிலியின் மகளாவாள் தொல்காப்பியர்,

***"தோழி தானே செவிலியின் மகளே"***

என்பார். அவள் மரபின் வழி நற்றாயை அடுத்திருக்கும் செவிலியைப் போல எப்போதும் தலைவியின் அருகிலேயே இருப்பாள். ஆகவே அவளின் சிந்தனையும் செயலும் தலைவியைப் பற்றியே எந்நாளும் இருக்கும். பூக்கொய்தல், புனலாடல், புனம் காத்தல் முதலான சூழ்நிலைச் செயல்களின் போதும் அவள் தலைவிக்குத் துணையாக இருப்பாள். எனவே இதன் தொடர்பாக அவளுடைய ஆளுமை தலைவியின் சார்பாக அமைந்த உடல் உள்ள இயல்புகள், அவளின் போக்கு, நடத்தை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்துள்ளது.

"தோழி அனைவருடனும் நல்லமுறையில் பழகுகிறாள், அவள் தலைவனிடமும், தலைவியிடமும், செவிலியிடமும் திறமையாக நடந்து கொள்கிறாள். அவள் எப்போதும் தன்னம்பிக்கையுடன் காணப்படுகிறாள். பொறுமையுடனும் விருப்பத்துடன் செயல் புரிகிறாள். ஆர்வத்துடனும் நம்பிக்கையுடனும் இயங்குகிறாள். குறியிடையீடு, வரைவு நீட்டித்தல் முதலான ஏமாற்றங்களையும், சங்கடங்களையும் தக்க முறையில் சமாளிக்கிறாள். எனவே தோழி சிறந்த ஆளுமை கொண்டவள்"[16] என்று சரளா ராசகேபாலன் அவர்களின் கருத்து குறிப்பிடத்தக்கது.

தலைவி அடிப்படையிலே மிகவும் நல்லவள். தலைவன் களவை நீட்டித்துச் சந்திக்கும் வேளையில் தலைவியின் நிலை துன்பமடைகிறது.

தலைவி கார்க்காலம் தொடங்கியதால் தலைவனின் வரவை எதிர்பார்த்திருக்கிறாள். தலைவன் வராத நிலையில் பேச இயலாத உயிர்களிடத்துத் தன் உள்ள நிலையினை எடுத்துரைக்கிறாள். பேசாத உயிர்களிடம், தன் தலைவனைப் பார்த்தால் தனது நிலையினை எடுத்துரைக்கும்படி குறிப்பிடுகிறாள். அன்பின் மிகுதியால் தலைவி இத்தகைய நிலைக்கு ஆளாகிறாள் என்பதை அறியமுடிகிறது.

**தலைவி நம்பிக்கை**

தலைவனின் பிரிவு, அவன் விரைவில் வரையாமை அவன் வரும் வழியச்சம், ஊரலர் தூற்றும் முறை, தினை முதிர்ச்சி ஆகியவற்றால் நேரும் இற்செறிப்பு, வெறியாட்டு முதலியன தலைவியின் துன்பத்திற்குக் காரணமான போதும் தலைவியின் நிலையில் மாற்றம் ஏற்பட்டு அவளுடைய தன்னம்பிக்கையும், நம்பிக்கையின் மூலம் ஆளுமை வெளிப்படுகிறது.

தன்னையே சுற்றிவரும் தலைவன் பொருளிற்காகப் பிரியும் போது தன்னை விடப் பொருள் முக்கியமா என்ற வினாவின் மூலம் அவனது மனதை ஒருமுகப்படுத்த அவளது மனநிலை வருத்ததுடன் இயங்குகிற நிலையைக் காண முடிகிறது. தலைவன் தனியே பொருள்வயிற் பிரியக் கருதியபோது,

*"துன்பம் துணையாக நாடின் அதுவல்லது*
*இன்பமும் உண்டோ எமக்கு"* **(கலித்.6:9-10)**

என்று கூறித் தலைவனின் துன்பத்திற்குத் துணைநிற்கும் பண்பினை எடுத்துரைக்கிறாள்.

## தலைவி ஆளுமை

“அகாந்தர்களுள் தலைமை தலைவிக்கே என்றும், பிற மாந்தர்கள் தலைவி வழிபட்டவர்களே என்றும் தலைவியின் பண்புகளுள் முதலவாது கற்புடைய திண்மையே என்றும், பிறபண்புகள் கற்பினைச் சார்ந்து பொலிவனவே”[17] என்பர் வ.சுப. மாணிக்கம்.

தலைவி தன் வேட்கையைத் தலைவனிடம் கூறமாட்டாள். அவள் ஆர்வம் புதுப்பானையில் பெய்தநீர் புறம்பொசிந்து காட்டுவது போல, அவளது செயல்பாடுகளால் புலப்படுத்தப்படும். குறியிடம் கூறுதற்குரியாள் தலைவியே ஆவாள். தலைவன் அதற்கு உரிமையுடையவன் அல்லன். ஏனெனில் அவன் குறிக்கும் இடத்திற்கு எல்லாம் தலைவி போக முடியாமல் போகலாம் அவன் இடும் வரம்பைக் கடப்பது தலைவிக்கு அறன் அன்று. ஆதலினால் அகமரபில் தலைவிக்கே இத்தகைய பண்பு வழங்கப்பட்டுள்ளது.

தலைவனோடு கொண்ட நட்பு தலைவிக்குப் பெரிதும் துன்பமாகிறது.

*“பலநினை தினையும் பைதல் நெஞ்சில்*
*அலமரல் நோயுள் உழக்கும்”* *(கலித்.126:19-20)*

எனத் தலைவியின் அழுகை தொடர்ந்து துன்பநிலை உச்சம் அடைகிறது. என்பதை நல்லந்துவனார் குறிப்பிட்டுள்ளார்.

## தலைவனின் ஆளுமை

தலைமகனின் நாடு, ஊர், குடி, பிறப்பு இவற்றின் சிறப்பு மூலம் தலைவனின் ஆளுமை வெளிப்படுத்தப்படுகிறது.

தலைவன் தலைவியைத் தன் உயிரினும் சிறந்தவளாகக் கருதி, அவளை மறத்தலும் துறத்தலும் இயலாத அன்புள்ளம் கொண்டவன்.

தலைவன் இயற்கையில் மிகவும் நல்லவன் என்பதை அவனின் பண்புள்ளம் காட்டுகிறது.

## தலைவன் அலருக்கு அஞ்சாதிருத்தல்

தலைவன் இயற்கைத் தடைகளுக்கு மட்டும் அஞ்சாதவன் அல்லன். அலருக்கும் அஞ்சாதவன் என்பதைக் கபிலரின்,

*"மறுகில் தூங்கும் சிறுகுடிப் பாக்கத்து*
*இயல்முரு கொப்பினை வயநாய் பிற்படப்*
*பகல்வரின் கவ்வை அஞ்சுதும் இகல்கொள*
*இரும்படி கன்றோடு விரைஇய கயவாய்ப்*
*பெருங்கை யானைக் கோள்பிழைத் திரீஇய*
*அடுபுலி வழங்கும் ஆரிருள் நடுநாள்*
*தனியே வருதல் அதனினும் அஞ்சுதும்" (அகம்.118:4-6)*

என்ற பாடல் உறுதிப்படுத்துகின்றது. இதில் தலைவன் ஊரலருக்கு அஞ்சாத இயல்பினைக் குறிப்பிட்டு, தாங்கள் அஞ்சுவதை வெளிப்படையாக தோழி மூலம் இப்பாடலில் உணர்த்துகிறார்.

## தலைவனின் அழகு

இரவுக்குறி வரும் தலைவனை பாராட்டுகின்றாள் தோழி,

*"ஒன்று இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும் உலகம்*
*புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்*
*வல்லாரை வழிபட்டு ஒன்றுறிந் தான்போல்*
*நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்*
*இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க*
*வல்லான் போல்வதோர் வன்மையும் உடையன்"*

(கலித்.47:1–6)

என்ற கபிலர் பாடல் மூலம் தலைவன் இசைமையும் கொடையும் உடையவன் என்பது தெள்ளத் தெளிவாகிறது.

### கருப்பொருட்கள் வழி துறை வெளிப்பாடு

ஐந்து நிலங்களுக்குரிய முதற்பொருள் கருப்பொருட்களைப் புலவர்கள் அமைக்கும் பொழுது, தாம் கூற வந்த கருத்தை உள்ளுறையாக அக்கருப்பொருட்களால் வெளிப்படுத்துவர். இவ்வியல்பு சங்க அகப்பாடல்களில் அதிகமாக இடம் பெற்றுள்ளது. உடனேயே தலைவனின் நாட்டையும், கருப்பொருளையும் கூறுவது போல், அவன் இயல்பைக் கூறி வரைவுகடாவுகிறாள்.

### வரைவுகடாதல் துறை

வாழையும் பலாவும் விளைகின்ற மலைநாட்டுத் தலைவன் களவிலேயே நாள் கடத்துவதை அறிந்த தோழி, தலைவனுக்குச் சுட்டிக் காட்டுகிறாள். அப்பொழுது குறிஞ்சி நிலத்தின் கருப்பொருளான குரங்கு அவள் நினைவிற்கு வந்தது.

"முதிர்ந்த வழைக்கனிகளையும், பலாப்பழத்தின் முற்றிய சுளையையும் உண்டு, சுனையில் உண்டாகிய தேனைத் தேனென்றே அறியாமல் உண்ட குரங்கு, மிளகுக்கொடி படர்ந்த சந்தன மரத்தில் ஏறமாட்டாது. பூக்களால் ஆகிய படுக்கையில் மகிழ்ந்து உறங்கும். எதிர்பாராத இன்பத்தை உன் மலையிலுள்ள விலங்குகளும் எளிதாக அடையும் இத்தகைய சிறப்புடைய நாடனே, நீ எண்ணி அடைய முயலும் இன்பங்கள் உனக்கு அரியனவாகும்"[18] என வினவுகிறாள்.

தேனை உண்டு ஆண்குரங்கு மயங்கியதுபோல் தலைவன் களவில் மயங்கினான். சந்தன மரத்தில் ஏறமாட்டாது பூக்களால் ஆகிய படுக்கையில்

மயங்கிக்கிடக்கிறது குரங்கு என்பதால் வரைவென்னும் உயர் செயலுக்கு விருப்பமின்றிக் களவிலேயே காலம் கடத்துகிறான் தலைவன் என்பதும் தோழியினால் இங்குக் குறிப்பாகச் சுட்டுகின்றார் கபிலர். இங்கே அழகான வருணனையும், தலைவனை இடித்துரைக்கும் பண்பையும் குறிப்பிட்டுள்ளார்.

**அன்னை வெறியாட்டு எடுத்தல்**

தலைவியின் நோய்க்கான காரணத்தைக் காணும் தாய் இக்குற்றம் தெய்வத்தால் ஆனதோ என எண்ணி வெறியாட்டு எடுக்க முயல்கிறாள். இதனை உணர்ந்த தோழியும் தலைவியும் அவ்வெறியாட்டு எடுப்பதால் தலைவனின் பெருமிதத்துக்கும் தலைவியின் குடிக்கும் பழியாகும் என அஞ்சுகின்றனர்.

*"பொய்யா மரபின் ஊர்முது வேலன்*
*கழங்குமெய்ப் படுத்துக் கன்னம் தூக்கி*
*முருகென மொழியு மாயின்*
*கெழுதகை கொல் இவள் அணங்கியோற்கே" (ஐங்.245)*

எனவே தாயின் செயலைத் தலைவனிடம் அவன் சிறைப்புறமாக இருப்பதை உணர்ந்து அறிவிக்கின்றாள் தோழி. 'வேலன் வெறியாடி, தலைவியைப் பேய் பிடித்தோன் முருகனாவான்' என்று கூறுவான் ஆயின், இவளை இத்துன்பத்திற்கு உட்படுத்திய தலைவனுக்கு அவ்வெறியாட்டு உரிமையுடையதாகுமோ என்று வினவுகிறாள். இதில் தலைவி, தோழி, தாய் மூவரின் மனநிலையும் எவ்வாறு இருந்ததென படம்பிடித்துக் காட்டுகிறது.

**அகமாந்தர் உளவியல்**

**உளநலச் சிக்கல்கள்**

*"மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்" (திருக்.457)*

என்கிறார் திருவள்ளுவர். உளநலத்தை உருவாக்கிப் பாதுகாத்தல் எளிதான செயலன்று. உடலின் தேவைகள் நிறைவேறுவதால் உள்ளம் நிறைவுற்று விடுவதில்லை.

உளவியலார் "உள்ளும் புறமும் ஒத்துவாழ்வதே நல்ல ஆளுமையாகும்"[19] என்பார். தன்னளவில் முரண்பாடுகள் அற்ற ஒத்திசைவும் சமூக அளவில் நல்லுறவின் இணக்கமும் உள்ளத்தின் இருபெரும் கூறுகளாகக் கருதமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் உள்ளம் முறிந்து இறுக்கம் உற்றுத் தவிக்கும் சூழல்கள் பல இடம் பெற்றுள்ளன. நெ.து.சுந்தரவடிவேலு அவர்கள் "உண்மையோடு உறவாடிய சங்கப் புலவர்களால் நம் பண்டைய நிலை, நம் முன்னோர் பழக்க வழக்கங்கள், வாழ்க்கைப் போராட்டங்கள், இடர்ப்பாடுகள், அவற்றை ஆட்கொண்ட விதம் ஆகியவற்றால் அறிகிறோம்"[20] என்று குறிப்பிடுகிறார்.

**பிரிவைத் தாங்குதல்**

*"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி*
*மாலை மலரும் இந்நோய்"* *(திருக்.1227)*

என்று காதல் துன்பத்தை வள்ளுவர் கூறுவர். இத்தகைய மாலை துன்பத்தை அனுபவிக்கும் அவன் பிரிவைத் தாங்க முடியாத ஐங்குறுநூற்று தலைவியின் பாடல்,

*"புதல் மலர் மாலையும் பிரிவோர்*
*அதனினும் கொடிய செய்குவர் "* *(ஐங்.215:5-6)*

மாலை வந்ததும், மாலைக் காலத்தை விட கொடுமை செய்கின்ற இரவு நெருங்கிக் கொண்டிருந்தும் கவலைப்படாதவன் போல் பிரியும் தலைவனின் கொடுமையைச் சுட்டுகிறது தலைவியின் நிலை. பிரிவது தவிர வேறு வழி இல்லை என்பது தலைவிக்கும் தெரிந்து உண்மை. பிரிவாற்றாமை என்பது துயரின் எல்லையிலிருந்து பேசுகிறாள் தலைவி என்று கபிலர் குறிப்பிடுகிறார்.

## உள்ளப் போராட்டம்

“வலிமையுடைய ஊக்கம் நிறைவுற இயலாது தடைப்படுமானால் உள்ளமுறிவு ஏற்படுகிறது. தடைப்படுவதற்கான காரணங்களை உளவியல் பேராசிரியர் ஒருவர் மூவகைப்படுத்துகிறார்”[21] என விளக்கம் அளிக்கிறார்.

சூழ்நிலைப் பொருள்களும் பிற மனிதரும் முதல் காரணமாக அமைகிறது. இரண்டாம் காரணம் உள்ள, உடல் உறுப்புகள் குறைவு, திறன் குறைவு, நாட்டக் குறைவு முதலியவையாகும். மூன்றாவது உள்ளப் போராட்டம் ஆகும்.

“இரண்டு சமவலிவுடைய ஊக்கிகள் பூர்த்தி பெற இயலாது. ஒன்று மற்றொன்றுக்குத் தடையாய் இருப்பதின் ஏற்படும் உளநிலையே உள்ளப் போராட்டம்”[22] என்பது வரையறை ஆகும்.

உள்ளப் போராட்டத்தைக் கர்ட் லீவின் என்னும் உளவியல் அறிஞர் மூவகைப்படுத்தியுள்ளார்.

1. அணுகுதல் – அணுகுதல் போராட்டம்
2. அணுகுதல் – விலகுதல் போராட்டம்
3. விலகுதல் – விலகுதல் போராட்டம்[23]

## அணுகுதல் - அணுகுதல் போராட்டம்

“விரும்பத் தகுந்த இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாற்றுகளிடையே நிகழலாகும் போட்டியை உள்ளடக்கியதே அணுகுதல் அணுகுதல் போராட்டம்”[24] என உளவியல் விளக்குகிறது. ஒரே நேரத்தில் இரண்டு இலக்குகளை பெற விழையும் நோக்கினால் போராட்டம் தோன்றுகிறது.

என் நெஞ்சே நாம் சொன்ன மொழியை நம்பி இரவில் மழையில் ஒதுங்கி மயில் போன்று வந்து நம்மைத் தழுவிச் சென்றவள் இவ்வுலகத்து மானிடப் பெண் அல்லள். பின் யாரென்றால் ஆய் வள்ளலின் கவிரம் என்ற பக்க மலையில் உள்ள சுனையிடத்தே உறையும் சூரர மகளே ஆவாள் என்று தலைவன் உரைத்தான்.

*“கூறுவங் கொல்லோ கூறலங் கொல்”* *(அகம்.198:1)*

என்னும் பாடலடி உணர்த்துகிறது.

காமமா நாணமா எனத் தயங்கும் நேரத்தில் முடிவெடுக்க இயலாமையால் தலைவனுக்குத் தவிப்பு நேர்கின்றது. இத்தவிப்பால் தயக்கமும், துயரமும் தோன்றுகின்றன. நெஞ்சம் தலைவனிடம் நாணத்தைச் சொல்லியதோ, காமம் செப்பியதோ என்னும் வினாக்களில் தயக்கம் உள்ளது. காமத்திற்கும், தயக்கத்திற்கும் இடைப்பட்டுத் தடுமாறும் தலைவன் ஒருவன் அவாவினைத் தலைவியிடம் கூறும் போது உள்ளம் போராடுவதைக் காண முடிகிறது.

“தலைவன் நாளெல்லாம் தோழியின் பின் நின்று கெஞ்சிய பின்பு தலைவியின் ஏற்புடைமை அறியாமல் அயர்ந்த நெஞ்சமொடு செல்கிறான். தலைவியின் நிலையைத் தன் மேலிட்டுத் தோழி பேசுகிறாள்”.[25]

புதியவன் ஒருவனிடம் தன் காதலை ஒப்ப இயலாமல் தடுமாறும் நெஞ்சத்தின் போராட்டம் இங்கே வெளிப்படுகிறது. காமம் செப்பினால் நாணழிவும் நாணம் போற்றினால் காமம் கைவிடலும் தவிர்க்க இயலாதன ஆகும். காமம் நாணம் இரண்டையும் போற்றும் விழைவும் இரண்டில் ஒன்றை இழந்தாக வேண்டிய அச்சமும் போராட்டத்திற்குக் காரணமாகின்றன.

## அணுகுதல் – விலகுதல் போராட்டம்

"ஓர் இலக்கினை அணுகவும் விலகவும் தூண்டும் வலிவான போக்குகள் ஒரே நேரத்தில் நிலவுவதே அணுகுதல் – விலகுதல் போராட்டம் எனப்படும்"[26] ஓர் இலக்கினை அடைவதில் நேர் நிலையான தூண்டல் ஒன்றும் எதிர்மறையான தூண்டல் ஒன்றும் செயல்படுகின்றன. அப்போது அந்த இலக்கினை அணுகுவதா விலகுவதா என்னும் போராட்டம் தோன்றுகிறது.

## ஆற்றருமைச் சுட்டுதல்

இரவுக்குறி நேரங்களில் தலைவியின் உள்ளம் இத்தகைய போராட்டத்தால் துன்புறுகிறது. இரவு நேரத்தில் காட்டு வழியில் இடியும் மின்னலும் மழையும் சூழ்ந்த வேளையில் தலைவன் தலைவியைக் காண வருகின்றபோது அவனது அன்பின் ஆழம் புலப்படுகிறது. அதனால் தலைவி மகிழ்கிறாள். ஆனால் தலைவன் வரும் வழி அருமையும், வழியிடை நேரும் துன்பங்களும் அவளை அச்சுறுத்துவதால் துன்புறுகிறாள். தலைவனின் வருகை இனிமையும், வராமையால் துன்பமும் விளைவிக்கின்றது என்பதைக் கபிலர்,

*"காதலை என்பதோ இனிதுமற்று இன்னாதே..."*

(கலித்.49:11)

*"அன்பினை என்பதோ இனிதுமற்று இன்னாதே..."*

(கலித்.49:15)

*"அருளினை என்பதோ இனிதுமற்று இன்னாதே..."*

(கலித்.49:19)

எனத் தோழி ஒருத்தி மீள மீள மறுகிப் பேசும் பேச்சில் இப்போராட்டத்தின் கரு வெளிப்படுகிறது.

தலைவியின் உள்ளம் காதலில் இருக்கும்போது தலைவன் வருதலை விரும்பி, அவன் வரும் வழி நினைந்து, அச்சம் பெருகும் போது தன்னுடைய இதயம் ஊசலாடுகிறது என்பதை,

*"ஒருபாற் படுதல் செல்லா தாயிடை*
*அழுவ நின்ற வலர்வேய் கண்டல்"* ***(குறுந்.340:3-4)***

என்னும் தொடரில் போராட்டத்தின் விளக்கம் இருக்கிறது. ஒருபாற் பட்ட ஒரு திறம் பற்றினால் போராட்டம் இல்லை. போராட்டத்தினால்,

*"வருந்தும் தோழியவர் இருந்தவென் நெஞ்சே"*
**(குறுந்.340:7)**

எனத் தலைவி தவிக்கிறாள்.

தாழைகழியில் வெள்ளம் மிகும்போது உயர்ந்தும் தாழ்ந்த பொழுது தாழ்ந்தும் அலைதலைப் போல என் நெஞ்சு காமம் மிக்கபொழுது அவர்பால் படர்ந்தும், மிகாதபோது வரும் துன்பம் நினைந்து வருந்தியும் கலங்குகின்றோம் என்னும் உளப்போராட்டத்துக்கு ஆளாகிறாள் என்பதை அம்மூவன் பாடல் மூலம் அறியமுடிகிறது.

## விலகுதல் - விலகுதல் போராட்டம்

"இரண்டு விரும்பத்தகாத இலக்குகளில் ஏதாவது ஒன்றை அடைந்தே ஆக வேண்டிய நிலையை விலகுதல் – விலகுதல் உள்ளம் போராட்டம்"[27] என்பர்.

தலைவியின் மெய் வேறுபாட்டால் வருந்திய அன்னை வெறியாட்டு நிகழ்த்துகிறாள். முருகணங்கென நம்பிய அன்னை வெறியயர்ந்த தலைவியின் வாடிய மேனி முன்பு போலச் சிறக்காவிட்டால் காதல் செய்தி ஊரார்க்கு வெளிப்பட்டு விடும். தலைவியின் மெய் வேறுபாட்டின் காரணம்

காதலன்று பிறிதொன்று என்றாகிவிடும். அந்நிலையைத் தலைவன் கேட்டு வருந்த தலைவி வாழ்தல் கொடிதாகும்.

*"யானுயிர் வாழ்தல் அதனிலும் அரிதே"* *(அகம்.98:30)*

வெறியயர்வால் மேனி மெலிவு தீராததாயின் தொல்லை. தீர்ந்தால் அதனினும் தொல்லை என்னும் போராட்டம் பிறந்து விடுகிறது. வ.சுப. மாணிக்கம் அவர்களின் "சமுதாயச் சடங்குக்கும் கற்பொழுக்கத்துக்கும் ஒரு போராட்டத்தை வெறியாட்டில் காணலாம்"[28] என்னும் கருத்து இங்கே ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

## உள்ள இறுக்கம்

"உள்ள முறிவு எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உணர்வியல் சார்ந்த முற்றிய விறைப்பு நிலை (மன அழுத்தம்) தோன்றும். இந்நிலையை உள்ள இறுக்கம் என உளவியலார் குறிப்பர்"[29]

"உள்ளம் முறிவுற்ற நிலையிலும் போராட்டம் மிக்க நிலையிலும் சில எதிர்மறையான உள்ளக் கிளர்ச்சிகள் தோன்றுகின்றன"[30] அவற்றுள் மூன்றினைச் சிறப்பாக உளவியலார் குறிக்கின்றார்.

அவை, 1.சினம், 2.அச்சம், 3. கவலை.

உள்ளத்தின் முறிவாலும் போராட்டத்தாலும் மனம் கலக்கம் அடைகின்றது. இக்கலக்கத்தின் விளைவே கவலையாகும். கவலையைப் பற்றிய இவ்வுளவியல் விளக்கம் சங்க இலக்கியத்தில் உள்ள இடர்ப்பாடு மிக்க சூழல்கள் அனைத்திலும் காணப்படுகின்றன சங்க இலக்கியத்தில் நோதல் என்னும் சொல் உள்ளத்தின் முறிவு, போராட்டம், அழுத்தம், இறுக்கம் ஆகியவற்றை உணர்த்தும் சொல் பெரும்பாலான இடங்களில் வந்துள்ளது.

## அலர் எழுப்புதல்

தலைவி ஊரலர் பற்றி அன்னை செய்தி அறிந்தமையைக் கூறுகின்ற பொழுது,

*"அலரெழுந் தன்றிவ் ஆரே பலருளும்*
*என்னோக் கினளே அன்னை"* *(நற்.191:7-8)*

என்று தலைவன் சிறைப்புறமாக வந்தான் தலைவியை இற்செறித்தனர் என்று உலோச்சனார் பாடல் மூலம் தலைவியின் கவலையைக் குறிப்பிடுகிறது.

## இரவுக்குறி

தலைவன் இரவில் வரும் வழி அருமை நினைந்து தலைவி வாடுகிறாள். மழையால் வழி மறைந்த இரவில்,

*"யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப"* *(நற்.355:5)*

எனத் தலைவனைக் கேட்கிறாள்.

*"இரவுச் சிறுநெறி தமியை வருதி"* *(அகம்.318:4)*

என்றும் வருந்திக் கூறுகின்றாள்.

*"உலமரல் வருத்தும் உறும்"* *(அகம்.18:13)*

சூழலால் தலைவியின் உள்ளத்தைத் துன்புறுத்துகின்றன.

## தடைகள்

சூழ்நிலைத் தடையால் வரும் வேட்கை முறிவின் செறிவால் கவலை பிறக்கின்றது. தலைவி தலைவனின் நெஞ்சம் நிறைந்தவன். ஆதலால் உடலால் நெடுந்தொலைவில் உள்ளானே தவிர உள்ளத்தால் ஒன்றுபட்டு உள்ளனர் என்பதை,

*"சேய ளரியோட் படர்தி*
*நோயை நெஞ்சே நோயப்பா லோயே"* *(குறுந்.128:4-5)*

என்ற பரணர் பாடல் மூலம் தெளிவாகிறது. 'கிட்டதாயின் வெட்டென மற' என்பது ஔவையின் அறிவுரையாகும். ஆனால் அது நடைமுறை வாழ்வில் சாத்தியமன்று. நெஞ்சு பழுதாகி நெஞ்சமெல்லாம் போதாகி கவலையில் தவித்தலே நடைமுறையாகும்.

## இற்செறிப்பு

தலைவி அன்னை இற்செறிப்பிற்குக் காரணம் ஊர்ப்பெண்டிரே என்று தோழி கருதுகிறாள். அடிக்கடி தலைவன் வந்து சென்று அலர் எழ காரணமான தலைவனே இறசெறித்தலுக்குக் காரணமெனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

*“கடலுட னாடியுங் கான லல்கியும்*
*தொடலை யாயமொடு தழுவணி யயர்ந்தும்*
*நொதுமலர் போலக் கதுமென வந்து*
*முயங்கினென் செலினே யலர்ந்தன்று மன்னே”*

**(குறுந்.294:1–4)**

பல மகளிரொடு கூடிக் கடலில் நீராடியும், பொழிலில் விளையாடியும், குரவை ஆடியும் விளையாடும் காலத்தில் அயலானைப் போல வந்ததால் அலர் உண்டாயிற்று என இப்பாடல் எடுத்துரைக்கிறது.

இற்செறிப்பு நிகழ்ச்சிகளில் அன்னையின் துயரமும் உண்டு. தலைவன், தலைவி, தோழியரின் துன்பமும் உண்டு. தன் மகள் ஊர் அலருக்கு அஞ்சி ஆளானமையை அறிந்த அன்னை அச்சம், மானம், வெறுப்பு ஆகிய உணர்வுகளின் அழுத்தத்தால் தலைவியை இற்செறிக்கின்றாள். தலைவியின் பால் உள்ள அன்பை மனத்தில் வைத்து தலைவியை இற்செறிக்கிறாள். தலைவியின் வெறுப்புக்கும் ஆளாகின்றாள்.

இற்செறிப்பில் தலைவியின் மனப்புழுக்கம் இரக்கத்திற்குரியது. கபிலர் பாட்டில் இந்நிலை,

*"கழிபட வருந்திய எவ்வமெ பெரிதழந்து"* *(நற்.253:3)*

ஆகிய சொல்லின் மூலம் உளவியல் நுட்பம் வெளிப்படுகிறது. உடலால் முடக்கப்பட்ட பெண்ணின் உள்ளத்தில் அடக்கப்பட்ட உணர்வுகளில் இவ்வுளவியல் உண்மை புலப்படுகிறது.

**வரைவுகடாதல்**

தலைவனோடு கொண்ட காதலின் காரணமாக,

*"சூர்மலை நாடன் கேண்மை*
*நீர்மலி கண்ணொடு நினைப்பா கின்றே"*

(குறுந்.105:5–6)

கண்ணீர் மல்கச் செய்யும் துன்பத்தைத் தந்து நினைவளவிலே நின்றதன்றி இன்பத்தைத் தந்து வரையுஞ் செயலளவில் முற்றவில்லை எனத் தலைவியின் அழுகைத் தொடர்கின்றது.

*"பலநினைந்து இணையும் பைதல் நெஞ்சின்*
*அலமரல் நோயுள் உழக்கும்"* *(கலித்.126:26-27)*

என்பர் நல்லந்துவனார்.

*"மெல்லிய நெஞ்சு பையுள் கூர*
*- - - - - - - எனையதுஉம்*
*தாங்குதல் வலித்தன்று"* *(கலித்.134:8,26,27)*

என்று மன இறுக்கத்துடன் காணப்படுகிறாள் தலைவி. நெஞ்சின் மெலிவும், பல நினைவும், படரும் வருத்தமும், கழன்று தடுமாறும் மனமும் இணையும் போது உள்ள இறுக்கம் வெளிப்படும் என்பது இதனின்று புலனாகிறது.

## ஒடுக்கம்

உள்ளப் போராட்டமும் இறுக்கமும் மிக்க சூழல்களில் சிலர் துன்பங்களையோ குறைகளையோ ஏற்றுக் கொள்ள மறுப்பர். ‘‘மனிதர்கள் தங்களுடைய அனுபவத்தைப் பயமுள்ளவையாகவோ, வெட்கப்படக் கூடியவையாகவோ இருக்குமானால் அவற்றை மறந்துவிட வேண்டும் என்ற மனப்போக்குடையவர்களாக இருக்கின்றார்கள்’’[31] என்பது பொது உளவியல் உண்மையாகும்.

## மறைத்தல்

‘‘சங்க இலக்கியம் பெரும்பாலும் தனி மனிதர்களின் நாடகப் போக்கான தன்னுணர்ச்சிப் பாடல்களைக் கொண்டது’’[32] என உளவியலார் விளக்கமளிப்பார்.

பிரிவின் துன்பத்தை நினைக்கக் கூடாது மறக்க வேண்டும் என்னும் விழையின் காரணமாக தலைவியின் நெஞ்சம்,

***“உள்ளாது ஆற்றல் வல்லுவோர்” (குறுந்.38:6)***

என்னும் தொடரில் கபிலர் நினையாமல் இருப்பதற்கும் ஆற்றல் வேண்டும் என்று குறிப்பிடுகிறார். தலைவனைப் பிரிந்த தலைவி தன் துன்பத்தைத் தோழிக்கு மறைத்தலை நல்லந்துவனார் பாடல் மூலம் அறியக்கூடும்.

துன்பத்தை அடக்கி மறைக்கும் புற மனத்தின் விழைவுகளே அன்றி ஒடுங்கி ஒளிந்த அகமனத்தின் செயல்பாடன்று. டாக்டர் மு. வரதராசன் அவர்கள் ‘‘சில உணர்ச்சிகள் அடக்க அடக்க மிகும். துயரம், இத்தகைய உணர்ச்சி, யாரேனும் வந்து ஆறுதல் சொல்லச் சொல்ல, துயரம் பொங்கி எழும், அடியோடு மறந்தால் அல்லாமல், துயர உணர்ச்சியை அடக்கி மறைக்க முடியாது’’[33] என விளக்கியுள்ளார். துன்பத்தை மறக்க இயலாத

நிலையில் மறைப்பதால் மேலும் உள்ளம் கிளர்ச்சி ஏற்பட்டு ஒடுக்கமாக மாறுகிறது.

**பிரிவுத்துயர்**

இரவுக்குறிக்கண் வந்து நீங்கும் தலைவனைத் தலைவி பிரிய வேண்டியுள்ளது.

***"தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்" (அகம்.142:6)***

என முன் நிகழ்ச்சியை நினைவில் கொண்டு,

***"நன்று உவவினி வாழிய நெஞ்சே" (அகம்.142:7)***

என நெஞ்சிற்குக் கூறுகிறான். பரணரின் பல பாடல்களில் இச்சிந்தனை மேலோங்கியுள்ளது.

இரவுக்குறியில் தலைவன் தலைவியைச் சந்திக்க இயலவில்லை இந்நிலையில் நேற்று நெஞ்சாரத் துய்த்த இன்பத்தைத் தலைவனின் உள்ளம் இயற்கையாகவே மீட்டறிகிறது.

***"நடுங்கஞர் தீர முயங்கி நெரூநல்***
***ஆகம் அடைதந் தோளே" (அகம்.62:11-12)***

**இருமுக உள்ளம்**

தலைவி இரவுக் குறிக்கண் தலைவன் வந்து செல்லும் வழியை நினைத்துக் கவலைப்படுகிறாள். தலைவன் வரும் வழி ஆழ்ந்த குழிகள் நிரம்பிய அகலம் சிறுத்த வழியில் அவன் தளிரடியைத் தாங்கத் தலைவியின் நெஞ்சம் சென்றுவிட்டது. அவ்வாறு சென்ற நன்னர் நெஞ்சம் என்னோடும் நின்னோடும் சூழாது சென்றதாகத் தோழியிடம் கூறுகிறாள் என் என்பது தலைவியின் நனவு மனத்தையும் நெஞ்சம் என்பதும் அவளது நனவிலி மனத்தையும் குறிப்பதாகக் கொள்ள முடிகிறது.

## வரலாற்றுச் செய்தி வழி ஆளுமை அறிதல்

“ஒரு மனிதனின் உலகக் கண்ணோட்டம் அல்லது உலகளாவிய பார்வைதான், ஆளுமையின் மைய உட்கருவாக விளங்குகின்றது. அவற்றில் தான் மனிதனின் கோட்பாடுகளும், இலட்சியங்களும், வாழ்க்கை நோக்கங்களும் உருக்கொண்டு, அவனுடைய சிந்தனை, சொல், செயல் ஆகியவற்றின் ஒருங்கிணைந்த ஆளுமை வெளிப்படுகின்றது. மேலும் அழகியல், கலை, இலக்கியம் ஆகியவை உருப்பெறுவது ஆளுமையின் பிரத்தியேகமாக செயற்பாடுகள் தான்”[34] என்று ‘கவிதையெனும் மொழி’ என்னும் நூலில் தி.சு.நடராசன் குறிப்பிட்டுள்ளார்.

## ஆட்டனத்தி

ஆட்டனத்தியின் பெயர் அத்தி என்பதாகும். ஆடற்கலையில் சிறந்தவன் என்பதால் அத்தொழிற் சிறப்புப் பற்றி ஆட்டன் அத்தி என்றும், பொருநன் என்றும் பெயர் பெற்றிருந்தான், இவன் மிக்க அழகினன், திரண்ட தோளினன் என்பதைப் பரணரின்,

*“ஈட்டெழிற் பொலிந்த ஏந்தகுவவு மொய்ம்பின்*
*ஆட்ட னத்தி நலனயந்து”* *(அகம்:222:6-7)*

என்ற அடிகளால் அறிய முடிகிறது.

“ஆட்டனத்தி காவிரியாற்றின் கழார்ப்பெருந்துறையின்கண் விழாக் காலத்தில் கரிகால்சோழன் கண்டிருப்ப, காலிற் கழல் புரள, அரையிற் கட்டிய கச்சையின்மேல் பொன்னாற் செய்த பாண்டில் மணிகள் ஒலிப்ப அழகுபெற ஆடிக்கொண்டிருந்தான்”.[35] அப்பொழுது வெள்ளத்தால் ஈர்க்கப்பட்டு, அதன் வழியே சென்று கடலில் சேர்ந்தான் அவன் மனைவி பல இடங்களில் தேடி அலைந்து, முடிவில் மருதி என்பவளால் அவனைக் கண்டாள்.

## ஆதிமந்தி

"ஆதிமந்தி ஆட்டனத்தியின் மனைவி. தன் கணவன் காவிரியாற்றுப் புனலால் இழுக்கப்பட்டதை அறிந்து, பல நாடுகளிலும் பல ஊர்களிலும் சென்று அவனைத் தேடிக் காணாது, அலைந்து திரிந்தாள். அப்பொழுது மருதி என்பவள், கடல் வாய்ப்பட்டிருந்த ஆட்டனத்தியை இவளுக்குக் காட்டினாள்".[36] இவ்வரலாறு பரணர் பாட்டுகளில் சில இடங்களில் காணப்படுகிறது.

*"தாழ்இருங் கதுப்பின் காவிரி வவ்வலின்*
*மாதிரம் துழைஇ மதிமருண்டு அலந்த*
*ஆதி மந்தி காதலற் காட்டி"* *(அகம்.222:8-10)*

என்ற பாடல், தலைவன் தலைவியை மணம் செய்து கொள்வதில் விருப்பின்றிக் களவொழுக்கத்தை விரும்பி ஒழுகினான். அவனுக்குத் தலைவியை மணந்து கொள்ள அறிவுறுத்தி, பிரிவாற்றாமையால் மெய் வேறு பட்டிருத்தலைத் தலைவனுக்கு உணர்த்தும் போது சிறைப்புறத்தே வந்து நிற்கும்போது, அந்த மருதி போல் புகழ் பெறும் பொருட்டுச் சேற்று வழியில் நாம் தலைவனைத் தேடிச் செல்வோம் எனத் தோழி தலைவன் கேட்பச் சொன்னாள் என்பதை பரணர் வரலாற்று நிகழ்வின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

## மிஞிலியும் ஆய்எயினனும்

நீதி முறையினின்று வழுவாமல் நின்று போரிட்டுப் பெற்ற உரல்போலும் அடியையுடைய யானையை உடையவன் 'நன்னன்' என்ற மன்னனவான்.

மிஞிலி ஆய்எயினனைப் பொருது வெல்வதற்குத் தனக்குத் துணை புரிந்தால், தான் காளிக்கு வழிபாடு செய்வதாக, நன்னனது பாழியிலுள்ள பேயை வேண்டிக் கொண்டான், அவ்வாறே வெற்றி கிடைத்ததால்,

அப்பேய்க்கு பிறரால் செய்வதற்குரிய வழிபாடு செய்தான். இவன் வாய்மையுடையவன்.

*"கறைஅடி யானை நன்னன் பாழி*
*ஊட்டுஅரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்*
*கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி*
*புள்ளிற்கு ஏமம் ஆகிய பெரும் பெயர்*
*வெள்ளத் தானை அதிகற் கொன்று உவந்து*
*ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பின்"* *(அகம்.142:9-14)*

என்னும் அடிகளால் விளங்கும். இவற்றைக் கூறி தலைவன் தலைவியுடன் இன்பமடைந்து செல்லும்போது தன் நெஞ்சை நோக்கித் தலைவன் உள்ளத்துக்குக் குறிப்பால் உணர்த்துகின்றான். வெற்றி வேண்டிக் கொற்றவையை நேர்தலும், விழா எடுத்தலும் வழக்காறாகும். சிறு தெய்வங்களுக்குக் கொடுக்கும் பூசை முறைகளுள் ஒன்று என்பதைக் குறிப்பிடுகிறது.

மிஞிலி பகைவரின் பல அரண்களை அழித்தவன் பெரும் படைகளை உடையவன். இவன் நன்னனுக்கு ஆற்ற வேண்டுவன எல்லாம் முறைப்படி வழுவாது ஆற்றி, பாழி, பாரம் என்னும் ஊர்களை அவனிடமிருந்து பெற்றானென்பது,

*"பார்த்துத் தலைவன் ஆர நன்னன்*
*ஏழி னெடுவரைப் பாழிச் சிலம்பில்"* *(அகம்.152:12-13)*

பாடல் அடிகளால் தெள்ளத் தெளிவாகிறது.

தலைவன் களவொழுக்கத்தை மேற்கொண்டிருந்தான். அப்போது வீட்டில் தலைவிக்குக் காவல் அதிகமானதால், தோழி தலைவனை விரைவில் மணந்து கொள்ளுமாறு வேண்டிட, பகற்குறி வரும் அவனை இரவில் வருக என உரைக்கும் பாடல்,

*"கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்*
*நெடுந்தேர் மிஞிலியொடு பொருது களம்பட்டென*
*காணிய செல்லாக் கூகை நாணிக்*
*கடும்பகல் வழங்கா தாஅங்கு" (அகம்.148:17-20)*

என்பதாகும்.

ஆஅய் எயினன் என்பவன் மிஞிலியோடு போர் செய்தான். மிஞிலி போர்க்களத்தில் இறந்தான். பறவைகளின் பாதுகாவலன் அவன். அத்தகையவனை மற்ற பறவைகளைப் போல் காண இயலாத பகற் குருடான கூகைப் பறவை நாணிக் கடும் பகலில் இயங்காது துன்பம் அடைந்தது போல, தலைவிக்குப் பகற்குறியில் செல்லாத துன்பம் பெரிதாக உள்ளது என்ற செய்தி குறிப்பிடப்படுகிறது.

**அன்னிமிஞிலி வீரம்**

அன்னி என்பவன் திதியனது புன்னை மரத்தை வெட்டியதன் காரணமாக நிகழ்ந்த போரில், திதியன் வெற்றிக் கொண்டு, அன்னியைப் பற்றி அவன் கண்ணைப் பிடுங்கி விட்டான். இதனால் கடுஞ் சினமடைந்து கோசரைப் பழிவாங்கும் வரை கலத்தில் உணவை உண்ணேன். தூய ஆடை உடுத்தமாட்டேன் என்று சூளுரை மேற்கொண்டாள். வெற்றி மிக்க குறும்பியன் என்பவனால் திதியனை மரபோடு அழியக் கொன்றவிடத்து மிக்க மகிழ்ச்சி அடைந்தாள். அவள் அடைந்த மகிழ்ச்சியைப் போல் தலைவியுடன் உரையாடி புணர்ச்சி இன்பத்தால் மகிழ்ந்தேன் என்று பரணர் பாடல் மூலம் அறியமுடிகிறது.

*"பாசிலை யமன்ற பயறா புக்கென*
*வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா*
*தூர்முது கோசர் நவைத்த சிறுமையின்"*

(அகம்.262:4–6)

கண்ணைச் சிதைத்தவர் கோசர் என்பதால்,

*"மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்*
*செருவிய னன்மான் திதியற் குரைத்தவ*
*இன்னுயிர் செகுப்பக் கண்டுசினம் மாறிய*
*அன்னி மிஞிலி போல"* *(அகம்.262:9-12)*

என்னும் பகுதியில் இவள் மனத்திட்பமும், வீரமும் பிறவும் உடையர் என்பதும் நன்கு புலனாகிறது. இப்பாடலில் அன்னிமிஞிலி அடைந்த மகிழ்ச்சி போல் தலைவன் தலைவியைப் புணர்ந்ததால் மகிழ்ச்சி அடைந்தான் என்பது புலனாகிறது.

## பெயர் தெரியாத புலவர்களின் ஆளுமை அறிதல்

ஆளுமையை புலவர்களின் வழி நான்கு நிலைகளில் அறியக்கூடும்.

1. சமூகச் சூழ்நிலை வழி அறிதல்
2. பாரம்பரியம் வழி அறிதல்
3. உலகக் கண்ணோட்டம் வழி அறிதல்
4. தனிப்பட்ட செயற்பண்பு வழி அறிதல்

## சமூகச் சூழ்நிலை

ஒருவனது சமூகச் சூழ்நிலையும் அவனுடைய பாரம்பரிய இயல்புகளும் ஒருங்கே அமைவதால் உருவாவது ஆளுமை எனப்படும். புலவர்கள் தாங்கள் வாழ்ந்த சமூகச் சூழ்நிலைக்கேற்ப கருப்பொருளைக் கொண்டு தங்கள் ஆளுமையை வெளிப்படுத்தியுள்ளனர்.

களவு வாழ்வை விரும்பியவனாகத் திகழும் தலைவனை இடித்துரைக்க விரும்பிய புலவர்,

*"கீழும் மேலும் காப்போர் நீத்த*
*வறுந்தலைப் பெருங்களிறு போல"* *(நற்.182:8-9)*

தலைவன் செயல்படக்கூடியவன் என்று தலைவனின் பொறுப்பற்ற தன்மையை யானையுடன் ஒப்பிட்டுச் சாடுகின்றார்.

இன்னொரு பாடலில் தலைவனின் பொறுப்பற்ற தன்மையை,

*"............................ கொடிதே இருங்கழிக்*
*குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தித்*
*.................................................... நெய்தல்*
*நீரலைத் தோற்றம் போல*
*ஈரிய கலுழுநீ நயந்தோள் கண்ணே"* *(நற்.195:1-2,8-9)*

நீர்நாய் குட்டியின் செயல் பாட்டோடு உவமைப் படுத்தியுள்ளார் புலவர்.

இவ்விரு பாடல்களிலும் புலவரின் நோக்கம் தலைவனின் பொறுப்பற்ற நிலையை வெறுப்புணர்வோடு படைத்தலாக அமைகின்றது. புலவர்கள் தாங்கள் வாழ்ந்த சமூக சூழ்நிலைக்கேற்ப கருப்பொருளைக் கையாண்டு பாடல் அமைத்துள்ளமையை அறிய முடிகிறது.

**பாரம்பரியம்**

சங்க இலக்கியப் பாடல்களில் உள்ளுறை, இறைச்சி உத்திமுறை மிகுதியாகப் பயின்று வந்துள்ளதை சங்க இலக்கிய ஆய்வுகள் சுட்டிக்காட்டியுள்ளன. நற்றிணைப் பாடல்களில் இறைச்சி, உள்ளுறை, உத்திமுறை மிகுதியாகப் பயின்று வந்துள்ளதைக் காண முடிகின்றது. சான்றாக,

இரவுக்குறி மறுக்கப்பட்டு ஆற்றாளாய தலைமகன் சொல்லும் பாடல்,

*"குருதி வேட்கை உருகெழு வயமான்*
*வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்*

*மரம்பயில் சோலை மலியப் பூழியர்*
*உருவத் துருவின் நாள்மேயல் ஆரும்*
*மாரி எண்கின் மலைச்சுர நீளிடை”* *(நற்.192:1-5)*

என்பதில் புலி களிற்றைப் பார்க்கும் சோலையின் கண்ணே கரடி அஞ்சாது இயங்கும். அன்னை கலக்கும் இல்லத்திலே யான் அஞ்சாது வருவேன் என இறைச்சி வைத்துப் புலவர் எடுத்துரைக்கின்றார்.

## உலகக் கண்ணோட்டம்

திருக்குறளில் உலகக் கண்ணோட்டத்தைப் பற்றிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. புலவர் பெயர் தெரியாத நற்றிணைப் பாடல்களில் பல்வேறு வகையான உலகக் கண்ணோட்டங்கள் இடம் பெற்றுள்ளன.

*“கண்ணோட்டம் இல்லாத மனிதன் நிலத்திற்குச் சுமை”*
**(திருக்.572)**

என்றும்,

*“கண்ணோட்டம் இல்லாத மக்கள் கண் இல்லாதவர்”*
**(திருக்.575)**

என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

கண்ணோட்டம் மனிதனின் ஆளுமைப் பண்பை மேன்மையுறச் செய்யும் என்பதை உணரமுடிகிறது.

## நட்பின் திண்மை

*“பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டு பவர்”* *(திருக்.580)*

இப்பாடலின் கருத்தை ஒப்பிட்டு நற்றிணையில் புலவர் பெயர் தெரியாத பாடல்,

*"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்*
*நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்"* *(நற்.355:6-7)*

நட்பு பூண்ட சான்றோர் நனிநாகரிகம் எனப்படும் கண்ணோட்டம் உடையவர். எதிரேயிருந்து நஞ்சைக் கலந்து கொடுத்தாலும், மறுக்காது வாங்கியுண்ணும் பேரருள் உடையவராய் இருப்பார். தலைவன் அன்பு மிகுதியானவன், என்னைப் பிரிந்து இருக்கமாட்டார் எனத் தலைவியின் நிலையை எடுத்துக் காட்டுகிறார்.

**அகமரபுகளை வலியுறுத்தல்**

*"நன்மலை நாட பண்பு எனப்படுமோ"* *(நற்.168:6)*
*"பழகிய பகையும் பிரிவு இன்னாதே"* *(நற். 108:6)*

போன்ற பாடல் வரிகள் மூலமாகவும், புலவர்கள் தலைவன், தலைவியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும், அப்படிச் செய்யவில்லை எனில் கொடிய செயலாகும் என்று புலவர் மூலம் இளைஞர் சமுதாயத்தின் மீது சுமத்தும் பொறுப்புணர்வை அறிய முடிகிறது.

**தனிப்பட்ட செயற்பண்பு**

புலவர் ஒருவர் வாழைப்பூ காந்தள் மலருடன் பொருந்தி இருக்கும் காட்சியினைக் கொண்டு தலைவனின் செயல்பாட்டை விளக்குகிறார்.

*"மெல்விரல் மோசை போலக் காந்தள்*
*வள்ளிதழ் தோயும் வான்தோய் வெற்ப*
*ஒன்றி விளைவுந் தீதொடு வரும்"* *(நற்.188:4-6)*

வாழைப்பூ காந்தளுடன் பொருந்தி இருக்கும் காட்சியானது பெண்களின் விரலில் மோதிரம் அணிவது போல் உள்ளது.

நன்மையாக முடியும் ஒரு செயலோடு தீமையும் கலந்து வரும் என்பதை தலைவி அறிந்திருந்தாள். தேன்மிக்க மலையில் பெருத்து வளர்ந்த

மூங்கில் போன்று பருத்த தோளையுடையாள் இப்போது வருந்தமாட்டாள் என்று தனிமனித தலைவியின் பண்பைச் சுட்டுகின்றார்.

## புலவர்களின் நோக்கம் வழி ஆளுமை அறிதல்

1. களவு கற்பாக மாற வேண்டும்
2. ஆற்றாமை வெளிப்படுத்தல்
3. துயர் களைதல்

## களவு கற்பாக மாற வேண்டும்

களவு வாழ்வின் பல்வேறு நிலைப்பாடுகளை விளக்குனவாகவும் களவை நீட்டிக்காமல் விரைவில் மணம் புரிந்து கொள்ளத் தூண்டுவனவாகவும் பல பாடல்கள் அமைந்துள்ளன.

* தலைவியின் மெலிவு கூறி வரைவுக்கு உட்படுத்துதல்.
* தலைவன் வரும் வழியின் கொடுமை கூறி வரைவுகடாதலுக்கு ஏற்பாடு செய்தல்.
* தலைவனின் பண்புநலன், உறுதிமொழி கூறி வரைவுக்குத் துணை செய்தல்.
* ஊரின் அலர்கூறி வரைவுப்படுத்துதல்.

## தலைவியின் பசலை

தலைவன் களவின்பத்தை மட்டுமே விரும்பியவனாகத் தலைவியிடம் வந்து செல்கின்றான். இதனை விரும்பாத தோழி அவனுக்குத் தலைவியைக் குறியிடத்து விட்டு வந்து தாய் தலைவியின் பசலையைப் பார்த்து வெறியாட்டு எடுக்கிறாள் என்பதைச் சொல்லி விரைவாக மணந்து கொள்ளும்படி வேண்டுகிறாள்.

பாடல் அகம் 156




விளைந்த பின்பு பயன்படும் இளங்கதிரைப் பசு தின்பதை அஞ்சிக் கரும்பைத் தந்து தின்னச் செய்து காஞ்சி மரத்தில் கட்டிப் பயன் கொள்வார்போல், பின்னே பெரும்பயன் தரும் களவொழுக்கத்தை அழித்துப் பயன் தராது செய்யும் பழி கூறுபவர் வாயடங்கி ஒழிய மணந்து கொள்ள வேண்டும் என்பது உள்ளுறையாக உள்ளது.

## பசலை நோய்

தலைவி தலைவன் பிரிவினால் உடனே உண்டாகும் பசலையின் தன்மையைக் குறித்துக் கூறும் துறையமைந்த பாடல் படிக்க படிக்க இன்பம் தருவதாக உள்ளது.

> ***“ஊரூண் கேணி யுண்டுறைத் தொக்க***
> ***பாசி யற்றே பசலை காதலர்***
> ***தொடுவுழித் தொடுவுழி நீங்கி***
> ***விடுவுழி விடுவுழிப் பரத்த லானே”*** ***(குறுந்.399)***

ஊரால் உண்ணப்படும் நீரையுடைய கேணி, கேணியில் உள்ள பாசியை மக்கள் நீர் கொள்ளுங்கால் விலகியும், பின் கூடியும் நிற்றல் போலப் பசலை

தலைவன் முயங்குங்கால் நீங்கியும் பிரியுங்கால் பரந்தும் நின்றது என்றாள். எப்பொழுதும் தலைவனோடு உறையப் பெறுவேனல், பசலை நோய் முற்றும் ஒழியுமென்று பரணர் பாடல் மூலம் தெள்ளத் தெளிவாகிறது.

## தோள் நலனழிவு

பகற்குறியில் தலைவியைச் சந்திக்க வந்த தலைவனிடம் சான்றோனைப் போல உன்னை விட்டு என்றும் பிரியமாட்டேன் என்று கூறி, தலைவியைக் கூடி இன்புற்ற நீ, அவளுக்குத் தோள் மெலிவை ஏற்படுத்தியுள்ளாய் இதைத்தான்,

***"நன்றி விளைவுந் தீதொடு வரும்"*** ***(நற்.188.6)***

எனக் கூறினார் என்று மிகவும் வருத்தத்துடன் பதிவு செய்கிறாள் தோழி.

## தலைவியின் நலனழிவு

தலைவியைக் காணச் சிறைப்புறமாக வந்து நிற்றலைக் கண்ட அவன் வந்திருப்பதை அறியாதவள் போல், தாய் வெறியாடல் மேற்கொள்ள இரவில் அவன் வருகின்ற வழியின் இன்னாமை கருதி தான் வருந்துவதை அவனுக்கு அறிவுறுத்தும் பொருட்டு அவன் கேட்கும்படித் தோழிக்குக் கூறுகின்றாள்.

***"இலங்குவளை நெகிழ்ந்து செல்லல் புலம்படர்ந்து"***

***(அகம்.292:7)***

என் வளை நெகிழ்ந்ததற்குக் காரணமான துன்பத்தைக் கண்டு அன்னை, பொருளைச் சொரிந்து கலக்கம் அடைவாள் என்று குறிப்பிடுகிறாள்.

மேற்கண்ட பாடல்கள் வழி தலைவியின் தோள் மெலிவும், நலன் அழிவும் விளக்கப் பெறுகின்றது. இதற்கு ஒரே காரணம் தலைவியின் பசலையே பாடலின் உட்பொருளாகத் திகழ்கின்றது.

## தலைவன் வரும் வழியின் கொடுமை

தலைவன் வரும் வழியின் கொடுமை கூறி, மணம் செய்து கொள்ள தலைவனை விரைவுப்படுத்துவனவாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

இரவில் தலைவன் தலைவியைச் சந்திக்க வருகிறான். அவன் வரும் வழியானது,

*"குருதி வேட்கை உருகெழு வயமான்*
*வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்"* ***(நற்.192:1-2)***

யானையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் வலிய புலி வரும் வழியில் தலைவன் வருவது ஆபத்தானது என்று எடுத்துரைக்கின்றாள்.

இரவுக்குறி வந்த தலைமகன் ஆற்றது ஏதம் கூறி இரவுக்குறி மறுக்கின்றாள் தோழி.

*"கானமுங் கம்மென் றன்றே வானமும்*
*வரைகிழிப்பு அன்ன மெயிருள் பரப்பிப்*
..................................................................
*பேரஞர் பொருத புகர்படு நெஞ்சம்*
*நீரடு நெருப்பில் தணிய இன்றவர்*
*வாரா ராயினோ நன்றே"* ***(நற்.154:1-10)***

தலைவன் வரும் வழியானது காடு கம்மென்று ஒலி அடங்கிற்று. ஆகாயமும் மலைக்குகை போன்ற கரிய இருளைப் பரப்பியது. மேகம் பல குரலை ஓயாது ஒலிக்கிறது. மஞ்சு தவழும் சிறுகாட்டில் களிற்றை வலப்பக்கத்தில் வீழும்படி கொன்ற வெய்ய சினத்தையுடைய அகன்ற

வாயுடைய ஆண்புலி யாவரும் அஞ்சும்படி முழங்கியது. இவ்வோசைகளைக் கேளாமல் நீ தூங்குகின்றாயே தோழி, பெரிய துன்பம் வந்து மோதியதால் குற்றம்பட்ட நெஞ்சத்தின் கொதிப்பானது நீர் பெய்த நெருப்புப் போலத் தணியும்படி இன்று அவர் வாராது விட்டாலோ நல்லதாகும் என்று எடுத்துத்துரைக்கின்றாள்.

இவற்றைக் கடந்து வரும் தலைவனை நினைத்து வருத்தம் அடைகிறாள் தலைவி. தலைவன் உயிருக்கு ஆபத்து ஏற்படின் தலைவி உயிர் வாழமாட்டாள் என்பதையும் உணர்த்தி, தலைவனை விரைவாக மணந்து கொள்ளும்படி தூண்டுகிறாள். புலவர் இதை நேரிடையாகவும், சிறைப்புறமாகச் சொல்வதாகவும் அமைத்துள்ளார்.

## தலைவனின் பண்பு

தலைவியின் பண்பைக் கூறி வரைந்து கொள்ளும்படி சில பாடல்கள் அமைந்துள்ளன.

“நிலவும் மறைந்து விட்டது காப்போர் நீத்த களிறு போல நம் தலைவனும் வந்திருப்பான். எனவே அவனிடம் சென்று வருவோம் என்று தலைவியை அழைக்கின்றாள்”.[37]

தலைவனைக் ‘காப்போர் நீத்த களிறு போல’ என்று கூறியதன் நோக்கம், அவன் பெரியோர்க்கு அடங்கி நடப்பவனாயின், அவன் அவ்வாறு இன்றிக் களவையே நாடுவதால் காப்போர் நீத்த களிறு போலக் கட்டுத் தறியிலே கட்டிக் காப்பவரும் மீதேறி நடப்பவரும் இல்லாத பெரிய யானை போல தன் மனம் போன போக்கில் எதிர் விளைவுகள் எவற்றையும் பொருட்படுத்தாமல் இருக்கிறான். ஆதலால் அவனைச் சென்று கண்டு, மணம் புரிந்து கொள் என்று தலைவனின் பண்பை இடித்துரைத்துத் தலைவியைத் தூண்டுகின்றாள் தோழி.

‘‘நாரையால் நலனுண்டு கைவிடப்பட்ட நாரைப் பேடையானது, சிறுமீனைக் கூட உண்ணாமல், கடற்கரைச் சோலையிடத்தேயுள்ளே தாழை மரத்தின் கிளையிடத்தே வருத்தமுடன் சென்று அமரும். அதேபோல் தலைவியும் தலைவன் நலனுண்டு, அவனை அடையப்பெறாது தனித்து வருந்துகின்றாள்’’[38] எனும் கருத்தைச் சிறைப்புறமாக வந்து நிற்கும் தலைவன் அறியுமாறு கூறுகின்றாள் தோழி.

**அலர் கூறுதல்**

காதலுக்குத் தடை ஏற்படக் காரணமாக அம்பல் விளங்கினும் அதுவே திருமணத்திற்கு முதற்காரணமாக அமைகிறது. மேலும் அலர் அதிகமாக அதிகமாக, இருவர் உள்ளத்திலும் காதல் மிகுதியாகி நன்மையும் உண்டாகும்.

தலைவியின் சுற்றத்தார், புதியதோர் இளைஞன் தங்கள் இடத்திற்கு அடிக்கடி வந்து செல்லும் அவனைக் கவனிக்கத் தவறுவதில்லை. அவன் வந்து செல்லும் நோக்கத்தை அறிந்து, ஊரார் அச்செய்தியினைத் தம்முள் மறைத்து உரையாடுவர். அஃது அம்பல், அலர் எனப்படும். இத்தகைய அலர் தூற்றுதலை நற்றிணைப் பாடல்,

*“சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி*
*மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேரத்தி*
*மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்*
*சிறுகோல் வந்தனள் அன்னை அலைப்ப”* *(நற்.149:1-4)*

என்ற உலோச்சனார் பாடல் நயம்பட எடுத்துரைக்கிறது.

தலைவன் சிறைப்புறமாக நிற்பதை அறிந்து தோழி, ஊரின் அலர் கூறி தலைவிக்குரைப்பது போலத் தலைவனுக்கு எடுத்துத்துரைகின்றாள் ‘‘சேரியிலுள்ள பெண்கள், தலைவன் தலைவியரின் களவு பற்றிப் பேசி,

சிறுமையான சொற்களைக் கேட்டு அவற்றை உண்மையென நம்பிய தாய், கொதிக்கும் பாலில் படர்ந்துள்ள பாலாடை போன்று பசலை படர்ந்துள்ள தலைவியைச் சுடுவாள் போல் அவளை நோக்கினாள்''.[39]

இப்பாடலில், தோழி ஊரின் அலரையும் அதனால் அன்னையின் செயல்பாட்டையும் விளக்குவதோடு தலைவியின் நலன் அழிவை,

*"அடுபால் அன்ன என்பசலை மெய்யே" (நற்.175:9)*

என்று தோழி எடுத்துரைத்து, தலைவனை மணம் செய்து கொள்ளுமாறு அறிவுரை கூறி வலியுறுத்துகின்றாள்.

## ஆற்றாமை வெளிப்படுத்தல்

சங்க கால அக வாழ்வு இயற்கையோடு இயைந்த வாழ்வாகும். அவ்வகவாழ்வு பல்வேறு இடர்ப்பாடுகளையும், ஏமாற்றங்களையும், எதிர்பார்ப்புகளையும் பாடுபொருளாகக் கொண்டது. சான்று, தலைவி தன்னுடைய ஆற்றாமையை வெளிப்படுத்தல்.

''தலைவன் காந்தளின் தாதை ஊதி அதன் மணம் எங்கும் பரவும்படி செய்யும் தும்பியைப் போல, என் நலன் நுகர்ந்து அலர் எங்கும் பரவச் செய்தான். காந்தளும் தும்பியும் பொருந்தியது பாம்பும் மணியும் போலும் வெருவரும் தோற்றத்தைத் தந்தது போல, எம் இருவர் நட்பும் அஞ்சுதற் குரியது என்று தன் ஆற்றாமை வெளிப்படுத்தி தன் மேனி மெலிவையும், நாண் அழிவையையும் கூறி வரைவின் இன்றியமையாமையைத் தலைவி தலைவனுக்குப் புலப்படுத்துகிறாள்''.[40]

## தலைவன் சிறைப்புறம்

தலைவன் இரவுக்குறி வந்து சிறைப்புறமாக இருப்பதை அறிந்து தோழி தலைவிக்குக் கூறுபவளாய், நம் தாய் ஒரு நாள் தலைவன் வந்ததை

அறிந்தாள், அன்று முதல் முன்பு இருந்ததைவிட மிகவும் பாதுகாத்து வருகின்றாள் என்பதை,

*"பெண்கொலை புரிந்த நன்னன் போல*
*வரையா நிரையத்துச் செல்இயரோ வன்னை*
*ஒருநாள் நகைமுகை விருந்தினன் வந்தெனப்*
*பகைமுக ஆரிற் றுஞ்சலோ விலளே" (குறுந்.292:5-8)*

தாய் தூங்காது விழித்ததைக் கண்டு தலைவி பெண் கொலை புரிந்த நன்னன் போல நரகத்திற்குச் செல்வாயாக என்று தாயைச் சபிக்கிறாள் குறுந்தொகைத் தலைவி.

## தொகுப்புரை

- அகப்பாடல்களில் இடம் பெறும் பாத்திரங்கள் பல்வேறு சூழல்களில் கூறிய கூற்றுகளும், அவர்களைப் பற்றி பிறர் கூறிய கூற்றுகளும் அப்பாத்திரங்களின் உளப்பாங்கினை எடுத்துக்காட்டுகின்றன. வரைவுகடாதல் துறையில் பேசும் பாத்திரங்களாக தலைவன், தலைவி, தோழி உள்ளனர். இப்பாத்திரங்களின் இயல்புகள், உலகியலை ஒட்டியும் புலவர்களின் எதிர்பார்ப்புகளாகவும் அமைந்துள்ளன.
- வரைவுகடாதல் துறையில் புலவரின் கூற்றுமுறை மட்டுமின்றி அக்கூற்றினைக் கேட்கும் பாத்திரங்கள் அதனை உணருமாறு முன் வைக்கும் பாங்கும், அப்பாத்திரங்களின் உணர்வுகளுக்கு ஏற்ப அமைகின்றன.

## தோழி

- தலைவியின் களவு வாழ்வில் பெரும் பங்கு வகிப்பவள் தோழி. அறிவுத்திறமை, சூழலுக்கேற்ப பேசும் நாவன்மை, தலைவியிடம் ஆழமான நட்பு, குலப்பெருமை காக்கும் பண்பு போன்ற இயல்புகள்

கொண்டவளாகத் தோழி படைக்கப்பட்டுள்ளாள். தலைவனை மணம் புரிய தூண்டும் வரைவுகடாதல் பாடல்களில் தோழி தன் கருத்துகளை நிலத்திற்குரிய கருப்பொருட்களைக் கொண்டு உள்ளுறையாகக் கூறுகிறாள்.

- தலைவி தலைவனைப் பாட விழைந்த போது முருகனைப் பாடுவதுபோல் தலைவனின் மலைவளத்தைப் பாடுவோம் என்று கூறுவதும், தலைவன் சிறைப்புறமாக நிற்பதையறிந்து அவனது இயல்புகளைப் பாடி அவனை வரைவு எண்ணம் கொள்ளுமாறு செய்வதும் தோழியின் அறிவுத் திறனுக்குச் சான்று பகர்கின்றன.
- தலைவனை விருந்தினர் போல இரவில் வருக என்று கூறி இரவுக்குறி அமைப்பதும், தலைவன் ஒழுக்கத்தைப் போற்றுபவன் என்பதையறிந்து அவனுடைய சிறப்பியல்புகளை அவனுக்குச் சுட்டிக்காட்டி அறிவுரையும், அறவுரையும் கூறி வரைவுகடாதல் சூழ்நிலைக்கேற்ப செயல்படுபவள் தோழி என்பதையும் பாடல் வழி எடுத்துக்காட்டுகின்றன.

## தலைவி

- களவினால் ஏற்படும் அலர் தலைவிக்கு அச்சத்தைத் தந்தாலும் களவு இடையீட்டின் பின் தலைவனைக் காணும்போது அனைத்தையும் மறந்து விடுகிறாள்.
- வெறியாட்டு தனக்கும் குலத்திற்கும் பழிதரும் என்ற அச்ச உணர்வை உடையவள் தலைவி.
- தலைவன் மீது கொண்ட அன்பின் காரணமாக அவன் கூறுவது அனைத்தையும் நம்புகின்றவளாகத் தலைவி காட்டப்படுகின்றாள்.
- சமுதாயத்தில் பலரோடு கலந்து பழகும் வாய்ப்புகள் இல்லாததால் எதனையும் எளிதில் நம்புபவளாய்த் தலைவி படைக்கப்பட்டுள்ளாள்.

**தலைவன்**

- இயற்கைத் தடைகளுக்கு மட்டுமின்றி அலருக்கு அஞ்சாதவனாகத் தலைவன் சுட்டிக்காட்டப்படுகிறான்.
- தலைவன் தலைவியைத் தன் உயிரினும் சிறந்தவளாகக் கருதி, அவளை மறத்தலும் துறத்தலும் இயலாத அன்புள்ளம் கொண்டவன்.
- பல செயல்களின் பொருட்டு எங்கும் செல்வதற்குரிய வாய்ப்பு தலைவனுக்கு இருந்ததால், தலைவியைப் போல இரவின் இடையூறுகளுக்கு அவன் அஞ்சவில்லை. அவற்றைத் தன் வீரத்துக்கு உரியவையாய் ஏற்றுக் கொண்டான். ஆளுமை தொடர்பான அறிஞர்களின் கருத்துகள் ஆய்விற்கு உட்படுத்திய பாடல்கள் மூலம் புலவர்களிடம் காணமுடிகின்றது.
- வரலாற்றுச் செய்தி வழி புலவர்களின் ஆளுமை மூலம் வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன.
- புலவர் பாடல்களில் முதற்பொருளும், கருப்பொருளும் முதன்மை பெற்று விளங்குகின்றது. உரிப்பொருளுக்குச் செவ்விய உறவு இல்லாததைக் காண முடிகின்றது.
- புலவர்கள் கருத்துகளை வெளிப்படுத்துவதில் பாரம்பரியம் சார்ந்தவர்களாகவும், பரந்த கண்ணோட்டம் உடையவர்களாகவும் திகழ்கின்றனர். விருப்பு, வெறுப்பற்ற ஆளுமைப் பண்பினை வெளிப்படுத்துபவர்களாகத் திகழ்ந்து பாடல்கள் மூலம் நிரூபித்துள்ளனர்.
- புலவர்களின் நோக்கம் ஒன்றாக இருந்தாலும் அவற்றை வெளிப்படுத்துவதில் தங்களுக்கே உரிய தனிப்பட்ட ஆளுமைப் பண்புகளை பெற்றிருப்பவர்களாக உள்ளனர்.

புலவர்கள் தங்கள் ஆளுமைகளை,

- களவு வாழ்வை நீட்டிக்க விரும்பாமை
- மாந்தர்களின் வாழ்வியல் கூறுகளை உளவியல் வழியே அணுகுதல்
- களவு வாழ்வு கற்பு வாழ்வாக மாறுவதை விரும்புதல்

போன்ற ஆளுமைத் தன்மை உடையவராகப் புலவர்கள் பாடல்களைப் புனைந்துள்ளனர்.

இவ்வாளுமைகள் யாவும், சங்க இலக்கியத்துக்கே உரியவை என்ற கருத்தின் மூலம் பாடல்களைப் புலவர்கள் இயற்றி வியக்க வைத்துள்ளனர்.

# அடிக்குறிப்புகள்

1. கீர்த்தி, பாரதியார் கவிதைகள், ப.48.
2. மறைமலை சி., இலக்கியமும் உளவியலும், ப.2.
3. காஞ்சனா இரா., இலக்கியமும் உளவியலும், ப.5.
4. பரணி சு., திருவாசகத்தில் உளவியல், ப.22.
5. மேலது, ப.22.
6. மேலது, ப.23.
7. வேணுகோபால் பா., கல்வி உளவியல், ப. 252.
8. மேலது, ப.252.
9. மேலது, ப.253.
10. நடராசன் தி.சு., திறனாய்வுக் கலை, ப.86.
11. சாரதாம்பாள் செ., இலக்கியமும் உளப்பகுப்பாய்வும், ப.7.
12. நடராசன் தி.சு., திறனாய்வுக்கலை, ப.86.
13. மேலது, ப.87.
14. மேலது, ப.87.
15. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.212.
16. சரளா ராசகோபலன், சங்க இலக்கியம் அகம், ப.64.
17. மாணிக்கம் வ.சுப., தமிழ்க்காதல், ப.31.
18. அகம்.2.
19. மனுவேல் ஐ., உளச்சுகாதாரம் கலைக்களஞ்சியம் தொகுதி–2, ப.373.
20. சுந்தரவடிவேலு நெ.து., அணிந்துரை, சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், தி.முத்துகண்ணப்பன், ப.11.
21. சண்முகம் தா.ஏ., உளநலவியல், ப.39.

22. ஷண்முகம் டி.ஈ., உளப்போராட்டம், கலைக்களஞ்சியம் தொகுதி 10, ப.134.

23. சண்முகம் தா.ஏ., உளநலவியல், பக்.40–41.

24. James C. Coleman., Psychology and effective behaviour, p.179.

25. அகம். 330.

26. "In an aproach - avoident conflict there are strong tendencies both to approach and to avoid the same goal", Coleman C. James., Psychology and effective behaviour, p.179.

27. ஷண்முகம் டி.ஈ., உளப்போராட்டம், கலைக்களஞ்சியம் தொகுதி 10, ப.13.

28. மாணிக்கம் வ.சுப., தமிழ்க்காதல் ப.70.

29. Normen L. Munn, Introduction of Psychology, p.214

30. James C. Coleman., Psychology and effective behaviour, p.201.

31. இராசமாணிக்கம் மு., உளவியல் துறைகள் – இரண்டாம் தொகுதி, ப. 362.

32. "These verses are all dramatic monologues", Meenakshi Sundaram, T.P, A History of Tamil Literature, p.22.

33. வரதராசன் மு., குறள் காட்டும் காதலர், ப.46.

34. நடராசன் தி.சு., கவிதையெனும் மொழி, ப.128.

35. அகம்.376.

36. அகம்.222.

37. நற்.182.

38. நற்.178.

39. நற்.175.

40. குறுந்.239.

இயல் - நான்கு

# புலவர்களின் மொழியும் கருத்தும்

## முன்னுரை

நமது எண்ணங்களையும் கருத்துகளையும் வெளிப்படுத்தும் ஒரு கருவி மொழி எனலாம். ஒவ்வொரு தனி மனிதனும் தன் திறனுக்கு ஏற்ற வகையில் மொழியைப் பயன்படுத்துகிறான். இதனால் மொழிப் பயன்பாட்டில் பல வேறுபாடுகள் தோன்றுகின்றன. அவரவர் ஆளுமைத் திறனுக்கேற்பவும் வேறுபடுகின்றது. எல்லோரும் ஒரே மொழியைப் பேசுபவராக இருந்தாலும் அவரது எண்ணத்தை வெளியிடும்போது பல்வேறு வழிகளில் வெளிப்படுத்துவர். இவ்வாறே புலவர்கள் தங்கள் சிந்தனையிலிருந்து வேறுபடுகின்றனர் என்பதை எடுத்துக்காட்டுவதாக இவ்வியல் அமைகின்றது.

## மொழிநடை விளக்கம்

தனிமனிதனின் பேச்சில், எழுத்தில் காணப்படும் வேறுபட்ட கூறுகள் அவனுடைய மொழியறிவு, சொல்லாட்சி, அதை வெளிப்படுத்தும் பாங்கு இவற்றை வெளிப்படுத்துவதே மொழிநடை எனப்படும்.

ஒரு மனிதன் பயன்படுத்தும் மொழியமைப்பினையும் மொழிப் பயன்பாட்டையும் நோக்க அதன் தன்மை வெளிப்படுகிறது. இதன் வழியாக அம்மனிதனின் மொழியறிவு, ஆளுமைத்திறன், தனித்திறன் மையப் பொருண்மை வெளிப்படுகின்றது. எளிமை, தெளிவு, செறிவு எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படும் தன்மை ஆகியவற்றையும் அறியமுடிகிறது. தனிமனிதனின் பேச்சையோ, எழுத்தையோ மட்டுமல்லாது ஒரு காலகட்ட

இலக்கியத்தினையும் அவரது படைப்பினையும் தெளிவாக ஆய்வதற்கும் அதனை வெளிப்படுத்துவதற்கும் மொழிநடை உதவுகிறது.

## மொழிக் கூறுகள்

இலக்கியம் என்பது மக்களின் வாழ்வியலைப் படம்பிடித்துக் காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குகிறது. ஒவ்வொரு கால இலக்கியமும் அக்கால மக்களின் வாழ்வியல் நெறிமுறைகளையும், பழக்க வழக்கங்களையும் பண்பாடு, அரசியல், பொருளியல் சிந்தனைகளையும் வெளிப்படுத்துகிறது. ஓர் இலக்கியத்தின் கருத்தமைவு பெரும்பாலும் அது சார்ந்துள்ள சமுதாயத்தையும் அதன் இயக்கத்தையும் பிரதிபலிக்கின்றன. சங்க மொழியானது அதன் அங்கங்களான கருத்தமைவு, மொழியமைவு என்ற இரண்டையும் ஒருங்கிணைத்து அமைக்கப்படுகின்றது.

பொருண்மை வெளிப்பாட்டில் சொல், சுவை, புதுமை, தத்துவ வெளிப்பாடு, உளவியல், அரசியல், கலைகள் போன்ற களப்பயன்பாடு, அணிகள், உவமை, உருவகம், யாப்பு முதலியன உத்திகளாகப் பயன்படுத்தப்படுகின்றன.

## உத்திகள்

“ஒருவர் ஒன்றைச் செய்யும்போது பயன்படுத்தும் தொழிற்கலை நுட்பக் கூறுகளே உத்தி எனப்படுகிறது”[1] என்று சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

“ஒரு கலைஞன் தன்துறையில் செவ்விய வெளியீட்டிற்குப் பயன் கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தியாகிறது” [2] என விளக்குவார் ச.வே.சுப்பிரமணியம்.

சங்க இலக்கியங்களில் பாடியுள்ள புலவர்கள், அணிகள், உவமை, உருவகம், வருணனை ஆகியவற்றைப் பயன்படுத்தி தங்கள் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர்.

## அணி

கவிதைகளும் காப்பியங்களும் இயற்றும் கவிஞர்கள் தமது நெஞ்சங்களில் தோன்றும் கருத்துகளை அழகுடன் கலைநயத்துடன் கற்போருக்கு உணர்த்த விரும்புகின்றனர். கவிதைக்கு அழகூட்டுவது அணி எனப்படும். கவிதைத் திறமை, சொல்லாற்றல், அளவற்ற புலமை, கற்பனை போன்றவற்றால் சொல்லழகும், பொருளழகும் தோன்றக் கவிதைகளை இயற்றுகிறார்கள். இது அணி இலக்கணமாகும். தமிழ்க் கவிதைகளுக்கு அழகு சேர்ப்பதில் அணிகளின் பங்கு மிகவும் சிறப்புடையதாகும்.

## உவமையின் தோற்றம்

அணிகள் அனைத்திற்கும் அடிப்படையானது உவமையணியாகும். மனித முயற்சியின் அரிய படைப்பு மொழி. அத்தகைய மொழியைக் கற்றுக் கொள்ள ஒப்பிட்டுப் பார்க்கும் முறையில் உவமை பேருதவி செய்கிறது. மனிதனுக்கு ஒன்றைப் பார்த்தால் அதனை ஒப்பிட்டு பார்த்து உள்ளத்தில் இருத்திக் கொள்ளும் பண்பு இயல்பாக அமைந்துள்ளது. எனவே மக்கள் மொழியைக் கற்றுக்கொள்ள உவமை முறையைப் பின்பற்றுகின்றனர்.

“உவமை என்பது கவிஞனின் அனுபவப் பொருளாகும், பொருள் அவன் காணும் புதிய பொருளாகும்”[3] என்றும் ரா.சீனிவாசன் அவர்கள் குறிப்பிடும் கருத்து இங்கு நோக்கத்தக்கதாகும்.

## உவமையின் பயன்

உவமை அணி எல்லா அணிகளுக்கும் தாய் அணியாக விளங்குகிறது.

“பொருள் விளக்கத்திற்காகக் குழந்தைகளுக்குச் சொல்லப்படுகின்ற கதைகளைக் கூட, ‘உவமானக் கதைகள்’ என்பர். உவமை என்பது பொருள்களை விளக்கும் கலங்கரை விளக்கம் என்பது தெளிவு”[4] என்று இ. சுந்தரமூர்த்தி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

ஒருவருக்குத் தெரிவிக்க விரும்பும் பொருளை, அவர் அறிந்த பொருளைக் கொண்டு விளக்க உதவுவது உவமையாகும். விளக்க முடியாத தத்துவங்களும், உணர்ச்சியின் ஆழ, அகலங்களும் கருத்துகளின் இன்றியமையாத தன்மைகளும் அறிவதற்கு உவமைகள் பெரிதும் பயன்படுகின்றன.

## தொல்காப்பியத்தில் உவமை

தொல்காப்பியர் உவமைப் பற்றி,

*“வினைபயன் மெய்உரு என்ற நான்கே*
*வகைபெற வந்த உவமைத் தோற்றம்”*

(தொல்.பொருள்.உவ.1)

என்று குறிப்பிடுகிறார். வினை, பயன், மெய், உரு என்ற நான்கின் அடிப்படையில் உவமைகள் தோன்றும் என்று கூறி, அடுத்த நூற்பாவில் இவ்வுவமைகள் ஒன்றாகவோ, இரண்டாகவோ விரவி வரும்.

*“விரவியும் வரூஉம் மரபின என்ப”*

(தொல்.பொருள்.உவ.2)

என்று எடுத்துரைத்துள்ளார்.

**தண்டியலங்காரத்தில் உவமை**

*"பண்பும் தொழிலும் பயனுமென் றிவற்றின்*
*ஒன்றும் பலவும் பொருளோடு பொருள்புணர்ந்து*
*ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை (தண்டி.நூ.30)*

எனத் தொல்காப்பியர் இரண்டு நூற்பாக்களில் கூறியவற்றை இணைத்து ஒரே நூற்பாவில் உவமை ஒன்றாகவோ, பலவாகவோ பண்பு, தொழில், பயன் எனும் அடிப்படையில் தோன்றும் என விளக்கம் தருவார் தண்டி ஆசிரியர்.

**உவமை சிறப்பு**

உவமை என்பது உயர்ந்த பொருளோடு வருமென்பதை,

*"சிறப்பே நலனே காதல் வலியொடு*
*அந்நாற் பண்பும் நிலைக்களன் என்ப"*

(தொல்.பொருள்.உவ.4)

ஆகிய சிறப்புகளால் அமைகின்றது என்பார் தொல்காப்பியர்.

*"உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்"*

(தொல்.பொருள்.உவ.8)

என்ற நூற்பாவில் உவமையும் உவமிக்கப்படும் பொருளும் ஒத்தவையாக இருத்தல் வேண்டும் என்பர்.

"இலக்கியக் கூறுகளுள் உவமை தலையாய கூறாகும். உவமையை ஆளுவதில் புலவருடைய கற்பனைத்திறன் வெளிப்படும். அவர்தம் கூர்ந்து நோக்கும் திறன் புலப்படும். அப்புலவருக்குள்ள உலகியல் அனுபவங்கள் வெளிப்படும். மேலும் கவித்துவக்குரிய அழகுணர்ச்சியும் தலைகாட்டும். தெரியாதவற்றைத் தெரிய வைக்கும் திறனுடையது உவமை"[5] என்ற கூற்றாலும் உவமையின் சிறப்பை அறிய இயலும்.

**உவம உருபுகள்**

*"அன்ன ஏய்ப்ப உறழ ஒப்ப*
*என்ன மான என்றவை எனாஅ*
*ஒன்ற ஒடுங்க ஒட்ட ஆங்க*
*என்ற வியப்ப என்றவை எனாஅ*
*எள்ள விழைய இறப்ப நிகர்ப்பக்*
*கள்ள கடுப்ப ஆங்கவை எனாஅக்*
*காய்ப்ப மதிப்ப தகைய மருள*
*மாற்ற மறுப்ப ஆங்கவை எனாஅப்*
*புல்ல பொருவ பொற்ப போல*
*வெல்ல வீழ ஆங்கவை எனாஅ*
*நாட நளிய நடுங்க நந்த*
*ஓட புரைய என்றவை எனாஅ*
*ஆறு ஆறு அவையும் அன்ன பிறவும்*
*கூறுங்காலைப் பல் குறிப்பனவே"*

(தொல்.பொருள்.உவ.11)

ஆகிய முப்பத்தாறு உவமஉருபுகளைத் தொல்காப்பியர் உவமவியலை விளக்கியுள்ளார். மேற்காணும் முப்பத்தாறு உவம உருபுகளை நான்கு வகைக்குள் அடக்குகிறார். பாடலுள் பயின்றவை நாடி நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு பகரும் திறத்தால் நால்வகை உவமைகளுக்குள் நால்வகை உவமைகள் வரவேண்டும் என்று நெறிப்படுத்தியுள்ளனர்.

**வினையுவம உருபுகள்**

*"அன்ன ஆங்க மான இறப்ப*
*என்ன உறழ தகைய நோக்கொடு*
*கண்ணிய எட்டும் வினைப்பால் உவமம்"*

(தொல்.பொருள்.உவ.12)

மேற்கண்ட எட்டும் தொழிலின் (வினை) வகைப்பட்ட உவமையாகும்.

**பயன் உவம உருபுகள்**

*“எள்ள விழைய புல்ல பொருவ*
*கள்ள மதிப்ப வெல்ல வீழ*
*என்றாங்கு எட்டே பயனிலை உவமே”*

(தொல்.பொருள்.உவ.13)

பயன் உவம உருபுகள் எட்டாகும் என்பதைச் சுட்டுகிறது.

**மெய் உவம உருபுகள்**

*“கடுப்ப ஏய்ப்ப மருள புரைய*
*ஒட்ட ஒடுங்க ஓட நிகர்ப்ப*
*என்று அப்பால் எட்டே மெய்ப்பால் உவமம்”*

(தொல்.பொருள்.உவ.14)

என்று மெய் உவம உருபு எட்டாகும் என்பதைக் குறிப்பிடுகிறார்.

**உரு உவம உருபுகள்**

*“போல மறுப்ப ஒப்ப காய்த்த*
*உருவம் நேர வியப்ப நளிய நந்தவென்று*
*ஒத்தவரு கிளவி உருவின் உவமம்”*

(தொல்.பொருள்.உவ.15)

தொல்காப்பியர் காலத்து வழங்கிய உருபுகளுள்ளும் பல. அவை சங்க இலக்கியத்தில் சில உருபுகள் பயின்று வந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் புலவர்கள் உவமையினை இயற்கைப் பொருட்கள், பண்பாடு, பழமொழி, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றோடு ஒப்புமைப்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியங்களில் உவமை வெறும் சொல் அலங்காரமாக இல்லாமல் கருத்துக்கேற்ப எடுத்தாளப்படுகின்றது.

## இயற்கைப் பொருட்கள்

தலைவனைப் பிரிந்த தலைவியின் உள்ளம் பசுங்கலம் போல உள்ளதென்பதை,

*"பெயனீர்க் கேற்ற பசுங்கலம் போல*
*உள்ளத் தாங்கா வெள்ள நீந்தி*
*........................ உயர்கோட்டு*
*மகவுடை மந்தி போல"* *(குறுந்.29:2-3, 5-6)*

என்ற ஔவையார் பாடல் மூலம் இயற்கையாக பெய்தலை உடைய மழையின் நீரை ஏற்றுக் கொண்ட, சுடப்படாத பசு மண்ணலாகிய பாண்டத்தைப் போல உள்ளத்தினால் பொறுக்க முடியாத ஆசை வெள்ளத்தைத் தாங்க முடியாது என்ற உவமையின் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

## பண்பாடு

தலைவன் இயல்பாகவே நல்லியல்புகள் படைத்தவன். அவன் சார்ந்த சமுதாயமும் அறச்சிந்தனைகளையே வாழ்க்கை முறைகளாய் உடையது. எனவே தோழி இவ்விரு பண்புகளையும் இணைத்துக்கூறி அவனை வரைவிற்கு விரைவுபடுத்துகிறாள்.

*"ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்*
*போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை*
*பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்*
*அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை*
*அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்*
*செறிவெனப் படுவது கூறியது மறாஅமை*
*நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை*
*முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்*
*பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்"*

(கலித்.133:6–14)

என்றெல்லாம் சமுதாயத்தின் உயர்ந்த கருத்துக்களைத் தோழி தலைவனிடம் எடுத்துக்கூறி, நீ இவற்றையெல்லாம் நன்கு அறிவானாயின், எம் தலைவியின் நலனுண்டு பின் துறத்தல் என்பது இனிய பாலை உண்பவர் பாலை உண்டு அக்கலத்தை அதன்பின் கவிழ்த்து விடுதல் போன்றதன்று. எனவே உன் உயரியல்பு வெளிப்படுமாறும், சமுதாயம் போற்றுமாறும் தலைவியை வரைந்து அவள் துயரைக் களைய வேண்டும் என்பது தோழி கூற்றில் காணப்படும் குறிப்பாக புலவர் அமைத்துள்ளார்.

## பழமொழியில் உவமை

"புலி வலையில் நரி அகப்படுதல் போல" என்பது பழமொழிச் செய்தியாகும். பெரிய புலியைக் கொல்வதற்காக வைக்கப்பட்ட வலையில், வழியில் காரணமில்லாமல் செல்லும் குறுநரி அகப்பட்டது போல என்னும் செய்தி உவமையில் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

*"இரும்புலி கொள்மார் நிறுத்த வலையுள்ஓர்*
*ஏதில் குறுநரி பட்டற்றால்" (கலி.65:24-25)*

என்ற பாடல் வரிகளால் மேற்காணப்பட்ட உவமையை ஒத்து வருகிறது என்பதை அறிய முடிகிறது.

## அணிகலன்

*"ஓவத்தன்ன வினைபுனை நல்லில்*
*பாவை அன்ன பலராய் மாண்கவின்" (அகம்.98:11,21)*

*"பொன்னுடை மணியன்ன மாமை" (கலி.48:17)*

மகளிரின் மேனி பொன்னுக்கும், மகளிரைப் பாவைக்கும் உவமையாகக் குறிப்பிட்டுள்ளனர் புலவர்.

## ஐம்பெரும் பூதங்கள்

ஐம்பெருங் பூதங்களாகிய நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய இவை ஐந்தும் ஆகும். இவற்றில் ஒன்றிரண்டு கூட்டியும், குறைத்தும் கூறும் மரபு உள்ளது.

*"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரல்"* *(குறுந்.3:1-2)*

புலவர் இவ்வாறு சங்கப் பாடல் பாடி இயற்கையை வருணித்துள்ளனர்.

## இரட்டை உவமை

தொல்காப்பியம் சொல்லியலில் 'இரட்டைக் கிளவி' என்ற தொடர் காணப்படுகிறது. வந்த அசையே திரும்ப வருவது இரட்டைக் கிளவி எனப்படும்.

*"இரட்டை கிளவியும் இரட்டை வழித்தே"*

(தொல்.சொல்.நூ.293)

இரட்டை கிளவிகள் சங்க இலக்கியத்தில் பயின்று வரும் உவமையாகும். ஒவ்வொரு நூலிலிருந்து ஒவ்வொரு எடுத்துக்காட்டுத் தரப்படுகின்றது.

சிறிய உயிரும் பெரிய காமமும் சிறிய கொம்பிற்கு பெரிய பழம் உவமையாக ஒப்பிடப் பெறுகின்றன. எந்த ஒன்றைப் பிரித்தாலும் பொருள் புலப்படாது.

*"சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங் கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"* *(குறுங்.18:4-5)*

*"குன்று அகல் நன்னாடன் வாய்மையில் பொய்தோன்றில்*
*திங்களுள் தீத்தோன்றி யற்று"* *(கலி.41:23-24)*

*"வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்*
*புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்"* *(அகம்.12:11-12)*

பாதுகாப்பு இலதாகித் தன்னைத் தாங்குவதற்குரிய கொம்பும் சிறியதாகித் தானும் பெரியதாகி இருக்கும் பழம் கனிந்து கொம்பினின்றும் உகும். தன்னை வேற்று வரைவினின்றும் பாதுகாப்பு இலளாகி உயிரும் சிறியளாகிய இவளிடத்துக் காமம் பின்னும் கனியும் இவள் உயிர் விடுதலும் நேரும். இங்குக் கனிக்குத் தலைவியின் உயிர் உவமையாகப் பயின்று வந்துள்ளது.

மலைமிக்க நல்ல நாட்டை உடையவன் கூறிய மெய்யிலே, பொய் தோன்றுமாயின் அது சந்திரனில் தீயானது தோன்றியதைப் போன்றதாகும். இதில் தலைவனின் நாடு சந்திரனில் தீ என்று இரண்டு உவமைகள் கூறப்பட்டுள்ளது.

மலைச் சாரலில் பலாப்பழத்தைக் காக்கக் குறவர் சில குடில்களை அமைத்துள்ளனர். அவற்றின் மீது வேங்கை மலர்கள் உதிர்ந்து பரவியுள்ளன. அத்தோற்றம் புலியின் தோற்றத்தைப் போல் யானைக்குத் தோன்றியது. அதனால் அஞ்சி ஓடுகின்றது. அவ்வாறு ஓடும்போது மூங்கில்கள் முறிகின்றன. தலைவிக்கும் உனக்கும் உயிர் ஒன்றுதலால் நீ இரவில் வருவது துன்பம் உண்டாகும் என்ற எண்ணத்தால் உயிர் வாழாள் என்பது உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

## பல்பொருள் உவமை

ஒரு பொருளுக்கு ஓர் உவமையைக் கூறுவது பொது மரபாகும். ஒன்றுக்கு மேற்பட்ட பல பொருள்களை உவமையாகக் கூறும்பொழுது அவை அக்கவிஞனின் வியப்புணர்ச்சியையும் உவமைகளை மிகுதிப்படுத்திக் காட்டும் திறனையும் எடுத்துக்காட்டுகின்றன. இதனைப் பல்பொருள் உவமையணி என்று குறிப்பிடலாம்.

ஒரு செய்திக்கே மூன்று உவமைகள் அமைப்பதோடு ஒரே செய்தியை மூன்று முறை கூறுதலும் ஒரு சில இடங்களில் காணப்படுகிறது.

*"மணிபோலத் தோன்றும் மணிபோலத் தோன்றும்*
*மணிபோலத் தோன்றும் என்மேனியைத்*
*துன்னான் துறந்தான் மலை"* *(கலித்.41:32-34)*

இப்பாடல் தலைவனின் இயல்பைப் புகழ்ந்தும் இகழ்ந்தும் பாடிய பாட்டாகும். தன்னைத் துறந்தவன் மலை மழைவளம் பெற்று நீலமணி போல் தோன்றுதல் என்பது தகாது. நீலமணி போல் நீலநிறம் பெற்று விளங்குதல் என்பது வளத்தால் பசுமை மிக்குத் தோன்றுவதைக் குறிக்கிறது. மலையின் வளத்தை மூன்றுமுறை உவமை வாயிலாகக் குறிப்பிடுகிறார் புலவர்.

## பொருள் உவமை

உவமையும் பொருளும் இடம் மாற்றுவதால் ஒரு புதுமை உண்டாகலாம். மொழித் தொடரில் எழுவாய் பயனிலைகளை இடம் மாற்றுவதால் ஒரு புதுமையை உண்டாக்கி நடையழகினைக் காண முடிகின்றது. அம்மாற்றம் ஒரு சில இடங்களில் வருவதால் நடையில் மாற்றமும் புதுமையும் விளைவித்துத் தனி நடையைத் தோற்றுவிக்க முடியும். அதேபோல உவமை அணியின் இப்புதுமையை உண்டாக்கி அணியழகைத் தோற்றுவிக்கலாம். இதனை வடநூலார் விபரீத அணி என்று பாராட்டுவர். அதற்கு நிகராகத் தமிழில் பொருள் உவமை அணி எனப் பெயர் கொள்ளலாம். இவ்வாறு கொள்வதற்குத் தொல்காப்பியம் இடம் தருகின்றது. தொல்காப்பியர்,

*"பொருளே உவமம் செய்தனர் மொழியினும்*
*மருளறு சிறப்பின் அஃது உவமமாகும்"*

**(தொல்.பொருள்.உவ.9)**

என்று உவமவியலில் பொருள் உவமையினைக் கூறுகின்றார்.

*“கனைத்த நெய்தற் கண்போல் மாமலர்”* *(அகம்.150:8)*

*“நெய்தல் உன்கண் பைதல கலுழ”* *(அகம்.10:5)*

மனித வடிவத்திற்கு இயற்கை உவமையாக அமைதல் பொதுநியதியாகும். இப்போது நியதி மாறி இயற்கைக்கு மாறாக மனித உருவம் உவமையாக அமைதல் அருகிய வழக்காகும். எடுத்துக்காட்டாக, ‘நெய்தல் மலர்’ கண்களுக்கு உவமையாகிறது. இது பொது நியதி நெய்தல் மலர் கண்களைப் போல மலர்கிறது என்று கூறுவது சிறப்பு நியதி என்று கூறப்படுகிறது.

இதே போல காந்தள் மலருக்கு மகளிர் கரங்கள் உவமையாகின்றன.

*“கைபோல் காந்தள்”* *(நற்.355:2)*

*“கண்போல் நீலத் தண்கமழ் சிறக்கும்”* *(நற்.273:8)*

தலைவியின் கண்களை நீலமலருக்கு உவமையாக சேந்தன் கீரனார் பாடியுள்ளார்.

**வரலாற்று உவமை**

தலைவியின் நலத்திற்கு ஊரை உவமையாக கூறிய இடம் வருமாறு,

*“கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்*
*நெடுந்தேர் மிஞிலியோடு பொருதுகளம் பட்டெனக்*
*காணிய செல்லாக் கூகை நாணிக்*
*கடும்பகல் வழங்கா தாஅங்கு இடும்பை*
*பெரிதால் அம்ம இவட்கே அதனால்*
*மாலை வருதல் வேண்டும் சோலை”* *(அகம்.148:7-12)*

ஆஅய் எயினன் ஒரு மன்னன். இவன் மிஞிலி என்பவனுடன் போரிட்டு மடிந்தான். மிஞிலி நன்னனின் படைத்தலைவன். எனவே மிஞிலியின் வெற்றியைப் போர்க்களத்தில் போய்க் கொண்டாட முடியாதபடி பல இடையூறுகள் இருந்தன. ஆதலால் அவன் பகலில் செல்லவில்லை. அவன்

பகலில் சென்று தன் மிஞிலியின் வெற்றியைக் கொண்டாட இயலாததுபோல் இவளும் உன்னைப் பகற்குறியில் வந்து காண இயலாதபடி பல இடையூறுகள் இருந்தன எனப் பரணர் தலைவியின் நலத்திற்கு ஊரை உவமையாகக் காட்டியுள்ளார். தலைவன் இரவில் வருவது தலைவிக்குத் துன்பத்தைத் தருவதாய் உள்ளது.

**நகைச்சுவை உவமை**

கனவில் புலியைக் கண்டு யானை வெருவிய தன்மை, அத்தலைவி தான் நனவில் நிகழ்த்தியதைக் கனவில் கண்டு அஞ்சினாள்.

***"கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு***
***நெடுவரை மருங்கில் துஞ்சும் யானை***
***நனவில் தான் செய்தது மனத்தது ஆகலின்***
***கனவில் கண்டு கதும்என வெரீஇப்***
***புதுவதாக மலர்ந்த வேங்கையை***
***அதுஎன உணர்ந்துஅதன் அணிநலம் முருக்கிப்***
***பேணா முன்பின் தன்சினம் தணிந்து அம்மரம்***
***காணும் பொழுதில் நோக்கல் செல்லாது***
***நாணி இறைஞ்சும் நன்மலை நன்னாட"*** ***(கலி.49:1-9)***

புலியொடு பொருத யானை அதே நினைவில் உறங்குகிறது. புலி தன்னைத் தாக்க வருவதுபோலக் கனவு காண்கின்றது. உடனே விழித்தெழுந்து அருகிலிருக்கும் வேங்கை மரத்தைப் புலியென நினைத்துத் தாக்கத் தொடங்குகிறது. தன் சினம் தணிந்த பிறகு தன் தவறை உணர்ந்து நாணித் தலையைக் கவிழ்த்துக் கொள்கிறது. இந்நிகழ்ச்சியால் நகைச்சுவை எழுகிறது.

## உவமையை அடுக்குதல்

உவமை எது பொருள் எது? என்று தெரியாமல் அடுக்குவது உவமையைக் குற்றமென்று தொல்காப்பியர் கூறுகிறார். கீழ்வரும் பாடலை அடுக்கிய உவமைக்கு சான்றாகக் கூறலாம். தங்காற் பொற்கொல்லனார் பாடும் பாடல்,

*"வரைமுதல் சிதறி யவைபோல் யானைப்*
*புகர்முகம் பொருத புதுநீர் ஆலி*
*பளிங்குசொரி வதுபோல் பாறை விரிப்ப"*

**(அகம்.108:3–5)**

யானையின் முகப்புள்ளி, மலையிற் சிந்திய முத்துப்போன்றது என்றும், புதுநீர் ஆலங்கட்டி யானையின் முகப்புள்ளியைப் போன்றது என்றும், யானையின் புகர் முகத்திற் சிந்திய பனிக்கட்டி, மலையிற் சிந்திய முத்து போன்றதென்றும், பனிக்கட்டி பாறையில் சிதறுதல், பளிங்கு சொரிதல் போன்றதென்றும், மலையிற் சிதறிய முத்துபோல யானையின் முகத்திற் பட்ட பனிக்கட்டி, பளிங்கு சொரிவது போலப் பாறையில் உதிர்ந்தது என்றும், யானையின் முகப்புள்ளி போன்ற பனிக்கட்டி, மலையிற் சிந்திய முத்துப்போலவும், சொரிந்த பளிங்கு போலவும் பாறையிற் சிந்தியதெனவும் பலவாறாக உவமையையும் பொருளையும் பொருத்த இடமிருப்பதால் இவ்வுவமை 'அடுக்கிய தோற்றம்' என்ற குற்றப்பட உவமையாக விளங்குகிறது"[6] என்பார் அர.சிங்காரவடிவேலன்.

## நடைபெறாத நிகழ்ச்சியை உவமையாக்கல்

வாழ்க்கையில் என்றுமே நடைபெறாத நிகழ்ச்சிகளும் உவமையாகின்றன. அவற்றை இல்பொருள் உவமை அணி என்பர். அவை நடக்கவே இயலாத நிகழ்ச்சியாகும்.

*“ஈரத்துள் இன்னவை தோன்றின் நிழற்கயத்து*
*நீருள் குவளை வெந்தற்று”* *(கலித்.41:30-31)*

நீருள் குவளை வெந்துப் போதல் இயலாத காரியம் என்பது தெளிவாகிறது. இதை உவமை வாயிலாகப் புலவர் புலப்படுத்தியுள்ளார்.

## உவமையால் பெயர் பெற்ற புலவர்கள்

புலவர்கள் உவமையைப் போற்றி எடுத்தாண்டுள்ளனர். சில உவமைகள் புலவர்களின் தனிப்படைப்பாகும். அவை அவர்களின் தனித்திறமையையும், சொல்லாற்றலையும் புலப்படுத்துகின்றன. அதனால் அவர்கள் உருவாக்கிய உவமைகளின் சிறப்பினால் அவர்களுக்குக் காரணப் பெயர்களாக அமைந்துவிட்டன. அவர்களின் இயற்பெயர் மறைந்து அவையே நிலைத்து விட்டன. அவர்கள் எடுத்தாண்டுள்ள உவமைகளை வேறு எவரும் எடுத்தாளவில்லையென்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### ஊட்டியார்

ஊட்டியார் என்னும் புலவர் தன் பாடலில் ஊட்டி என்ற சிறப்புப் பெயரால் அவர் ஊட்டியார் என அழைக்கப்பட்டார்.

*“ஊட்டி யன்ன ஒண்தளிர்ச் செயலை”* *(அகம்.68:5)*

*“ஊட்டி யன்ன ஊன்புரள் அம்பு”* *(அகம்.388:24)*

நிறம் ஊட்டியது போன்று சிவந்த அசோகந்தளிரின் இயற்கை நிறமும், குருதிப் படிந்த அம்பின் நிறமும் பூசிய செம்மை போன்றன எனத் தற்குறிப்பேற்றமாக உவமை கூறிய சிறப்பால் **‘ஊட்டியார்’** என்ற பெயர் பெற்றார். ஒரே உவமையை இரண்டு பொருள்களுக்கு அவர் அமைத்திருப்பது அவர்தம் தனிச் சிறப்பதென்பது தெரிகிறது.

**கவைமகனார்**

நீ அன்பின் மிகுதியால் வழியின் ஏதம் பாராது வருகின்றாய். இவள் அதற்கு அஞ்சுவாள் என்று கூறி தோழி வரைவு கடாவினாள்.

*"இனமீன் இருங்கழி நீந்தி நீநின்*
*நயனுடை மையின் வருதி இவள்தன்*
*மடனுடை மையின் உயங்கும் யானது*
*கவைமக நஞ்சுண் டாஅங்கு*
*அஞ்சுவல் பெருமஎன் நெஞ்சத் தானே"*

(குறுந்.324:3–7)

இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால் இருவருக்காகவும் ஒருதாய் வருந்துவதுபோல, வரையாது வரும் தலைவனால், தலைவி பொருட்டும் தலைவன் பொருட்டும் தான் அஞ்சுவதாகத் தோழி கூறுகிறாள். தோழியின் இருதலைக் கொள்ளி எறும்பு நிலையைக் 'கவைமகன்' உவமை தெளிவாக விளக்குவதால் இப்புலவர் '**கவைமகனார்**' என்ற சிறப்புப் பெயர் பெற்றார். இருமகனுக்கும் நஞ்சு தீர்க்கும் மருந்து தருதலே உயிர் காப்பது போலத் திருமணம் செய்து கொள்வதே இருவருக்கும் நன்மை விளைவிக்கும் என்று இப்பாடல் மூலம் புலவர் புலப்படுத்தியுள்ளார்.

சங்க இலக்கிய உவம உருபுகளின் அமைப்பையும் வடிவங்களையும் ஆராய்வதற்கு அவற்றைத் தொகுத்துக் காண்பது இன்றியமையாததாக உவமை விளங்குகிறது. ஆகவே அவற்றின் எண்ணிக்கையும் வரும் இடங்களும் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

**உருவகம்**

"உவமை என்பது உவமையும் பொருளுமாகத் தனித்து இயங்குவது. உருவகம் என்பது பொருள் உவமையோடு ஒன்றி விடுவதுயாகும். 'உவமையும்

பொருளும் வேறுபாடு ஒழிவித்து ஒன்றென அமைத்தால் அஃது உருவகமாகும் என்பது தண்டியாசிரியர் கருத்தாகும்”.[7]

உருவக அணியில் என்னும், ஆகிய என்ற சொற்கள் மறைந்தும் வெளிப்பட்டும் வரும். உவமானத்திற்கும் உவமேயத்திற்கும் இடையே வேற்றுமையை அகற்றி இரண்டும் ஒன்றென்பது உருவகமாகும். உவமையைப் போல உருவகம் அதன் பொதுத்தன்மையை விரித்துக்கூற இயலும். வினை, பயன், மெய், உரு ஆகிய தன்மைகள் விரித்துக் கூறுவதற்கு வாய்ப்பாக அமைகின்றது.

ஆக, ஆகிய, என்னும், எனப்படும் இந்நான்கு உருபுகளே உவமை உருபுகளாக வந்துள்ளன. இவ்வுருபுகளே ஒன்று மற்றொன்றாகிறது என்னும் செய்தியைப் புலப்படுத்துகின்றது. எனவே பொருள் உவமையாக மாறும்பொழுது அஃது உருவமாகி விடுகிறது.

**தனிநிலை உருவகம்**

சங்க இலக்கியத்தில் இவ்வகை உருவகம் ஒருசில இடங்களில் காணப்படுகின்றது. உவமைகளை விட உருவகம் ஆற்றல் பெற்றவையாக விளங்குகின்றது. உணர்வும் சித்திர அழகும் நிறைந்த சொல்லோவியங்களாக இவை விளங்குகின்றன. மெய் என்ற பாட்டால் அமைந்த உருவகம்,

***“கண்ணீர் அருவியாக***
***அழுமே தோழி”*** ***(நற்.88:8-9)***

அருவி நீர் ஒழுகுதல் கண்ணீருக்கு உவமிக்கப்பட்டுள்ளது. அருவிக்கு அதனையே உருவகமாகக் கூறும்பொழுது அருவி நீர் கண்ணீராகவே கூறி உருவகம் அமைத்துள்ளார்.

*“கூந்தல் மெல்லணைத் துஞ்சி”* *(அகம்.308:13)*

கூந்தலை மெல்லணையாக உருவகப்படுத்தியுள்ளார் பிசிராந்தையார்.

உருவமாகக் கூற வேண்டிய சூழ்நிலை இல்லாமல் இயல்பாக அமைந்த உருவகமும் உள. சிறுவர்கள் வாய் வைத்து உரிஞ்சும் பனை நுங்கு விரும்புகின்ற முலையாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. உருபு நிலை உருவகம் பாடலாவது,

*“மனையமுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்*
*துனையதின் முயன்ற தீங்கண் நுங்கின்*
*பணைகொள் வெம்முலை பாடுபெற்று உவக்கும்”*

(நற்.392:3–5)

சிறுவர்கள் சுவைப்பதற்குரிய கொங்கை போறலின் நுங்காகிய முலையென்றார் என்பது உரையாசிரியர் கருத்தாகும்.

## தற்குறிப்பேற்றம்

இயல்பாக நிகழ்கின்ற செயலுக்குப் புலவன் ஒரு காரணம் காட்டி, இதனால்தான் இது நிகழ்கிறது என்று தன்குறிப்பை ஏற்றிக் கூறும் அணி தற்குறிப்பேற்றமாகும்.

*“ஊட்டி யன்ன ஒண்தளிர்ச் செயலை”* *(அகம்.68:5)*

தோட்டத்திலுள்ள அசோக மரக் கிளையில் கட்டப்பெற்ற ஊசல் கயிறைப் பாம்பெனக் கருதி இடி இடித்து அந்த அசோக மரத்தை அடியோடு அழிக்கும். புலவர் இயற்கையாக நடக்கும் நிகழ்ச்சியை அசோக மரக்கிளையில் கட்டப்பட்டுள்ள கயிறைப் பாம்பென நினைத்து இடி இடித்து இயல்பாக நடப்பது அந்த அசோக மரத்தை இடியோடு அழிக்கும் என தன் கற்பனைத் திறனை ஏற்றிக் கூறுகிறார் ஊட்டியார்.

காவிரியாற்றில் கழார்த்துறையின்கண் ஆடிக் கொண்டிருந்த அத்தி என்பவன், ஆற்றில் வழுக்கி வீழ்ந்து வெள்ளத்தால் ஈர்த்துக் கொள்ளப்பட்டான் என்னும் செய்தியைக் கவிநயம்பட 'காவிரியாறு அவனழகைக் கண்டு இழுத்துக் கொண்டது' எனப் புனைந்துள்ளார்.

*"கழாஅர்ப் பெருந்துறை விழுவி னோடும்*
*ஈட்டெழிற் பொலிந்த ஏந்தகுவவு மொய்ம்பின்*
*ஆட்ட னத்தி நலனயந் துரைஇத்*
*தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்" (அகம்.222:5-8)*

என்னும் அடிகளில் தன் கருத்தை ஏற்றிக் கூறியுள்ளார்.

**வருணனை**

இலக்கியத்தில் இயற்கைத் தரும் நிலைகள் பல உள்ளன. இயற்கையை அழகுறப் புனைதல், இயற்கையில் பல கூறுகளை இணைத்துக் கூறுதல் வருணனையாகும்.

வயது முதிர்ந்துவிட்டதால் பறக்க முடியாத இன்னொரு நாரை பற்றி இரக்கம் தோன்ற அம்மூவனார் பாடிய பாடல் பகுதி குறுந்தொகையில் காணப்படுகிறது. நீர்நிலை மீது நீர்ப்பரப்பின் அருகே நீண்டு வளைந்துள்ள மரக்கிளையில் ஒரு முதுகுருகு அமர்ந்திருக்கிறதாம்.

*"விழவுமேம் பட்டவென் னலனே பழவிறற்*
*பறைவலந் தப்பிய பைத னாரை*
*திரைதோய் வாங்குசினை இருக்கும்" (குறுந்.125:4-6)*

இவ்வாறு வசதியான இடத்தில் அமர்ந்து கொண்டால், பறந்து சென்று இரை தேடும் துன்பம் இல்லாமல், இருந்த இடத்திலேயே உணவு உண்டு விட முடியாதா என்பதுதான் அந்த நாரையின் ஆசை. அதை இரக்கம் தோன்ற வருணனை மூலம் ஓவியமாக்கியுள்ளார். நாரை இரையின்றி உயிர் நீத்தலைப்

போலத் தலைவன் இரங்கி வரைந்து கொள்ளாமல் இருந்தால் தலைவியும் உயிர்விடுவாள் என்று குறிப்பால் உணர்த்துகிறார் புலவர்.

தலைவியைக் காணும் பொருட்டுத் தலைவன் ஒரு பகலில் வந்தான். ஆனால் வழக்கமாகக் காணும் இடத்தில் தலைவியைக் காண இயலவில்லை. அப்போது அவனிடம் தோழி வந்து, தலைவியின் பருவமும் அழகும் நோக்கி வீட்டைவிட்டு வெளியேறா வண்ணம் செய்துவிட்டனர் என்று கூறுகின்றாள். இச்செய்தியை அவள் கூறுதலின் நோக்கம் தலைவன் விரைவில் மணந்து கொள்ளுதல் வேண்டும் என்பதேயாகும்.

இக்கருத்தை தெரிவிக்கும் பாடலின் சில வரிகளாவன,

***"அருங்கடிப் படுத்தனள் யாயே கடுஞ்செலல்***
***வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறைக்***
***கனைத்த நெய்தற் கண்போல் மாமலர்***
***நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ***
***மாலை மணிஇதழ் கூம்பக் காலைக்***
***கள்நாறு காவியொடு தண்ணென மலரும்***
***கழியும் கானலும் காண்தொறும் பலபுலந்து"***

**(அகம்.150:6–12)**

இவ்வடிகளில் பா மணத்தோடு பூ மணமும் விரவி மகிழ்வூட்டுகின்றது.

இவ்வாறே மற்றொரு பாடலிலும் மலரின் சிறப்பைக் குறுவழுதியார் குறிப்பிடுகிறார்.

"பகல்போல் விளங்கும் நிலவொளியில் வேங்கை பூத்திருப்பது கண்டு மயங்கிய பெண் யானை புலியை நினைத்து ஓடும் காட்சியைத் தெளிவுறக் கண்டு அழகாக வருணித்துள்ளார்".[8]

## இயற்கை

மனிதனால் உருவாக்க இயலாத அனைத்தும் இயற்கையாகும். பழந்தமிழ் மக்கள் இயற்கைச் சூழலைப் புரிந்துக் கொண்டு அதற்கேற்பத் தங்கள் வாழ்வியல் முறைகளை அமைத்துக் கொண்டனர்.

உலோச்சனார் பாடல் மூலம் கடற்கரையில் பரந்து கிடக்கும் வெண்மணற் பரப்பு அவரது உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது.

நிலவொளிபோல் ஒளிரும் வெண்மணல் (நிலவுமணல்) (அகம்.20) கீழ்த்திசையிலிருந்து வீசும் காற்றினால் குவிக்கப்பட்ட மணல் மேட்டினை ஓர் இடத்தில் ''கொண்டல் இடுமணல்'' (அகம்.20) எனச் சுட்டுகின்றார். இயற்கையைப் புலவர் ஆழ்ந்து அனுபவித்து உள்ளார் என்பதைப் பாடல் மூலம் பதிவு செய்துள்ளார்.

## குறிஞ்சி நில வருணனை

குறிஞ்சி நிலத்தில் காணப்படும் விலங்குகள், மலைகள் ஆகியவற்றைச் சுட்டிக்காட்டுகின்றார் ஔவை.

*''நெடுவரை மருங்கிற் பாம்புபட விடிக்கும்*
*கடுவிசை யுருமின் கழறுகுர லளைஇக்*
*காலொடு வந்த கமஞ்சூன் மாமழை'' (குறுந்.158:1-3)*

எனவும் குறிப்பிடுகிறார்.

*''இடம்படுபு அறியா வலம்படு தோட்டத்து*
*வாள்வரி நடுங்கப் புகல்வந்து ஆளி*
*உயர்நுதல் யானைப் புகர்முகத்து ஒற்றி*
*வெண்கோடு புய்க்கும் தண்கமழ் சோலைப்*
*பெருவரை அடுக்கத்து ஒருவேல் ஏந்தி*
*தனியன் வருதல் அவனும் அஞ்சான்'' (அகம்.252:1-6)*

எனக் குறிஞ்சி நிலத்தை வருணிக்கும்பொழுது அந்நிலத்திலுள்ள விலங்குகள், பெய்யும் மழை, இடி, மின்னல் போன்ற இயற்கை செயல்பாடுகளை இப்பாடல் மூலம் விளக்குகிறார்.

## நெய்தல் நில வருணனை

"சங்க காலத்துப் புலவர்கள் நெய்தல் நிலம் பற்றிப் பாடியுள்ளனர். திரைகள் நடுவே சென்ற பரதவரிடம் ஒரு பெரிய மீன் சிக்கிக் கொண்டது. அதனை விடாமல் பற்றிவிடும் முயற்சியில் இறங்கிய பரதவர் எறி உளி என்னும் கூரிய கருவி ஒன்றினை அந்தப் பெருமீன் மீது எறிந்துவிட்டனர். உயிருக்குப் பாதுகாப்பு நாடிய அப்பெருமீன் குருதி ஒழுகக் கடல் நீரைக் கலக்கியும் குருதியை அதனிடைக் கரைத்தும் ஓயவில்லை. எப்படியேனும் தப்பிவிட நினைந்து துள்ளியது. ஆயினும், அதன் முயற்சி பயன் தரவில்லை. இறுதியில் படகுகள் இருந்த பக்கத்தில் வலிமை இழந்து அழிந்து ஒதுங்கி விட்டது.

*"குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்*
*எறிஉளி பொருத ஏமுறு பெருமீன்*
*புண்உமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட*
*விசும்புஅணி வில்லின் போகிப் பசும் பிசிர்த்*
*திரைபயில் அழுவம் உழக்கி உரன்அழிந்து*
*நிரைதிமில் மருங்கின் படர்தரும்"* *(அகம்.210:1-6)*

உலோச்சனார் இவ்வடிகளில் காட்டப்படும் காட்சி மிகத் தெளிவாகவும் விரிவாகவும் உள்ளது. புலவர் இத்தகைய நடுக்கடல் வேட்டம் ஒன்றைக் கண்டிருத்தல் கூடும் என்று நினைக்கும் அளவுக்கு நிழற்படத் தன்மை ஒத்துள்ளது"[9] என மு.வரதராசன் குறிப்பிட்டுள்ளார்.

## மருதநில வருணனை

மருதநில காட்சிகளில் அளவிறந்த ஈடுபாடும், திட்பநுட்பம் வாய்ந்த தெளிவும் உடையவர் பரணர். அவருடைய பரந்த பாவன்மையுள் முகில் தவழும் மலைச்சிகரம் முதல் அலைமோதும் கடற்கரை வரையில் பரந்துபட்டு விளங்கும் எல்லாக் காட்சிகளும் அடங்கும்.

காற்றின் விரைந்த இயக்கத்தால் வளைந்து பணியும் ஆம்பல் மலர்த் தொகுதியின் காட்சி மிக்க கவர்ச்சியூட்டும் வகையில் ஒரு பாடலில் அமைகின்றது. காற்று ஏற்றுதலால் அசைந்து வளைந்து அருகே உயர்ந்து நிற்கும் தாமரையின் திருமுன்னே பணிகின்றன மலர்கள். இக்காட்சிக்குப் பிறிதொரு காட்சியினை உவமையாக்கியுள்ளார் பரணர். அரசிளங்குமரியின் சினத்துக்கு ஆற்றாது, அவள் தோழியரின் கூட்டம் கை குவித்துத் தலை தாழ்த்தி வணங்குவது போல இருக்கின்றது. ஆம்பல்கள் தாமரைக்குப் பணியும் கோலமாகும் பாடலாவது,

*"சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்*
*மடத்தகை ஆயங் கைதொழு தாஅங்கு*
*உறுகால் ஒற்ற ஒல்கி ஆம்பல்*
*தாமரைக்கு இறைஞ்சும்"* *(நற்.300:1-4)*

மெல்லிய மலரின் பணிவுக்கு தலைவியின் நிலை எத்தகையது என்பதை தலைவனுக்குக் குறிப்பால் உணர்த்துகிறாள் தோழி.

## உள்ளுறை

திணை உணர்வதற்கு உதவுவன இரண்டு ஒன்று உள்ளுறை உவமம், மற்றது ஏனை உவமம்.

*“உள்ளுறை உவமம் ஏனை உவமமெனத்*
*தள்ளா தாகுந் திணையுணர் வகையே”*

(தொல்.பொருள்.அகத்.49)

என்னும் நூற்பாவை வகுத்துள்ளார் தொல்காப்பியர்.

உள்ளுறை என்பது தெய்வம் ஒழிந்த ஏனைய உணவு முதலிய கருப்பொருள்களை இடமாகக் கொண்டு தோன்றும்.

*“உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலனெக்*
*கொள்ளு மென்ப குறியறிந் தோரே”*

(தொல்.பொருள்.அகத்.50)

ஆசிரியன் தான் மனத்துள் கொண்ட கருத்தினை வெளிப்படையாகச் சொல்ல விரும்பாமல், குறிப்பாகச் சுட்ட நினைக்கும்போது உள்ளுறை உவமம் என்ற உத்தியைக் கையாளுவான்.

**உள்ளுறை விளக்கம்**

கருப்பொருளைக் களனாகக் கொண்டு அமையும் உள்ளுறையை அக்கருப்பொருள்கள் வழி கூறப்படும் செய்தியைக் கொண்டு உள்ளுறைப் பொருளை உணர்தல் வேண்டுமென்பதை,

*“உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென*
*உள்ளுறுத் திறுவதை உள்ளுறை உவமம்”*

(தொல்.பொருள்.அகத்.51)

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

**கருப்பொருட்கள் வழி துறை வெளிப்பாடு**

ஐந்து நிலங்களுக்குரிய முதற்பொருள் கருப்பொருட்களைப் பாடல்களில் புலவர்கள் அமைக்கும்பொழுது, தாம் கூறவந்த கருத்தை உள்ளுறையாக அக்கருப்பொருட்களால் வெளிப்படுத்துவர். இவ்வியல்பு அகப்பாடல்களில் நிறைய இடம் பெற்றுள்ளது.

வாழையும் பலாவும் விளைகின்ற மலைநாட்டுத் தலைவன் களவிலேயே நாள் கடத்துவதை அவனுக்குச் சுட்டிக்காட்ட விரும்பினாள் ஓர் அகநானூற்றுத் தோழி. அப்பொழுது குறிஞ்சி நிலத்தின் கருப்பொருளான குரங்கு அவள் நினைவிற்கு வந்தது. உடனே தலைவனின் நாட்டையும், கருப்பொருளையும் கூறுவதுபோல் அவன் இயல்பைக் கூறி வரைவுகடாவுகிறாள் தோழி.

கபிலர் பாடல் மூலம் ''முதிர்ந்த வாழைக்கனிகளையும், பலாவையும் உண்டு, சுனையில் உண்டாக்கிய தேனைத் தேனென்றே அறியாமல் உண்ட மந்தி, மிளகுக் கொடி படர்ந்த சந்தன மரத்தில் ஏறமாட்டாது. பூக்களால் ஆகிய படுக்கையில் களிப்புற்று உறங்கும். எதிர்பாராத இன்பத்தை உன் மலையிலுள்ள விலங்குகளும் எளிதில் அடையும் நாடனே. நீ வரைவு குறித்து முயன்றால் இத்தகைய இன்பங்கள் உனக்குக் கிடைப்பது அரிதாகும்''[10] எனத் தோழி வினவுகிறாள். தேனினை உண்டு ஆண் குரங்கு மயங்கியதுபோல் தலைவன் களவில் மயங்கினான். சந்தனமரத்தில் ஏறமாட்டாது பூக்களால் ஆகிய படுக்கையில் மயங்கி கிடக்கிறது குரங்கு என்பதால், வரைவென்னும் உயர் செயலுக்கு விருப்பமின்றி களவிலேயே காலம் கடத்துகிறான் தலைவன் என்பதும் தோழியினால் இங்குக் குறிப்பாக உள்ளுறையால் சுட்டப்படுகின்றது.

கலித்தொகைத் தோழி ஒருத்தி தலைவியின் துன்பத்தை ஆற்றமாட்டாமல் வருந்தினாள். தலைவியை ஆற்றுவிக்கத் தோழியெண்ணி, தலைவன் திறம்பாடும் முறையால் அழைத்துப் பாடினாள். அதனால் தலைவி தலைவனின் அன்பு பெற்றது போல் மகிழ்ந்ததைக் கண்டு தன் நெஞ்சிற்குக் கூறுவாளாய்த் தலைவன் கேட்கக் கூறுகிறாள்.

''வண்டு காந்தளின் அரும்பின் மீது மலரும் காலத்தைப் பார்த்திருத்தல் என்பது நம் சுற்றத்தவர் உள்ளம் மகிழ்ந்து மணத்துக்கு

உடம்படும் காலம் பார்த்திருக்கின்றாள்''[11] என்று உள்ளுறையை மலர்மீது அமைத்துப் பாடியுள்ளார் புலவர்.

இரவுக்குறி விரும்பும்படி அவனூர்க்குச் சென்று கூறி அழைத்து வருவோம் என்று கூறுகிறாள். புன்னை மலர் தாழை மடலோடு சேர மணங்கமழாமல் நிற்கும் என்றால் நீ தலைவனோடு முன்றில் சோலையுள் கூடி இன்பம் துய்க்க வேண்டும் என்று உள்ளுறையாக அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

நற்றிணைத் தலைவி ஒருத்தி தோழியுடன் இணைந்து களவை அன்னையறிந்து, இற்செறிக்கப் போவதைத் தலைவனுக்குத் தெரிவிக்க விரும்புகிறாள். இக்கருத்தினை ''பலாமரத்தின் பழங்களைப் பிளந்து சுளைகளை உண்ட மந்தி விதைகளைக் கீழே உதிர்கின்றன. கொடிச்சி முகில் தவழும் மலைவளம் பாடி ஐவன நெல்லைக் குத்துகிறாள். இத்தகைய வளம்மிக்க மலைநாடனோடு அருவியில் நீராடி விளையாடுவதும், பரண் மீது ஏறிக் கதிர்களைக் கொய்ய வரும் பறவைகளை விரட்டும் இயல்பான செயலும் இனி வாய்க்காது. காரணம் களவினைத் தாய் அறிந்தாள்''[12] எனக் கூறுகிறாள். இப்பாடலிலும் மலைநாட்டின் மந்தி, பலா, கொடிச்சி, தினை ஆகிய கருப்பொருள்கள் தலைவியின் மனஉணர்வை வெளிப்படுத்திக் காட்டுகின்றது.

மந்தி பழத்தின் சுளையைத் தின்று விதையை உதிர்த்தல். தலைமகன் தலைவியின் நலனை உண்டு அலரினைப் பரப்புதல். கொடிச்சி மலைவளம் பாடித் தினை குத்துதல்–அன்னை வேலனை அழைத்து வெறியாடி ஆட்டைச் சிதைத்தல்.

இந்நற்றிணைப் பாடலில் 'வெறியாட்டு நடைபெறும்' நிலை வந்துவிட்டதால் தலைவன் வரைவிற்கு விரைய வேண்டுமென்பது தோழியால் குறிப்பாக அறிவிக்கப்படும் செய்தியாக விளங்குகிறது.

அகநானூற்றுத் தோழி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்வதில் கருத்தின்றிக் களவு இன்பத்தையே விரும்பி வந்தான். அவனுக்குத் தோழி தலைவியைக் குறியிடத்து விட்டுவந்து, தாய் வெறியாடல் எடுத்தல் முதலியவற்றைச் சொல்லி வரைவுக்கு முயற்சி மேற்கொள்ளும்படி வேண்டுவாள்.

*"முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டும்*
*மூட்டுறு கவரி தூக்கி யன்ன*
*செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்"*

(அகம்: 156: 1–3)

மூன்று வகையானமுரசுகளை உடைய மன்னரின் குதிரைத் தலையின் மீது தைக்கின்ற கவரியைத் தொங்கவிட்டாற் போன்று தொங்கும் கழனியில் விளைந்த சிவந்த அரியிலுள்ள நெற்கதிரை முதிய பசு தின்பதைக் கண்டு அஞ்சி வயலைக் காப்பவர் அதற்குக் கரும்பை உண்பித்தனர். பின் பாகற் கொடியைப் பகன்றைக் கொடியுடன் அறுத்து காஞ்சி மரத்தில் பசுவைக் கட்டி வைப்பர். பின்னர் தலைவன் களவொழுக்கத்தை அழித்துப் பயன் தராது செய்யும் பழி கூறுபவர் வாயடங்கி ஒழிய மணந்து கொள்ள வேண்டும் என்பது உள்ளுறையில் புலவர் ஆவூர் மூலங்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

**இறைச்சி**

இறைச்சி என்பது உரிப்பொருளின் புறத்தாக அமையும். அஃதாவது கருப்பொருளாகிய நாட்டிற்கும், ஊர்க்கும், துறைக்கும் அடையாகி வரும் நிகழ்ச்சிகளாற் புலப்படத் தோன்றும்.

குறிப்புப் பொருளே 'இறைச்சி' என வழங்கப்படுகின்றது.

*"இறைச்சி தானே உரிப் புறத்ததுவே"*

(தொல்.பொருள்.பொ.இ.நூ.33)

இவ்விறைச்சிப் பொருளினின்றும் தோன்றும் பொருள்களும் உள. ஆழ்ந்திருக்கும் கவியுளம் காணவல்லார்க்கு இறைச்சி வாயிலாகவும் குறிப்புப்பொருள் வாயிலாகவும் புலப்படும்.

*"இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே*
*திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கு"*

(தொல்.பொருள்.பொ.இ.நூ.34)

## உள்ளுறை-இறைச்சி வேறுபாடு

உள்ளுறை உவமத்தைவிட நுட்பமாக உணர்த்தப் பெறுவது இறைச்சிப் பொருளாகும்.

புலவன் தான் சொல்லுகின்ற உவமத்தோடு ஒத்துக்கூறக் கருதிய பொருள் வந்து முடியுமாறு அமைந்திருப்பது உள்ளுறை உவமம். புலவன் தான் கூறிய செய்யுளின் பொருளுக்குப் புறத்தே தோன்றுவது இறைச்சி. இரண்டுக்கும் உள்ள வேற்றுமை இதுவே. ஆசிரியர் தொல்காப்பியனார் இறைச்சியை 'உடனுறை' என்றும் குறிப்பர். தலைவியின் பேச்சால் உணரப்படும் குறிப்புப்பொருள் இறைச்சியின் பொருளாகும்.

கலித்தொகைத் தோழி வள்ளைப்பாட்டு பாடும்போது தலைவன் சிறைப்புறமாய் இருந்து கேட்டான். தலைவியை மணந்து கொள்ள விரும்பி உரியவரை அவளுடைய பெற்றோரிடம் அனுப்பினான். அவர்களும் மணத்துக்கு இசைவு தெரிவித்ததைத் தோழி தலைவிக்குக் கூறும் கபிலர் பாடல்,

*"பாடுகம் வாவாழி தோழி வயக்களிற்றுக்*
*கோடு உலக்கையாக நல்சேம்பின் இலைசுளகா*
*ஆடுகழை நெல்லை அறை உரலுள்பெய்து இருவாம்*
*பாடுகம் வா தோழி தோழி நல்தோழி பாடுற்று"*

**(கலித்.41:1–4)**

மூங்கிலில் இருந்து தானே உதிர்ந்த நெல்லை உரலில் பெய்து என்றதால் உயர்ந்த தலைவனைத் தெய்வம் கொணர்ந்து தருதலால் அவனை நம் வயத்தனாக்கினோம் வள்ளைப் பாட்டுக்குக் காரணமான யானைக் கொம்பு நெல்லைப் பயன்படுத்தியதைப் போல் நம் வரைவு ஆதலால் இத்தலைவனை இல்லறப் பயனை அடையச் செய்கின்றோம். சேம்பின் இலை புடைக்கும் தொழிலை நன்கு முடிக்காதது போல இக்களவொழுக்கத்தால் அவன் மணந்து கொள்வதை முடிக்காது இருக்கின்றோம் என்று இறைச்சியின் மூலம் பொருள் கொள்ள முடிகின்றது.

தலைமகன் இரவுக்குறி வருவதையறிந்த தோழி அவன் கேட்டு விரைவின் வரைந்து கொள்ளுமாறு தலைவியை நீ நோக்கி நீ வருவதையறிந்த ஊரார் அலர் தூற்றினும், இரவில் கொடிய வழியில் வருதல் துன்பம் உடையதாயின் வாராதொழிக என்று கூறுகிறாள்.

புலியை அஞ்சிப் பிடியானை தன் கன்றைக் காத்துத் தாங்கும். பிரிவினால் தலைவிக்கு வரும் ஏதத்தை அஞ்சி நான் அவளைக் காக்கின்றேன்.

| | | |
|---|---|---|
| கண்ணீர் வடிதல் | – | துன்பத்துப் புலம்பல் |
| தோள்வளை நெகிழ்வது | – | உடம்பு நனி சுருங்கல் |
| வாரற்க | – | அச்சத்தின் அகறல் |
| அவனிடம் உள்ள புணர்வு | – | தலைவி மறுத்தல் |

**(நற்.85:4–6)**

இவ்வாறு புலவர் நல்விளக்கனார் இறைச்சி மூலம் தலைவிக்கு நேரும் துன்பத்தையும், தலைவனின் நிலையையும் எடுத்துரைக்கிறார்.

தலைவனிடம் களவுக்காலத்தில் பேசும் தோழி, நீ இரவில் வருவது உனக்குத் தீங்கு உண்டாகும் என்றெண்ணி நாங்கள் வருந்துவோம். ஆதலில் நீ வாரற்க என்று தோழி மறுப்பாள்.

புலவர் குரங்குகளின் வாழ்வு முறை மூலம் வாழ்க்கையின் அன்பு நிலையை எடுத்துக்காட்டுகிறார். "தன் துணையுடன் இருந்த விட்டதை எண்ணி மற்றொரு குரங்கு கைம்மை துன்பத்தைப் பொறுக்காமல் உயிர் விட்டது. பெண் விலங்கினங்களும் தன் துணைக்குத் துன்பம் நேர்ந்த காலத்தில் உயிர் விட்டதை நீ அறிந்தனை ஆதலின் உனக்கு துன்பம் வருவதையறிந்து தலைவி இனி உயிர் வாழமாட்டாள்"[13] என்று இறைச்சியின் மூலம் கடுந்தோட் கரவீரனார் புலப்படுத்துகின்றார்.

**கருத்து**

கருத்து வெளிப்பாட்டிற்கு மொழி முதன்மையான கருவி ஆகும். ஒருவர் எழுதியுள்ள கருத்துகளைப் படிப்போர் உணர்ந்து கொள்ள முடிகிறது. அதாவது கருத்தும் மொழியும் தொடர்புபடுத்தப்படுகிறது. இத்தொடர்பினால் பொருண்மை வெளிப்படுகிறது. பொருண்மை வெளிப்பாடு கேட்போர்க்கும் படிப்போர்க்கும் தெளிவாகப் புரியும் நிலையில் கருத்துப் புலப்பாடு செம்மையாக அமைகிறது. நாடகப்பாங்கில் கருத்தை வெளிப்படுத்த உதவும் களன், காலம், முன்னம் என்பனவும் கருத்தைக் கொண்டு கூட்டியும் உய்த்துணர்ந்தும் அறியுமாறு வெளிப்படுத்த உதவும்.

**அகப்பாட்டு உறுப்புகள்**

**களன், காலம், முன்னம்**

*"ஒரு நெறிப் பட்டாங்கு ஓரியல் முடியும்*
*கரும நிகழ்ச்சி இடமென மொழிப"*

(தொல்.பொருள்.1457)

கரும நிகழ்ச்சியென்பது ஒரு பாடலில் வரும் செயல் நிகழ்ச்சியாகும். ஒரே நெறிப்பட, ஓரியல்பாக முடிவதே இடம் எனப்படும்.

இடம் : செயல் நிகழும் இடம் (களன்)

காலம் : உலத்திலுள்ள பொருள்களை அறிந்து கொள்ளும்படியாக நடப்பது இறப்பு (இறந்த காலம்) நிகழ்வு (நிகழ்காலம்) எதிர்வு என்ற மூன்று காலம் ஆகும்.

முன்னம் : உரியவற்றை உரியவாறு வெளிப்படுத்தல்

எப்பாடலாயினும் ஒரு பொருண்மை மேல் வருதல் வேண்டும். களவு, கற்பு, அதன் உள்வகை அல்லது வெட்சி, வஞ்சி, அதன் உள்வகை ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்று பற்றி வருவது இடமெனப்படும்.

"ஒரு செய்யுள் கேட்டால் இஃது இன்னவிடத்து நிகழ்ந்ததென்று அறிதற்கு ஏதுவாகியதோர் உறுப்பினை இடமென்றான் என்பது எனப் பேராசிரியர் விளக்குகிறார். மேலும் அவர் 'ஒரு நெறிப்படுதலென்பது ஒருவழிப் பலவுந் தொகுத்தல் ஓரியலென்பது அவற்றுக்கெல்லாம் இலக்கணம், ஒன்றாதல் என உரைப்பது' இதனை மேலும் விளக்கும்"[14] என காளிமுத்து குறிப்பிடுவார்.

காலமென்பது ஒரு நிகழ்ச்சியை முக்காலமும் தெரிய எடுத்துக் கூறுவதாகும். நிகழ்ச்சிகள் கால முறைப்படி சுட்டப்பட வேண்டும்.

முன்னமென்பது இவ்விடத்து இம்மொழியை இவர்க்கும் சொல்லத்தகும் எனக் குறித்து அவ்விடத்து அம்மொழியை அவர்க்கு உரைப்பது முன்னமாகும். எனவே இடமும் காலமும் உணர்ந்து கேட்போர் தக்கவாறு மொழிதல் செய்யுள் உறுப்பாகும்.

**களன்**

களனென்பது இடம் எனப்படும். இது பாடலில் அமையும் பொருள் பற்றியது. சிறுகதை இலக்கணம் போல, ஒரு பாடலில் ஒரு நிகழ்ச்சியே ஒரு கூறே இடம்பெற வேண்டும். ஒன்றற்கு மேற்பட்ட சில வரினும் அவை தலையாய ஒன்றுடன் இணைக்கப்பட வேண்டும்.

களவுத் தலைவியின் வாழ்க்கையில் இற்செறிப்பும் அலரும் நிகழ்கின்றன. தலைவி விரைவில் வரைந்து கொள்ளுமாறு குறிப்பாகப் புலப்படுத்தியிருந்தும் வரையாது காலம் கடத்துகிறான். களவின்பத்தையே விரும்புபவன் போலும் இவன். இத்தலைவன் ஒருநாள் சிறைப்புறத்தே வந்துழி தலைவியைக் காணாது போன்று அவன் கேட்பத் தோழிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல்,

*"பொய்யா மரபின் ஊர்முது வேலன்*
*கழங்குமெய்ப் படுத்துக் கன்னம் தூக்கி*
*முருகென மொழியும் ஆயிற்*
*கெழுதகை கொல்லிவள் அணங்கி யோற்கே" (ஐங்.245)*

தலைவன் சிறைப்புறமாக இருக்கும்பொழுது தலைவியின் நோய் தணிப்பதற்கு வழிபாட்டு இடம் சுட்டப்படும். தோழி வெறியெடுப்பதை அவன் கேட்பத் தலைவனுக்கு உணர்த்தி வரைவுகடாவுகின்றாள். இதன்கண், செவிலி வெறியாடல் எடுக்க முயற்சி செய்கிறாள். இதனால் தலைவியின் துயரம் மிகும். பெருநாணினள் ஆதலின் இறந்துபட விடுதலும் கூடும். ஆதலால் விரைந்து அவளை வரைந்து கொள்ள வேண்டும்.

**காலம்**

ஒரு பாடலுள் இடம்பெறும் நிகழ்ச்சிகளை இன்ன காலத்து நிகழ்ந்தன என உணருமாறு தெளிவாக உரைப்பது காலம் என்னும் உறுப்பாகும்.

இடம் : மலைச்சாரல்

காலம் : நள்ளிரவு

உறுப்பினர் : தலைவி, தோழி, தலைவன்.

இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறமாக இருக்கின்றான். மணம் செய்து கொள்ளும் கருத்தின்றி இருப்பவன் தலைவன். இவனை வரைவுடம் படுத்தற்குத் தலைவியும் தோழியும் செய்த சூழ்ச்சியே நாடகப் பாங்காகும். தோழியும் தலைவியும் படப்பையினூடு சொல்லாடி நிற்றலைத் தலைவன் காண்கிறான். தன் வரவை அவர்கள் அறியா வண்ணம் வேலியின் பக்கத்தே மறைந்து நின்று ஒட்டுக் கேட்கிறான். ஆயினும் அம்மகளிர் அவன் தொலைவில் வரும்பொழுதே அறிந்து கொண்டுவிட்டனர். அறியாதவர் போலவே நடிக்கின்றனர். தலைவன் கேட்கும் அளவில் அவர்களிடம் பேச்சு நடைபெறுகிறது.

“தோழி நம் தலைவன் தன் கையில் உள்ள வேல் வழிகாட்ட இரவில் பணியை வெறுக்காதவனாய் மலர் மாலை சூடி நம் தோட்டத்திற்கு வந்தான். அவனைக் கண்ட தாய் முருகக் கடவுளே அருள் செய்ய வந்துவிட்டான் என்றெண்ணித் தினையும் நீரும் தூவி வணங்கினாள். அவள் உண்மையை அறிந்து கொள்ளவில்லை. அறிந்தால் என்ன ஆகுமோ எனத் தோழி தலைவன் கேட்பத் தலைவிக்குச் சொல்லி புலப்படுத்துகிறாள்.” [15] இதன் பயன் தலைவியை மணந்து கொள்ள வேண்டுமென்பது கருத்தாக அமைகிறது.

**முன்னம்**

முன்னம் மிகச் சிறப்பான நாடகவுறுப்பாகும். ஒரு கூற்றை உரைப்போர் இவர், கேட்போர் இவர் என உணருமாறு, செய்யுள் அதற்கியைந்த இடம் ஒன்று நாட்டி உரைப்பதே முன்னமாகும்.

இனி இரவில் வருவது தகாது. ஆதலால் தலைவன் தலைவியை விரைவில் மணந்து கொள்ள வேண்டும்.

*"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்*
*இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை*
*எல்லி வருநர் களவிற்கு*
*நல்லை யல்லை நெடுவெண் ணிலவே"* *(குறுந்.47)*

இந்நெடுவெண்ணிலவினார் பாட்டு தோழி கூற்றாக அமைகிறது. இராவந்து ஒழுகுங்காலை முன்னிலைப் புறமொழியாக நிலாவிற்கு உரைப்பாளாய் உரைத்தது. இராக்காலத்தே வந்து தலைவியைக் கண்டு அளவளாவுகிறான் தலைவன். புலிக்குட்டிப் போல் துறுகல் தோன்றும் அவ்வழி அச்சமுடையதாகும் என்று பாடல் மூலம் பெறப்படுகின்றது.

**சமுதாயம்**

சமூகம் என்பது ஒரு வாழ்நெறியையும் பண்பாட்டையும் வளர்ப்பதில் பங்குபெறும் தனிமனிதர் பலரின் கூட்டமைப்பாகும். சமூகம் என்பது பண்பாட்டை வளர்க்கும் இடமாகும்.

சமுதாயம் என்பது வெறும் மக்களின் கூட்டமன்று அது ஒரு நிலை. அது ஓர் உறவுமுறை என்பதாகத்தான் பொருள்படும். சமுதாயம் உறவு நிலைகளின் அமைப்பு முறையாகும். மனித இனத்தில் காணப்படும் உறவுநிலைகளின் அமைப்பு முறையே சமுதாயத்தை விளக்கும்போது அது மனித உறவுகளின் கூட்டத் தொகுதியாக விளங்குகிறது.

## சங்கக் காலச் சமுதாயம்

சங்கக் காலச் சமூகம் நிலத்தையும் நிலம் சார்ந்த தொழிலையும் சார்ந்தது. சங்க காலத்து மக்கள் கூட்டம் கூட்டமாக வாழ்ந்தனர். இதில் குறிஞ்சி நிலப் பகுதியில் வாழ்ந்தவர்கள், மேய்த்தல் தொழிலை முக்கியமாகவும், நெய்தல் நிலப்பகுதி கடற்கரையில் வாழ்ந்தவர்கள் மீன்பிடித்தல் தொழிலை முக்கியமாகவும் நம்பி வாழ்ந்தனர்.

## தொழில்

தமிழர்கள் கடந்த காலத்தில் இலக்கியம், இசை, கலை, நடனம், சிற்பம், கட்டடக்கலை, தத்துவம், சமயம், மருத்துவம், வேளாண்மை, பொறியியல், அயல்நாட்டு வாணிகம் ஆகிய பல்துறைகளில் வல்லவர்களாய் இருந்தனர்.

ஒரு நாட்டின் வளமைக்கும் வளர்ச்சிக்கும் அந்நாடு தொழில்நுட்ப அறிவினைத் தன்னுள் கொண்டிருப்பதும், பல்துறைகளிலும் தொழில்நுட்ப உத்திகளைக் கையாள்வதும் முக்கியத் தேவையாக அமைகிறது. இந்தத் தொழில்நுட்ப உத்தியெல்லாம் சங்ககால மக்கள் அறிந்திருந்தனர்.

## வேளாண் தொழில்

கிராமப்புறங்களில் மக்களின் வேலைவாய்ப்பிற்கு உறுதியளிக்கும் தொழில்களுள் முக்கியமானது வேளாண் தொழிலாகும். இத்தொழில் சமூகப் பொருளாதாரத்தை உயர்த்துவதில் பெரும்பங்காற்றுகிறது.

மிளகு போன்ற உணவுப்பொருள் நாட்டின் பொருளாதாரத்தை ஈட்டுவதில் பெரும்பங்காற்றுகிறது. மிளகு சிறந்த ஏற்றுமதி பொருளாகவும் பயன்பட்டது. இது அதிகமாகப் பயிரிடப்பட்டதை,

*"கறிவளர் அடுக்கத்து ஆங்கண்"* *(குறுந்.288:1)*

*"கறிவளர் சிலம்பில் வழங்கல்"* *(கலித்.52:17)*

*"கணக்கலை இகக்கும் கறிஇவர் சிலம்பின்" (அகம்.112:14)*

என்ற இலக்கியக் குறிப்புகள் எடுத்துக்காட்டுகின்றன.

## குறவர் தொழில்

குறிஞ்சி நில மக்களைக் கானவர், குறவர், குன்றவர் என்று அழைக்கப்பட்டனர். இவர்களின் முக்கிய தொழில் வேட்டையாடுதல். வில்லும் அம்பும் இவர்தம் ஆயுதங்கள். வேட்டைக்கு உதவியாக நாயும் உடன் கொண்டு செல்வர். (நற்.282, 285). அகில், சந்தனம் முதலிய மரங்களை அழித்து நிலத்தைத் திருத்தித் தினை பயிரிடுவர் (நற்.282).

*"துணையின் தீர்ந்த கடுங்கண் யானை*
*அணையக் கண்ட அங்குடிக் குறவர்*
*கணையர் கிணையர் கைபுனை கவணர்*
*விளியர் புறக்குடி ஆர்க்கும் நாட"* *(நற்.108:2-5)*

எனவரும் இப்பாடல் குறவர்கள் யானையை ஒட்டிய வகையைத் தெரிவிக்கிறது. "காடுகளில் மட்டுமின்றி பெருமலைகளிலும் தம் தொழிலை மேற்கொண்டனர்"[16] என்பது தெளிவாகிறது.

## மீன்பிடித் தொழில்

"பரதவர் கட்டுமரம், திமில் போன்றவற்றில் கடலுக்குச் சென்றனர். இரவு வேளைகளில் படகுகளில் வெளிச்சத்திற்காக மீன் நெய்யால் ஏற்றப்பட்ட விளக்குகளை வைத்திருப்பர். ஆகவே இவர்கள் இரவு வேளைகளிலும் மீன் பிடிக்கக் கடலுக்குச் செல்வதுண்டு." [17] என்ற குறிப்பு காணக் கிடக்கின்றது.

"கரையிலுள்ள சிறுவர்கள் வெளிச்சத்தின் தன்மையைக் கொண்டு தங்கள் தந்தையர் படகு இது என்று கூறி மகிழ்வர்".[18]

இவர்கள் கையில் மீன்பிடிக் கருவிகளான கோலுடனும், வலைகளுடனும் திமிலில் செல்வர் (அகம்.60:1–3).

"இரவில் மீன்பிடிக்கச் சென்றவர்கள் காலையிலும், காலையில் சென்றவர்கள் மாலையிலும் மீன்களுடன் கரைக்குத் தம் இல்லங்களை நோக்கி வருவார்கள். கொண்டு வந்த மீன்களைக் கடற்கரையிலே குவித்துப் புன்னை நிழலில் அமர்ந்து தம் பிள்ளைகளோடு கள்ளைக் குடித்து பரதவர் மகிழ்வார்கள்"[19] என்ற செய்தி காணப்படுகிறது.

பிடித்து வரும் மீன்களில் விற்றவை போக எஞ்சியவற்றைப் பதப்படுத்தி 'உலர்மீனாக பரதவ மகளிர் மாற்றினர்' என்பதை,

*"பெருநீர் அழுவத்து எந்தை தந்த*
*கொழுமீன் உணங்கற் படுபுள் ஓப்பி" (அகம்.20:1-2)*

இப்பாடல் அடிகளால் அறிய முடிகிறது.

"தந்தை கொண்டு வரும் மீன் தொகுதியை உணங்கலாக மாற்றும் இடத்தினைக் கரிய உப்பங்கழி"[20] எனத் தலைவியொருத்தி தலைவனுக்குச் சுட்டுகின்றாள்.

## முத்தெடுத்தல் தொழில்

சுறா போன்ற மீன்களுக்கும் அஞ்சாமல் இவர்கள் முத்தெடுத்து மூழ்கியதை,

*"இலங்கி இரும்பரப்பின் எறிசுறா நீக்கி*
*வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்" (அகம்.350:10-11)*

என்று சேந்தன் கண்ணனார் என்னும் புலவர் சுட்டுகிறார்.

## தேன் எடுத்தல்

காடு பொருள்களில் அடுத்து முக்கியமானதாக தேனெடுத்தல் தொழில் நடைபெற்றது. "மலைகளிலுள்ள உயரமான மரங்களிலும், உச்சிப் பாறைகளிலும், கட்டிய தேனடைகளிலிருந்து தேன் பெறப்பட்டது."[21]

"குறிஞ்சி மலரிலிருந்து தேனீக்களால் சேகரித்து வைக்கப்படும் தேன்"[22] உயர்ந்ததாகக் கருதப்படுகிறது.

சேகரிக்கப்பட்ட தேனிலிருந்து 'கள்' தயாரிக்கப்பட்டது. இக்கள்

***"தேம் பிழி நறவு"*** ***(அகம்.78:7)***

எனப்பட்டது. குறவர்களின் முற்றத்தில் தேனில் பிழிந்தெடுத்த கள் இருந்தது.

## கைவினைத் தொழில்

பழந்தமிழரின் ஏற்றுமதிப் பொருள்களில் கைவினைப் பொருள்களும் இடம்பெற்று பொருளாதார வளத்தினைப் பெருக்கியது.

முத்தையும் மணியையும் மூடியிருக்கும் மாசினைப் போக்கி, ஒளி பெறச் செய்து, அவற்றிற்குத் துளை முதலியன இடும் பணி செய்வாரும் உளர் என்பதை,

***"கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ***
***மண்ணாப் பசுமுத்து ஏய்ப்பக் குவியிணர்ப்***
***புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்"*** ***(நற்.94:4-6)***

என்னும் இவ்வடிகளால் புலனாகின்றது.

### கொல்லத் தொழில்

*"பொன் செய் கம்மியர்"* *(நற்.313:2)*

*"செம்பு செய் கம்மியரும்"* *(நற்.363:4)*

தம் தொழிலால் சமூகத்தின் தேவையை நிறைவேற்றினர்.

### அட்டில் தொழில் (சமையல்)

அடைத்தொழில் எனப்பட்ட சமையல் தொழில் செய்யும் தொழிலாளரும் தனியே இருந்தனர். அவர்கள் தொழில் செய்யும் இடம் "அட்டில்"[23] எனப்பட்டது.

### நெசவுத் தொழில்

இயற்கை நிலையிலிருக்கும் ஒன்றைத் தம் தேவைக்கேற்ப மாற்றியமைத்து அவற்றைப் பயன்படுத்த முனையும் நிலையில் மனிதனின் தொழில்நுட்ப அறிவு வெளிப்படத் தொடங்குகிறது அவ்வகையில் தழை, மரப்பட்டை போன்றவற்றை உடையாகப் பயன்படுத்தும் வகையில் அவற்றை வடிவமைத்த ஆதிமனிதச் செயல்பாட்டில் தொழில் நுட்பத்திறன் வெளிப்படுகிறது.

### துகில்

உடை வகைகளுள் மென்மைத் தன்மை வாய்ந்ததாகத் துகில் காணப்படுகிறது. அதன் நிறம் மிகவும் வெண்மையுடையது. இது பருத்தியினால் செய்யப்பட்டதாகும். உருவத்தை மறையாது காட்டுகின்ற மென்மைத் தன்மை இத்துகிலுக்கு உண்டுமென்பதை,

*"முழங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்*
*நுணங்கு துகில் முடக்கம் போல்"* *(நற்.15:1-2)*

என்ற பாடல் மூலம் புலவர் அறிவுநம்பி விளக்குகிறார்.

## உலோகத் தொழில்

பழந்தமிழர் மலையிலிருந்து பொன்னைத் தோண்டி எடுத்ததற்கான குறிப்பினை இலக்கியம் காட்டுகின்றது. வளமான மலையில் கானவன் யானைத் தந்தத்தைக் கொண்டு பொன்னைத் தோண்டியதையும், அங்கு பொன்னோடு பிற மணிகளும் கிடைத்ததை,

*"பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய*
*செறிமடை அம்பின் வல்வில் கானவன்*
*பொருது தொலை யானை வெண்கோடு கொண்டு*
*நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்*
*கண்பொருது இமைக்கும் திண்மணி கிளர்ப்ப*
*வைந்நுதி வால்மருப்பு ஒடிய உக்க*
*தெண்நீர் ஆலி கடுக்கும் முத்தமொடு*
*மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு"*

(அகம்.**282:1–8**)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இதில் யானையின் கொம்பில் மலையில் சிறந்த பொன்னைத் தோண்டிட, பொன்னுடனே மணிகள் மேலே வெளிப்பட்டு விளங்கியதையும் காணமுடிகின்றது. அதனுடன் யானையின் கொம்பிலிருந்து உதிர்ந்த ஆலங்கட்டியைப் போன்ற முத்துக்களையும் மூட்டையாகக் கட்டி சந்தனமரம் காவடியாக அமைய தூக்கிவரும் வேட்டுவன் காட்டப்படுகிறான். பழங்காலத் தமிழரின் உலோகவியல் அறிவும், மலைவளமும் ஒருங்கே சுட்டிக்காட்டப்படுகின்றது.

## தொழில் தடைகள்

சமூக முன்னேற்றத்தின் அடிப்படையான தொழில் துறையில் பல சிக்கல்களையும் பழந்தமிழகம் கொண்டிருந்தது. இச்சிக்கல்கள் தொழிலின் அடிப்படையில் இயற்கையாகவும், செயற்கையாகவும் அமைந்தன.

### இயற்கைத் தடைகள்

தொழில் துறையில் இயற்கைத் தடைகள் இயற்கை நிகழ்வுகளை மையமாகக் கொண்டவையாகும். இவ்வியற்கைச் சிக்கல்கள் கடல்சீற்றம், வெள்ளம், புயல் வடிவாகவும், ஆபத்தை விளைவிக்கும் கொடிய விலங்குகளாலும் நிகழ்ந்தன.

ஆபத்தை விளைவிக்கும் இறால் மீன் கூட்டத்தால் கடல் வாணிகம் தடைபட்டது. ஒலிக்கும் நீர்ப்பரப்பையுடைய கானலம் பெருந்துறைப் பட்டினத்தில் பொன்னைக் கண்டு வரும் மரக்கலம் சிதையுமாறு தாக்கும் மீன் கூட்டத்தை,

*"இரங்கு நீர்ப் பரப்பின் கானல்அம் பெருந்துறை*
*தனம்தரும் நன்கலம் சிதையத் தாக்கும்*
*சிறுவெள் இறவின் குப்பை அன்ன" (அகம்.152:6-8)*

என்ற பாடல் மூலம் சுட்டுவார் பரணர்.

### செயற்கைத் தடைகள்

செயற்கைத் தடைகளென்பது கள்வர்களின் கொடுஞ்செயல்களாக வெளிப்படுகின்றன.

"காட்டு வழிகளில் கழுதைகளின் மீது வாணிகப் பொருள்களை ஏற்றி, அதற்குப் பாதுகாப்பாக பின்னால் வரும் வீரர்களை மறைந்திருந்து தாக்கி, அவர்களின் தலைகளைத் துண்டித்து துடியை முழங்கி வாணிகர்கள் கொண்டு வந்த பொருள்களைப் பிரித்துக் கொள்வர்"[24] என்ற கருத்து வழி புலனாகிறது.

### ஆடை

மனித வாழ்வில் மிகுந்த செல்வாக்குப் பெற்ற ஆடைத் தொடர்பாகத் தமிழன் பயன்படுத்திய சொற்கள் பல. அவை ஆடையைக் குறிப்பன. ஆடைத்

தொழிலுடன் தொடர்புடையன. ஆடை வருவாக்கப்பட்ட சொற்களைக் குறிப்பன என்ற பல நிலைகளில் அறியக்கூடும்.

**ஆடை வகைகள்**

இவற்றுள் பல சொற்கள் சங்கத் தமிழர் பயன்படுத்தியவையாகும். "உடை, தழை, துகில், கலிங்கம், அறுவை, சிதார், ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை போர்வை, காழகம், கச்சம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை, படம், படாம், பூங்கரை, நீலம், உத்தரீயம், கம்பலம், கவசம், தூசு, மடிவை, சிதர்வை, சிதவல் வார், மெய்ப்பை, துகின்மூடி, மெய்ம்மறை, மெய்யாப்பு, வாலிது, வெளிது, புட்டகம், நூல் பக்குடுக்கை போன்றவை"[25] என்று கு.பகவதி அவர்கள் ஆடையின் வகைகள் பற்றி வரிசைப்படுத்துவார்.

**தழை**

இயற்கையோடு இயைந்தது மனித வாழ்வு என்பதற்குத் தழையாடையும் ஓர் சான்றாகும்.

நெசவுக் கலையை அறியும் முன்பு உடுத்திய பாங்கினைப் பகரும் தழையுடைகளைத் தமிழன் பயன்படுத்தியிருப்பதை அறிய ஏதுவாக அமைகிறது. தமிழர் தழைக்குக் கொடுத்த செல்வாக்குச் சங்கப் பாடல்களில் சிறப்பாகச் சித்திரிக்கப்படுகின்றது.

தழையுடை பகைத்தழை, மடிவை, குழை எனப் பல பெயர் பெறும். இவை பெரும்பான்மையான காடுகளில் தழை என்றே சுட்டப்படுகின்றன.

உ.வே.சா. அவர்கள் இதனை மிகுதி பற்றி வந்த பெயர் என்பார். "தழை– தழையாலும் மலராலும் அனைத்து மகளிர் உடுக்கும் ஒரு வகை ஆடை"[26] எனக் குறித்துள்ளார்.

பல்தழைகள், பூக்கள், தளிர்கள் இவற்றை விரவித் தொடுத்து அமைத்த தழையுடைகளைப் பயன்படுத்தினர் என்பதை அறிய முடிகிறது. (நற். 96)

தலைவன் இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வரும்போது, ‘‘குல்லை, மலைப்பச்சை, கூதாளி, குவளை போன்ற மலரால் புனைந்த உடையை அணிந்தும், மிகக் குளிர்ந்த பூமாலை போன்ற உடை அணிந்தும், மார்பில் நல்ல மாலை அணிந்தும் தலைவன் வந்தான்’’[27] என்று கபிலர் தலைவனின் ஆடையை தம் கற்பனைத் திறத்தால் விளக்குகிறார்.

***“அண்கண்ணி வாடாமையால் நல்லஎன்று ஆற்றான்***
***உண்கண்ணி வாடாள் உடன்று”          (தி.மா.நூ.21:3-4)***

நீ கொண்டு வந்த கையுறையான தழையுடையை வாடாதவாறு யான் கொண்டு சென்று காட்டினால் மை தடவப் பெற்ற கண்களையுடைய தலைவி ஏற்றுக் கொள்வாள் என்று தோழி தலைவனிடம் எடுத்துரைத்தாள்.

**தாமரை**

கபிலர் கலித்தொகைப் பாடலொன்றில் தலைவனின் ஆடை தாமரை மலரால் ஆனதென்பதை,

***“தாமரை மலர் அணிந்தும்”          (கலித்.52:7)***

***“சந்தனம் பூசப்பெற்ற மார்பை உடையவன்” (கலித்.52:15)***

என்ற பாடலடிகள் மூலம் அறியக்கிடக்கின்றது.

‘‘வயலில் மலர்ந்த இதழ் ஒடியாத ஆம்பல் மலருடன் கூடிய பசிய தழையாகிய ஆடையை அணிந்திருந்தனர்’’[28] என்பதும் அகநானூற்றின் வாயிலாக அறியக்கிடக்கின்றது.

'ஆடை இல்லாதவன் அரை மனிதன்' என்ற பழமொழிக்கேற்ப சங்க கால மக்கள் தழை போன்ற சிறந்த ஆடையை அணிந்துள்ளனர்.

**உடுப்பு**

*"நீல நீருடை போல"* *(கலித்.124:3)*

பலராமன் அழகுபெற உடுத்தது நீல ஆடை, ஒத்த அழகையுடைய வெண்மையான அலையுடைய கடலானது வெண்மையுடைய மணலிடத்து வந்து சூழ்ந்து விளங்கும் நீரையுடைய தலைவன் என்பதை இப்பாடல் விளக்குகிறது.

**துகில்**

தழைக்கு அடுத்தது மிகுதியாகப் பயின்று வருவது துகில்.

***"மூரியெக்கர் நுண்துகில் நுடக்கம் போல"*** ***(நற்.15:1-2)***

முழங்கும் பெரிய அலைகள் ஒன்று சேர்த்த பெரிய மணல்மேட்டில் நுண்ணிய துகில் ஆடையின் அசைவு போல, கூட்டமான மாலை வாடைக்காற்று தூற்றும்படியான கடற்கரைத் தலைவன் இவ்வுடை அணிந்தான் என்று அறிவுடைநம்பி குறிப்பிகிறார்.

இரவில் உயிர்கள் யாவும் ஒன்றாக உறங்கும். விலங்கினங்களுக்கு உடை பற்றி கவலையில்லை.

***"அம்துகில் போர்வை அணிபெறத் தைஇ"*** ***(கலித்.65:4)***

அழகிய போர்வையால் போர்த்தி அழகுபெற விளங்கும். அதுபோன்ற துகில் ஆடையை உடுத்தியிருந்தான் தலைவன் என்பதைக் குறிக்கிறது.

## நூல்

பட்டு என்பது பட்டாடையைக் குறித்தல் போல நூல், பஞ்சு, இழை என்று பருத்தி ஆடையைச் சுட்டும் மரபு சங்கத் தமிழரிடம் காணப்படுகின்றது.

*"நுண்நூல் ஆகம் பொருந்தினள்"* *(அகம்.198:6)*

என்னும் பாடலடியில் தூய நுட்பமான நூலால் ஆன ஆடையால் உடம்பை போர்த்தியவளாய் தலைவி காணப்பட்டாள் என்பதைத் தெளிவாக்குகிறது.

## கச்சு

சங்க காலத்தில் தமிழ் மகளிர் மார்பாடை கச்சு, வார், வம்பு என்றழைக்கப்பட்டது. இவற்றுள் அதிகச் செல்வாக்குப் பெறுவது கச்சாகும்.

*"தண்பனி வைகிய வரிக் கச்சினனே"* *(ஐங்.206:5)*

என்ற பாடலில் கச்சு அணிந்துள்ள தலைவன் இரவுக்குறியில் வருவதைப் புலவர் பாடியுள்ளார்.

## நீவி

கம்பராமாயணம் ஆடையைக் குறிக்க வழங்கும் சொல் நீவி என்பதாகும்.

சங்க இலக்கியத்தில் நீவி என்ற சொல் இருந்தாலும் அவை ஆடை என்ற பொருள் இல்லை.

*"அருங்கடி அன்ன காவல் நீவி"* *(நற்.365:1)*

என்றும் பாடலடியில் காவலைக் கடந்து என்னும் பொருளில் 'கடந்து' என்ற பொருளைத் தருகிறது.

## விழா

சங்க இலக்கியத்தில் இருந்தே தமிழ் மக்கள் பல்வேறு விழாக்களைக் கொண்டாடி மகிழ்வதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளது. கபிலர் பாடல் வழி பண்டைத் தமிழ் மக்கள் கார்த்திகை விளக்கு விழா ஆகிய விழாவைக் கொண்டாடியுள்ளதை அறிய முடிகிறது.

## கார்த்திகை விளக்கு விழா

கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளன்று முருகக் கடவுளின் பொருட்டுத் தமிழ் மக்கள் கொண்டாடும் ஒளி வழிபாட்டுத் திருவிழா கார்த்திகை விளக்கு விழா என்பதாகும். இவ்விழாவின் போது தமிழ் மக்கள் தங்கள் இல்லங்களில் வரிசையாக விளக்குகளை ஏற்றி வைப்பர். இக்கார்த்திகை விளக்கு விழா குறித்த செய்தி கபிலர் பாடலில் காணப்படுகிறது.

***"கங்குல் வருதலும் உரியை பைம்புதல்***
***வேங்கையும் ஒள்இணர் விரிந்தன்ன***
***நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே"***

**(அகம்.2:15–17)**

என்னும் பாடலில் கோடைக் காலத்தில் வேங்கை மரங்களில் இலையில்லாத நிலையில் பூங்கொத்துகள் மலர்ந்திருந்த காட்சிக்குக் கார்த்திகை நாளில் மகளிர் ஒன்றுகூடி இல்லந்தோறும் வரிசையாக விளக்குகள் ஏற்றி வைத்தல் போன்று உள்ளது உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

## நிமித்தம்

நிமித்தமென்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன் உணர்த்துவதாகும். இதனை இன்று

சகுணம் என்றழைக்கின்றனர். இவை நன்நிமித்தம், தீ நிமித்தம் என்று இருவகைப்படும்.

**பழக்க வழக்கங்கள்**

பல்லி ஒலிப்பது தலைவன் வரவை அறிவிக்கும் நல்ல வேளையாகக் கருதப்பட்டது.

பன்றி தினையை உண்ண வேண்டி, இயந்திரமமைந்த புழையிற் புகும்போது பல்லியிடிப்பக் கேட்டு, ஊறு நேரும் என உணர்ந்து தன் இருப்பிடத்திற்குத் திரும்பும் நிலையினை,

***"பாங்கர்ப் பக்கத்து பல்லி பட்டென***
***மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்***
***கல்லளைப் பள்ளி வதியும்"*** ***(நற்.98:5-7)***

உக்கிரப் பெருவழுதியார் தம் பாடலில் பதிவு செய்துள்ளார். இன்றும் நடந்த ஏதோயொரு நிகழ்வைக் கூறும்போது பல்லி சத்தமிட்டால் உண்மையாகவே நடக்கும் என்ற நம்பிக்கைப் பரவலாக உள்ளது.

***"பூங்கண் இடம் ஆடும் கனவும் திருந்தின***
***ஓங்கிய குன்றம் இறந்தாரையாம் நினைப்ப***
***வீங்கிய மென்தோள் கவினிப் பிணைதீரப்***
***பாங்கத்துப் பல்லி படும்"*** ***(ஐந்.எழு.41)***

தலைவனை எண்ணும்போது நம் இடக்கண் துடித்தல். மென்மையான தோள்கள் பூரித்தல் மற்றும் சுவற்றில் பல்லி ஒலித்தல் நல்ல நிமித்தங்களாக தென்படுகின்றன என்று தோழி தலைவியை நோக்கி கூறுகிறாள்.

**பன்றியும் பல்லியும்**

பிளந்த வாயினையுடைய பல்லி நற்பக்கத்தே செய்த ஒலியாகிய நிமித்தம் உணர்ந்து பன்றி கொலையில் விளைந்திருக்கும் நல்ல

செந்தினையின் கதிரை உண்ணவரும். கானவன் பன்றி வருதலையறிந்து தீப்பந்தம் கொளுத்துவான். கானவன் ஏற்றிய நெடுஞ்சுடரைப் பார்த்துவிட்டு வந்த தலைவன், தலைவியினுடைய நடுக்கத்தைத் தரும் துன்பத்தினைத் தீர்த்து வைப்பான். இச்செய்தியை,

*"முதைச்சுவல் கலித்த மூரிச் செய்தினை*
*ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்*
*பகுவாய்ப் பல்லிப் பட்டோர்த்துக் குறுகும்*
*புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக்*
*கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய*
*நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்ததும்*
*நடுங்குதுயர் களைந்த நன்னாராளன்" (அகம்.88:1-7)*

என்னும் பாடற்பகுதி குறிக்கிறது. இப்பாடலில் தலைவனுக்கும் பன்றிக்கும் பல்லியின் சத்தம் நன்நிமித்தமாய் தெரிகின்றது.

### ஆந்தை

ஆந்தை அலறும் குரல் நல்ல சகுனம் ஆகும் என்பதை,

*"ஆந்தை குரல் இயம்ப" (ஐந்.எழு.40:1)*

இப்பாடல் தெரிவிக்கிறது.

### வேங்கை

வேங்கை அரும்புங் காலத்துத் தினைக் கதிர்கள் முற்றிவிடும். வேங்கை அரும்பியதை அறிந்த கானவர், தினை அறுப்பதற்காகக் கூடுவர். வேங்கை கானவர் விதைத்த தினை விளைந்திருக்குமென்பதைச் சோதிட வல்லார் போல அறிவிக்கின்ற தன்மையாதலின் "கணிவாய் வேங்கை" என்பார் கபிலர்.

*"முன்றில் பலவின் படுசுனை மரீஇப்*
*புன்தலை மந்தி தூர்ப்பத் தந்தை*
*மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி*
*ஐவன வெண்நெல் குறூஉம் நாடனொடு*
*சூருடைச் சிலம்பின் அருவி ஆடிக்*
*காரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கைப்*
*பாவமை இதனம் ஏறிப் பாசினம்*
*வணர்குரல் சிறுதினை கடியப்*
*புணர்வது கொல்லோ நாளையும் நமக்கே"* *(நற்.373)*

எனவரும் நற்றிணைப் பாட்டால் அறிய முடிகின்றது.

**பொழுது**

வேங்கை மலரும் காலமான இளவேனில் காலத்தையே பழந்தமிழர் திருமணம் நிகழ்த்துவதற்குரிய பெரும்பொழுதாகக் கருதியதை அக்காலத் தமிழ்ப் புலவர்கள் "கணிவாய் வேங்கை" "நன்னாள் வேங்கை" எனப் பாடல்களில் சுட்டி உரைத்திருப்பது நன்னித்தமாகயிருப்பதைக் கண்டறிய முடிகின்றது.

**கனவு**

நற்றிணையில் மகளுக்கு உற்ற நோயினை அறியாத தாய் கனவு கண்டது பற்றிய குறிப்பு உள்ளது. அதனை,

*"வெறியென உணர்ந்த அரிய அன்னையைக்*
*கண்ணினுங் கனவினுங் காட்டி இந்நோய்*
*என்னினும் வாராது மணியின் தோன்றும்*
*அம்மலை கிழவோன் செய்தனன்"* *(நற்.173:4-7)*

இப்பாடல் பகுதியால் தெளிவாகிறது. இப்பொழுதும் மக்கள் தங்கள் வாழ்வில் விடியற்காலையில் கனவு கண்டால் பலிக்கும் என்பது பழக்கமாக இருந்து வருகிறது.

கலித்தொகையில் தலைமகள் கனவு காண்பது பற்றிய செய்தி காணப்படுகின்றது.

வரைவிடை ஆற்றாளாய் இருக்கின்ற ஒரு தலைவியினுடைய மாறுபட்ட தோற்றத்தைக் கண்டு வினவிய தோழிக்கு அவள் தான் கண்ட கனவு நிலையை எடுத்துரைத்தாள்.

தலைவனைக் கனவில் கண்டு தான் செய்த செயல்கள் ஒவ்வொன்றாகக் கூறி, கனவில் வந்த தலைவன் நனவில் வந்து தன்னோடு கூடும் நிலை உண்டென்று குறிப்பிடுகிறாள்.

*"நனவின் வாரா நயனி லாளனைக்*
*கனவிற் கண்டியன் செய்தது கேளினி*
*அலந்தாங் கமையலென் என்றானைப் பற்றியென்*
*நலந்தாராயோ வெனத் தொடுப்பேன் போலவுங்*
*கலந்தாங் கேயென் கவின் பெற முயங்கிப்*
*புலம்ப லோம்பென அளிப்பான் போலவும்*
*முலையிடைத் துயிலும் மறந்தீத் தோயென*
*நிலையழி நெஞ்சத்தேன் அழிவேன் போலவும்*
*வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்*
*தலையுற முன்னடிப் பணிவான் போலவும்*
*கோதை கோலா இறைஞ்சி நின்ற*
*ஊதையஞ் சேர்ப்பனை அலைப்பேன் போலவும் ஆங்கு*
*கனவினாற் கண்டேன் தோழி காண்தகக்*
*கனவின் வந்த கானலஞ் சேர்ப்பன்*
*நனவின் வருதலு முண்டெென*
*அனைவரை நின்றதென் அரும்பெற லுயிரே"*

**(கலித்.128:8–26)**

என்னும் கலித்தொகைப் பாடல் மூலம் பதிவாகியுள்ளதைத் தெள்ளத் தெளிதின் புலனாகிறது.

கனவுகள் எப்பொழுதும் வியப்பிற்குரியனவாக அமைகின்றன. நனவில் நிகழாதவையும் கனவில் காணமுடிகின்றது. அகத்தலைவனின் பிரியாச் சிறப்பினை வலியுறுத்த,

*“கனவினும் பிரிவு அறியலனே”* *(அகம்.178:20)*

என அகநானூறு குறிப்பிடுகிறது.

**தீநிமித்தம்**

பின்னர் நிகழவிருக்கும் நிலைமைகளை முன்னர்ச் சில அறிகுறிகளின் வாயிலாக முன்னறிந்து கொள்ளும் நிலையில் நிமித்தங்கள் மனித வாழ்வில் சிறப்பிடம் பெறுகின்றன.

தீ நிமித்தங்கள் பெரும்பாலும் இயற்கையின் மாறுபட்ட செயல்கள், பறவை நிமித்தங்கள், விலங்கு பற்றிய நிமித்தங்கள், கனவு நிமித்தங்கள் ஆகியவற்றின் வழி செயல்பட்டிருப்பதனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

**ஆந்தை**

*“இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை*
*கழுது வழங்கு யாமத்து அழிதகக் குழறும்”*

(அகம்.122:13–14)

வீட்டில் உள்ள எலியை இரையாகக் கொண்ட கூகை, பேய்கள் உறங்கும் நள்ளிரவில் அழிவு உண்டாகும் குழறும் தன்மை உடையது என்பதைப் புலவர் பரணர் தீநிமித்தமாகக் குறித்துள்ளார்.

*“முதுமரத் துறையும் உரவுவாய் முதுபுள்*
*கதுமெனக் குழறுங் கழுதுவழங் கரைநாள்”*

(அகம்.260:12–13)

முதிய மரத்தில் எப்போதும் நீங்காமல் தங்கும் முழங்கும் வாயையுடைய பேராந்தை விரைவாய்க் குழறி ஒலிப்பதும், பேய் திரிவதும் ஆகிய இரவில் நெஞ்சம் உருகும் துன்பத்தைத் தலைவன் செய்தான் என்பதைக் கூகையின் செயலுக்கு ஒப்பிட்டுள்ளார் மோசிக்கரையனார்.

**நிரையம்**

சுவர்க்கம், நரகம் என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் பயின்று வரவில்லை. எனினும் அதனைக் குறிக்கத் துறக்கம், நிரையம் போன்ற சொல்லாட்சிகளைப் பயன்படுத்தியுள்ளனர் புலவர்.

***"வரையா நிரையத்துச் செலீஇயரோ" (குறுந்.292:6)***

என்ற பாடலடியில் பெண் கொலை புரிந்த நன்னன் நரகம் செல்வான் என்பதைக் குறிப்பிடுகிறது. பெண் கொலை புரிதல் தீநிமித்தமாகக் கருதப்படுகிறது.

**வெறியாடல்**

ஐங்குறுநூற்றில் குறிஞ்சித்திணையில் கபிலர் பாடிய வெறிப்பத்து எனும் உட்பிரிவு வெறியாடலின் வளர்ச்சியைக் காட்டுகின்றது. வெறி என்பதற்கு 'மணம்' என்ற பொருள் உடைய தமிழ்ச்சொல் என்பர். முருகனை வழிபடும் இடத்தில் நறுமணம் மிக்க பூவும், தளிரும் புகையும் மிக்கு எங்கும் இனிய மணம் வீசும். அவ்விடத்தை வெறிக்களம் என்று முன்னோர் வழங்கினர். அவ்விடத்தில் நிகழும் விழாவிற்கு வெறியயர்தல் எனும் பெயர் வழங்கலாயிற்று.

"பொய்த்தல் இல்லாத மரபினையும் ஊர்க்கண் வாழும் முதுமையுடைய வேலன், கழங்கு நிறுத்தி, அதன் கண் தான் வழிபடுத் தெய்வம் வரப்பண்ணி, வெறியயர் களத்தினை கழங்குகளைக் கொண்டு

கணக்கிட்டு, கன்னம் தூக்கி, இவள் மெலிவிற்குக் காரணம் முருகென மொழிவானாயின் இவளை உண்மையில் களவொழுக்கத்தில் மெலியச் செய்த தலைமகற்கு அவ்வெறியாட்டு உரித்தாங் கொல்லோ கூறுக"[29] எனத் தோழி செவிலித் தாய் வெறியாடலுக்கு ஏற்பாடு செய்வதைத் தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள். தோழி,

*"வெறிசெறித் தனனே வேலன்"* *(ஐங்.246)*

என்பதைத் தலைமகளுக்கும் தெரியப்படுத்துகின்றாள்.

இன்றும் நடுஇரவில் பெண்கள் வெளியே செல்லும்போது யாதொரு தீங்கும் ஏற்படாமல் இருக்க முருகனை வழிபட வலியுறுத்துவர். தலைவியின் நிலையைக் கண்டு அணங்கு போன்ற உயிரினங்களால் தீங்கு நேரும் என்ற கருத்து நம்பப்படுகிறது.

### புராணச் செய்தி

தோழி தலைவனை வரைவுகடாவும் போது வேறு பல செய்திகளிடையே புராணக்கதை இடம்பெறுவதைக் கபிலரின் பாடல் வழி காணமுடிகிறது.

குறிஞ்சி நாட்டைச் சேர்ந்த தலைவனைத் தோழி வரைவுகடாவினள். அவனும் நிலைமையையுணர்ந்து வரைவோடு வந்தான். இச்செய்தியைத் தோழி தலைவனுக்கு அறிவித்தாள். கபிலரின் கலிப்பாட்டில் பின்வரும் புராணக் குறிப்பு உள்ளது. அப்புராணச் செய்தி எப்படி வரைவுகடாதலுக்குத் துணையாக அமைந்திருக்கின்றன என்பதை அறிய முடிகின்றது.

"இமயமலையில் பிறந்த மூங்கிலை வில்லாக வளைத்த கங்கையைக் கொண்ட இறைவன் இறைவியோடு பொருந்தி உயர்ந்த மலையிலே இருந்தான். அப்பொழுது அரக்கரின் அரசனான இராவணன் கயிலை

மலையை எடுப்பதற்குக் கையைக் கீழே செருகி எடுக்கலாற்றாது வருந்தாது போல, புலியின் வடிவை ஒப்ப பூத்த, வேங்கை மரத்தை புலியெனக் கருதி அதனடியால் கொம்புகளால் குத்திய யானை, அக்கொம்பை மீண்டும் வாங்க இயலாமல் மலைக்குகைகள் எல்லாம் எதிரொலிக்கும்படி முழங்கும் நாடனே, நீரற்ற விளையும் பயிர்போல உன் கருணையைப் பெறாமல் பொலிவிழந்த தலைவி வருதற்கு அரிய வழியிலே நீ அஞ்சாது வந்தமையால் விடியற்காலையில் மழைபெற்ற நிலத்தின் பயிர்போல அழகினைப் பெற்றாள். அவ்வழகு இவளை விட்டு நீங்காமல் நிலை பெறுவதற்கு ஒருவழி உண்டெனில் கூறுவாயாக''[30] என்று யான் அவனிடம் கூறக்கேட்டு, அவனும் வரைந்து கொள்ள வருகின்றான் என்று தலைவன் வரைவோடு வந்தமையைத் தோழி தலைவிக்கு அறிவிக்கின்றாள்.

இப்பாடலில் இராவணன் மலையைப் பெயர்க்க நினைத்து அதன் அடியிலே கையினைக் கொடுத்தாற் போல, யானை தன் கொம்பினை வேங்கை மரத்தின் அடியிலே கொடுத்தது என்று தோழி கூறுவது தலைவனின் களவுச் செயலை மறைமுகமாகச் சுட்டுகின்ற குறிப்பே ஆகும். களவிலிருந்து அவன் தன்னை மீட்டுக்கொள்வதை அறியவில்லை என்பதும், தலைவியும் யானை போலத் துன்புறுகிறாள் என்பதும் தோழி கூற வந்த குறிப்புகள். தலைவனும் இவ்வுவமையால் சுட்டப்பட்ட செய்தியை உணர்ந்தான். எனவே வரைவோடு வந்தான். இப்பாடலில் உவமையாக வருவது புராணச் செய்தியாயினும், புலவர் தாம் கூறவந்த வரைவுகடாதல் துறையைச் சித்திரிக்க அதனைக் கையாண்டனர் என்பது தெளிவாகிறது.

## தொகுப்புரை

- அகப்பாடல்கள் மூலம் புலவர்கள் தாம் கூறவந்த கருத்துகளைப் பல்வேறு உத்திகளால் சித்திரிக்கும் முறைகள் காணப்படுகின்றன.

- ஒவ்வொரு படைப்பாளியும் தான் எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்பச் சொற்களைக் கையாளுகின்றனர். ஒரு புலவர் ஒரு திணையைப் பற்றிப் பாடினாலும் அதில் கூறப்படும் கருத்து உணர்வுக்கு ஏற்பச் சொற்பயன்பாடு மாறிவரும் என்பதைப் புலவர்கள் நமக்குப் புலப்படுத்துகின்றனர். ஆகவே மொழியமைப்பும் மொழிப்பயன்பாடும் கருத்து உணர்வு பொருண்மைக்கேற்ப ஆற்றல் வாய்ந்தவையாக விளங்குமென்பது பாடல்கள் வழி புலனாகிறது.

- உவமை வாயிலாக புலவர்களின் கற்பனை, நோக்கும் திறன், உலகியல் அனுபவங்கள் போனற்வை அழகாக வெளிப்படும் என்பதைப் பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது. உவமையால் பெயர் பெற்ற புலவர்கள் மூலம் உவமையின் சிறப்பையும் பண்புகளையும் அறிய அவை உதவுகின்றன.

- உருவகம் தற்சார்பால் அமைந்த பிரிவாகும். உருவகங்கள் இயல்பாக அமைந்தனவே அன்றிச் செயற்கையாக கற்பனை ஆற்றலால் படைக்கப்பட்டவை அல்லயென்பது தெளிவாகிறது. மரபு வழியாகப் போற்றப்பட்ட உருவகங்களே இடம் பெறுகின்றன என்பது புலனாகிறது.

- இயற்கையைப் போற்றும் போது புலவர்களின் தனித்தன்மை புலப்படுகிறது. இயற்கையை வருணிப்பது மட்டும் புவலர்களின் நோக்கமன்று என்பதும், அவ்வருணணைகள் மூலம் உரிப்பொருள்களைப் புலப்படுத்துமாறு செய்வதே அவர்தம் குறிக்கோள் என்றும் வரைவுகடாதல் பாடல்களை ஆராயந்த போது தெள்ளத் தெளிவாகிறது.

- உள்ளுறை, இறைச்சியால் கருப்பொருட்களின் வழி வரைவுகடாவ தலைவன் முயற்சி மேற்கொள்ள வேண்டுமென்பதும் புலப்படுத்தப் படுகிறது.

- சமுதாயத்தில் நடக்கும் பழக்க வழக்கங்களும் மனிதர்களின் கனவு வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக உள்ளது.

- அகப்பொருட்கள் வழி சமுதாயத்தில் என்னென்ன தொழில்கள் இருந்தன என்பதையும் அறிய முடிகிறது. அதைப் புலவர்கள் பாடல் மூலம் திறம்படச் செய்துள்ளமையை அறிய ஏதுவாக அமைகிறது. புலவர்களின் ஆழ்ந்த அறிவு, புலமைத் திறன், தொழில் நுட்பங்கள் போன்றவை அறிந்து கொள்ள முடிகிறது.

- ஆடை பற்றிய அறிவைச் சங்க கால மக்கள் அறிந்திருந்தனர் என்பதைப் புலவர் பாடல்களின் வழி புலனாகிறது. மக்கள் மனதில் என்றும் நீங்கா இடம்பெற்ற விழா குறித்த செய்தியினை அறிய முடிகிறது.

- சங்க கால மக்கள் சகுனம் பார்க்கும் பழக்கம் கொண்டிருந்ததைப் புலவர்கள் பாடல் வழியாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

- நன்னிமித்தம், தீநிமித்தம் போன்றவை அன்றே சங்க காலத்தில் இருந்ததையறிந்து வியப்படைய வைக்கிறது.

- புராணச் செய்தி வாயிலாக தோழி தலைவனை வரைவுகடாவுகிறாள். இதன் நோக்கம் தலைவனுக்கு அவனறிந்த ஒன்றைக் கூறி, அறியாத ஒன்றை விளக்குவதாக அமைகிறது. தலைவி களவில் எய்தும் துன்பத்தையும் தலைவன் தன்னை வரைய வேண்டும் என்ற அவளின் மென்மையான விருப்பத்தினையும் தலைவனுக்குக் கூறமுடியாத தோழி, அவன் அறிந்த புராணச்செய்தி ஒன்றின் மூலம் நுட்பமாகப் புலப்படுத்த இவ்வுத்தியைக் கையாளுகிறாளென்பது புலப்படுத்தப்படுகிறது.

# அடிக்குறிப்புகள்

1. சிலம்பொலி செல்லப்பன், வளரும் தமிழ், பக்.19–20.
2. சுப்பிரமணியம் ச.வே., இளங்கோவின் இலக்கிய உட்திகள், ப.6.
3. சீனிவாசன் ரா., சங்க இலக்கியத்தில் உவமைகள், ப.2.
4. சுந்தரமூர்த்தி இ., திருக்குறள் அணிநலம், ப.137.
5. நாகு இரா.கு., கோதை தமிழ், ப.63.
6. சிங்கார வடிவேலன் அர., சங்க இலக்கிய உவமைகள், பக்.105–106.
7. இராமசுப்பிரமணியம் வ.த., (தொ.ஆ.), தண்டி.நூ.36, ப.113.
8. அகம்.228:10–11.
9. வரதராசனார் மு., பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்.81–82.
10. அகம்.2.
11. கலித்.43:8–11.
12. நற்.373:1–5.
13. குறுந்.69:1–5.
14. காளிமுத்து கா., தொல்காப்பியம் அதன் இலக்கியக் கொள்கைகளும் குறுந்தொகையும், பக்.38–39.
15. அகம்.272.
16. அகம்.282:1–2.
17. நற்.358:4–5.
18. நற்.372:10–13, 388:1–5.
19. நற்.388:5–9.
20. அகம்.80:4–7.

21. அகம்.322:12.

22. குறுந்.3:3.

23. அகம்.78:7.

24. அகம்.89:10–16.

25. பகவதி கு., தமிழர் அடைகள், பக்.20–21.

26. குறுந்.125.

27. நற்.376:5–8.

28. அகம்.156:8–9.

29. ஐங்.245.

30. கலித்.38.

இயல் - ஐந்து

# வரைவுகடாதல் இடையீடுகள் தீர்வுகள்

## முன்னுரை

பண்டைத் தமிழகத்தில் தமிழ் மக்களிடையே பெருவழக்காய் இருந்து வந்த களவு, அக்களவின் வழி வந்த கற்பு என்பனவற்றை எல்லாம் தொல்காப்பியர் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் உரைத்துள்ளார். சங்ககாலச் சமுதாயம் அற உணர்வை அடிப்படையாகக் கொண்டது. அகம், புறம் என்று பிரிக்கப்பட்டிருந்த வாழ்க்கை நெறியிலும் அவ்வறமே காணப்பட்டது. அவ்வற அடிப்படையிலேயே வரைவுகடாதல் துறை அமைந்திருந்தது. வரைவுகடாதல் துறையின் பயனாகவே பண்பட்ட ஒழுக்கமுடைய சமுதாயம் அமையும் என்ற கருத்தும் தலைவன், தலைவி இருவருக்கும் நிகழும் இடையூறுகளை விளக்குவதாகவும் இவ்வியல் அமைகிறது. தலைவன், தலைவி களவு வாழ்க்கை கற்பாக மாற தோழி மேற்கொள்ளும் வழிகள் இவ்வியலின் முடிவாகக் காட்டப்பட்டுள்ளது.

## அற அடிப்படை

ஒரு சமுதாயத்தின் வரலாற்றையும், பண்பாட்டையும் அறிவிக்கும் வாயில்களாகத் தொல்பொருளாய்வு, கல்வெட்டுகள், நாணயங்கள், செப்பேடுகள் இலக்கியங்கள், ஆவணங்கள், கள ஆய்வு எனப் பலவற்றை எடுத்துக்காட்டுவர். இவற்றுள் பழந்தமிழ்ப் பண்பாட்டை ஆராய்வதற்கு இலக்கியங்கள் ஏற்றத் துணையாக உள்ளன. இவ்விலக்கியங்களின் வாயிலாகச் சங்கத் தமிழகத்தில் நிலவி வந்த வளமிக்கதொரு பண்பாடு உள்ளமையை அறியக்கூடும்.

சங்ககால மக்கள் நிலையற்ற இவ்வுலகில் நெறிப்பட்ட வாழ்க்கையால் கிடைக்கும் புகழையே நிலையென விரும்பி ஒழுக்கம் மிகுந்த வாழ்க்கையை மேற்கொண்டனர் என்பது தெரிகிறது. இது,

*"மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்*
*தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே"* *(புறம்.165:1-2)*

என்ற புறப்பாடலடியால் அறியப்படுகிறது.

இக்கருத்தை அரண் செய்யும் வகையில் வ.சுப.மாணிக்கம் அவர்கள் தமது 'தமிழ்க்காதல்' எனும் நூலில் கூறும் சில செய்திகள் எடுத்துக்காட்டப்படுகின்றன.

"புறநலம் சமுதாயத்தின் அகநலத்தைக் காட்டும் பளிங்கு. பிறப்புத் தந்த இவ்வுலகத்துப் பல்லாற்றானும் நன்கு வாழ்தல் வேண்டுமென்பது தமிழினக் குறிக்கோள். நல்ல அறத்தோடும் தூய அகத்தோடும் உலக வாழ்க்கையை நடத்தலாம், நடத்த வேண்டும். அகத்திணையாகுக, புறத்திணையாகுக தமிழின் எத்துறைப் பாடலிலும் இவ்வாழ்வறம் இலங்கக் காண்பீர். ஒழுக்கம் இல்லா உலகியம் அழிவைத்தரும் ஒழுக்கமில்லா உயிரியம் வஞ்சகம் எனப்படும். உலகியம் உயிரியம் மற்று எவ்வியத்துக்கும் ஒழுக்கியம் மிக இன்றியமையாதது, தூய அடிப்படையாவது, இதனால் முன்னைத் தமிழர் எல்லா வாழ்க்கைத் துறையிலும் குருதியோட்டம் போலும் ஒழுக்கத்தையே வற்புறுத்தியிருப்பக் காண்கிறோம்"[1] என்பார். இவரின் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

## ஒழுக்க நெறி

அகவாழ்வின் இருகூறுகளாக களவையும் கற்பையும் சங்ககால மக்கள் மேற்கொண்டனர். திருமண வாழ்வு எனப்பட்ட கற்பியலுக்கு

அழைத்துச் செல்லும் நெறியே களவுநெறி களவினைக் கற்பாக்க உதவுவது வரைவுகடாதல் துறையாகும்.

“களவில் மகிழும் தலைவன் அவ்வொழுக்கத்தோடு நின்றுவிடாது, உற்றாருடனும், சான்றோருடனும் பெண்கேட்டு வரவேண்டும் தன்னைத் தன் பெற்றோர் தர ‘நாடறி நன்மணம் புணர வேண்டும்’ என்ற தலைவியின் விருப்பம் தோழியின் மூலம் தலைவனுக்கு வெளிப்படுத்துதலே வரைவுகடாதல் ஆகும்”[2] களவுக் காதல் நாடறி நன்மணத்தில் முடிவதுதான் மரபு என்பதை உணர்த்தவே இத்துறை அமைந்தது எனலாம்.

## இலக்கியத்தின் பாடுபொருள்

சங்கச் சமுதாயத்தின் இல்லறநெறியாக களவுநெறி, மரபுநெறி இரண்டுமே இருந்தன. இதனை

*“மறைவெளிப் படுதலுங் தமரிற் பெறுதலும்”*

(தொல். பொருள். செய். நூ.179:1)

என்பார் தொல்காப்பியர். இவ்விரு நெறிகளுள் மறைவெளிப்படுதலே சங்க இலக்கியத்தின் பாடுபொருளாக அமைந்தது.

## களவின் இயல்பு

களவாவது,

*“பிறர்க்குரிய பொருள் மறையிற் கோடல்”* [3]

(தொல்.பொருள்.களவு.இளம்.ப.155)

என்பார் இளம்பூரணர். அறநிலை வழுவாது காதலர்கள் கலந்து ஒழுகும் இவ்வொழுக்கம் களவு எனப்பட்டது. இக்களவொழுக்கம் உள்ளிருந்து சுரக்கும் அன்புப் பெருக்கினால் ‘தான்,’ ‘அவள்’ என்ற வேற்றுமையின்றி இருவரும் ஒருவராய் ஒழுகும் உள்ளப் புணர்ச்சியேயாகும். இவ்வுள்ளப்

புணர்ச்சி அவர்களை மீண்டும் மீண்டும் சந்திக்கத் தூண்டுகிறது. இயற்கையாக இருவரும் ஒருவரையொருவர் பார்த்தலும் அளவளாவலும் தொடர்ந்து நடைபெற இயலாது. எனவே தலைவனுக்குத் தோழன் துணையும், தலைவிக்குத் தோழி துணையும் தேவைப்படுகிறது. உள்ளத்தில் கள்ளமில்லாத இயல்பின் வழி இருவரும் சந்திக்கத் தடையிருக்காது.

ஆனால் இருவரும் இப்பொழுது உள்ளத்தில் களவென்னும் கள்ளம் தோன்றியதால்தான், மறைவில் சந்தித்தலையே விரும்புகின்றனர். அம்மறைவு என்னும் செயலால், மரபுவழி அமையும் திருமண வாழ்விலுள்ள சில செயல்கள் களவில் இடம்பெற இயலாதென உணர்கின்றனர். ஊராரின் பார்வைக்கும் 'இவர்களது இந்தச் சந்திப்பு இயல்பானதன்று' என்ற உண்மை தெரிய வருகிறது. எனவே ஊர் மக்கள் பார்வைக்குப் புலனாகாதவாறு பல்வேறுபட்ட நேரங்களையும் பல்வேறுபட்ட இடங்களையும் தலைவன், தலைவி இருவரும் தேர்ந்தெடுக்க நேர்கிறது.

## இடையீடுகள்

தலைவன் தலைவியைச் சந்திக்கும் போது ஏற்படும் இடையீடுகளாவன:

- பகற்குறி இடையீடு
- இரவுக்குறி இடையீடு
- அல்லகுறி இடையீடு
- குறிமறுத்துல்
- அலர்
- தலைவியின் ஆற்றாமை
- தலைவன் ஆற்றாமை

- தாய் அச்சம்
- அன்னையின் சினம்
- தலைவன் வரும் வழி
- இற்செறிப்பு
- வெறியாட்டு
- தலைவியின் மெலிவு
- தலைவனின் பண்பு
- நொதுமலர் வரைவு

போன்றவற்றின் மூலம் இவ்விடையீடுகள் எவ்வாறு நிகழுகின்றன என்பதையும் அறிய இவ்வியல் உதவுகிறது.

## பொழுதுகள்

குறியென்பது தலைமகனும் தலைமகளும் சந்தித்துக் கொள்ளும் இடமாகும். குறி இரண்டு வகைப்படும். ஒன்று பகற்குறி, இன்னொன்று இரவுக்குறி. இருவரும் பகற்காலத்தில் சந்திக்கும் இடம் பகற்குறியாகும். இரவுக் காலத்தில் இல்லகத்தின் வெளியே சந்திக்கும் இடம் இரவுக்குறியாகும். இந்த இருவகைக் குறிகளிலுமே தலைமகன் தலைமகளைச் சந்திக்க முடியாமல் இடையீடுபடுதல் உண்டு. இடையீடுபடுதல் முறையே பகற்குறி இடையீடு, இரவுக்குறி இடையீடு எனப்பெயர் பெறும். இடையீடுபடுதல் மட்டும் அல்லாமல் அல்ல குறிப்படுதலும் உண்டு.

இரவுக்காலத்தில் தலைமகளைச் சந்திக்க வரும் தலைமகன் தான் குறி எழுப்பிக் கொண்டு வருவதாகக் கூறுவான். அவன் குறி எழுப்பிக் கொண்டு வருவதாகச் சொன்ன குறி இயற்கையாக நிகழ்ந்து விட,

தலைமகன் தான் சொன்ன குறியிடத்திற்கு வந்து தலைமகளைச் சந்திக்க முடியாமல் போவது 'அல்ல குறி' எனப்படும். அல்லகுறிப்பட்ட தலைமகன் தலைமகளைக் காண இயலாமைக்கு வருந்துவான். காரணம் களவில் தலைமகன் தலைமகளின் வீட்டிற்குள் செல்லும் மரபு போன்றவன் அல்லன். இவற்றை,

*"இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்தும்*
*காணா வகையிற் பொழுது இகப்பின்*
*தானகம் புகாஅன் பெயர்தல் இன்மையிற்*
*காட்சி ஆசையிற் களம்புக்குக் கலங்கி*
*வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்"*

(தொல்.பொருள்.களவு.17:1–5)

என்னும் தொல்காப்பிய நூற்பாவின் வழி அறியக்கூடும்.

## குறி பிழைத்து வரும் தலைவன்

தலைவன் குறியிடத்தில் வந்ததைக் குறிப்பால் அறிவித்த காலத்தில் தலைவி அவன் வருவதற்கு முன்னரே குறியில்லாததைக் குறியென்று எண்ணிச் சென்று வறிதே மீண்டவள் ஆதலின் வாராதொழிய வருத்தமுற்ற தலைவன், 'தலைவி நன்மையை உடையாள்' என்பதை அறிந்தது போலப் பெறுதற்கரியாள் என்பதையும் இதுவரை அறிந்திலையே என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறுகிறான் தலைவன்.

*"இல்லோ னின்பங் காமுற் றாஅங்*
*கரிதுவேட் டனையா னெஞ்சே காதலி*
*நல்ல ளாகுத லறிந்தாங்*
*கரிய ளாகுத லறியா தோயே"* *(குறுந்.120)*

இப்பாடல் குறிபிழைத்து வருந்தும் தலைமகனைச் சுட்டுகிறது.

**தலைமகள் வருத்தம்**

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது. ஊர் உறங்காமை, அன்னை உறங்காமை, காவலர் வருதல், நிலவு வெளிப்படுதல், நாய் உறங்காமை முதலியவற்றால் தலைவன் குறியின்கண் தலைவி வரப்பெறாத போது, மீண்டும் தலைவன் சிறப்புறத்தானாகத் தலைவி அவன் கேட்கும்படித் தான் அடைந்த துன்பங்களைத் தோழிக்குச் சொல்லுகிறாள். அகநானூற்றில்,

*"இரும் பிழி மகாஅர் இவ்அழுங்கல் மூதூர்*
*விழவு இன்றுஆயினும் துஞ்சாது ஆகும்*
*மல்லல் ஆவண மறுகுஉடன் மடியின்*
*வல்உரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்*
*பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்*
*துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்*
*இலங்குவேல் இளையர் துஞ்சின் வைஎயிற்று*
*வலம்சுரித் தோகை ஞாளி மகிழும்*
*அரவாய் ஞமலி மகிழாது மடியின்*
*பகல்உரு உறழநிலவுக் கான்று விசும்பின்*
*அகல்வாய் மண்டிலம் நின்று விரியும்மே*
*திங்கள் கல்சேர்பு கனைஇருள் மடியின்*
*இல்எலி வல்சி வல்வாய்க் கூகை*
*கழுது வழங்கு யாமத்து அழிதகக் குழறும்*
*வளைக்கண் சேவல் வாளாது மடியின்*
*மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்*
*எல்லாம் மடிந்த காலை ஒருநாள்*
*நில்லா நெஞ்சத்து அவர் வாரலரே"* *(அகம்.122:1-18)*

என்ற பாடல் வழி இந்த மூதூர் உறங்காது. ஊர் உறங்கினும் தாய் உறங்காள். தாய் உறங்கினும் காவலர் வருவர். காவலர் உறங்கின் நாய்குரைக்கும். நாய் உறங்கினும் நிலவு வெளிப்படும். நிலவு மறையின்

கூகை குழறும். கூகை உறங்கின் கோழி கூவும். எல்லாம் மடிந்த பின்போ தலைவர் வரமாட்டார் என்று எடுத்துரைக்கின்றாள் தலைவி.

தோழி பகற்குறிக்கண்ணே தலைவனை எதிர்ப்பட்டுத் தலைவியின் பசலை கூறி வரைவுகடாவும் நிலை பாடலில் காண முடிகின்றது. இங்ஙனம் இற்செறிப்பு, தோற்ற மாறுபாடு முதலியவை கூறியும் தலைவனை வரைவுகடாவச் செய்வாள் என்பது புலனாகிறது.

## இல்லறத்தை வலியுறுத்தல்

களவொழுக்கத்தில் தலைவன் நாள்தோறும் பகற்குறியில் வந்து தலைவியுடன் கூடிச் செல்பவனாய் இருந்தான். இவ்வகையால் தலைவிக்கு வேட்கை தீரவில்லை. அவளது எண்ணத்தைக் குறிப்பால் உணர்ந்த தோழி தலைவனை நோக்கி, நீ எம்மோடு எம் இல்லத்திற்கு வந்து எம் விருந்தினனாகி இரவில் தங்கிச் செல்லல் வேண்டும் எனத் தலைவனை வேண்டிக் கேட்டுக் கொண்டாள். இதன் பயனாவது தலைவனுக்கு இல்லறத்தின் சுவையைத் தோற்றுவித்தலாகும்.

*"நொதுமலர் போலப் பிரியின் கதுமெனப்*
*பிறிது ஒன்று ஆகலும் அஞ்சுவல் அதனால்*
*சேணின் வருநர் போலப் பேணா*
*இருங்கலி யாணர்எம் சிறுகுடித் தோன்றின்*
*வல்எதிர் கொண்டு மெல்லிதின் வினைஇத்*
*துறையும் மான்றின்று பொழுதே சுறவும்*
*ஓதம் மல்கலின் மாறு ஆயினவே*
*எல்லின்று தோன்றல் செல்லா தீம்என*
*எமர்குறை கூறத் தங்கி ஏமுற*
*இளையரும் புரவியும் இன்புற நீயும்*
*இல்உறை நல்விருந்து அயர்தல்*
*ஒல்லுதும் பெருமநீ நல்குதல் பெறினே" (அகம்.300:11-22)*

என்ற பாடல், தலைவனே பகற்பொழுது கழிந்தது. நின் தேரைப் பூட்டும்படி ஏவலர்க்கு ஆணையிட்டு, தலைவி நின் தோழியுடன் இல்லத்துக்குச் செல்வாய் எனக் கூறிய அளவில், நீ இவளைப் பிரிந்து செல்லின் இவள் உயிர் பிரியும் என அஞ்சுகின்றேன். ஆதலால் நீ அருளுடன் எம் இல்லத்துக்குவரின் எம்மவர் அன்புடன் வரவேற்பர். நல்விருந்து அளிப்பர். எனவே இரவில் எம் இல்லத்துள் தங்குக என்று தலைவனை வேண்டுகிறாள் தோழி என்றமைகிறது.

## பகற்குறி இடையீடு

பகற்பொழுதில் தலைவன் தலைவியைக் காண வரும்போது அச்செயல் தடைப்பட்டுப் போதல் பகற்குறி இடையீடு என்று அழைக்கப்படுகிறது.

- குறியிடம் வராமல் இருவரையும் தோழி விலக்குதல்
- ஆடுகளத்திலிருந்து தலைவியைத் தோழி அழைத்துச் செல்லுதல்
- இதனால் தலைவன் தலைவி ஆகிய இருவரும் கலங்குதல்
- குறிக்கண் செல்ல வேண்டாம் எனத் தோழி தலைவியை விலக்குதல்.

ஏனென்றால் எம்முடைய தாயும் வருவாள். ஆதலின் வாரற்க என்று தோழி தலைவனுக்கு எடுத்துரைக்கிறாள். இதற்குச் சான்றாக,

*“யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்*
*கரும்புமருண் முதல பைந்தாட் செந்தினை*
*மடப்பிடித் தடக்கை யன்ன பால் வார்பு*
*கரிக்குறட் டிறைஞ்சிய செறிகோட் பைங்குரற்*
*படுகிளி கடிகஞ் சேறு மடுபோர்*
*எஃகுவிளங்கு தடக்கை மலையன் கானத்*

*தார நாறு மார்பினை*
*வாரற்க தில்ல வருகுவள் யாயே* *(குறுந்.198)*

என்ற பாடல் அமைகிறது.

பகற்குறியில் வந்த தலைவனை நோக்கித் தோழி தலைவனை வாரற்க என்று கூறுகிறாள்.

*“சாந்தம் எறிந்துழுத சாரல் சிறுதினைச்*
*சாந்தம் எறிந்த இதண்மிசைச் - சாந்தம்*
*கமழக் கிளிகடியும் கார்மயில் அன்னாள்*
*இமிழக் கிளியெழா ஆர்த்து”* *(தி.மா.நூ.3)*

தலைவனே சந்தன மரங்களை வெட்டியெறிந்து அந்த இடத்தில் உழுது பயிரிடப்பட்ட தினைக்கதிர்களைக் காவல் செய்வதற்காகச் சந்தன மரக்கால்களை நாட்டுப்பரண் அமைத்துச் சந்தனக் குழம்பு அணியப் பெற்ற மயிலைப் போலும் சாயலையுடைய தலைவி கிளிகளை விரட்டியும் அவை செல்லாது அப்புனத்திலேயே இருந்து ஆரவாரித்தன.

இதனால் அவள் தமையன்மார் அவளை மனைக்கண் இற்செறிப்பு ஆட்படுத்தினர். எனவே தலைவியைக் காண வேண்டுமானால் பகலில் வாரற்க என்றும் குறிப்பிடுகிறாள். ஆதலால் அவளை மணம் செய்து கொள்ள வேண்டும் என்று தோழி தலைவனை நோக்கி எடுத்தியம்புகிறாள்.

## இரவுக்குறி இடையீடு

இரவுக்குறிக்கண் தலைவியைக் காண வரும் தலைவனுக்கு அச்செயல் தடைப்பட்டுப் போதல் இரவுக்குறி இடையீடு எனப்படும்.

தலைவன் வரும் வழியானது எத்தகைய கொடுமையானது என்பதை,

*“இருள் கிழிப்பதுபோல் மின்னி வானம்*
*துளி தலைக்கொண்ட நளிபயல் நடுநாள்*
*மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்*

*பொன்எறி பிதிரின் சுடர வாங்கி*
*குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை*
*இரும்பு செய்கொல் எனத் தோன்றும் ஆங்கண்*
*ஆறே அரு மரபினவே யாறே*
*சுட்டுநர்ப் பனிக்கும் சூருடை முதலைய*
*கழைமாய் நீத்தம் கல்பொருது இரங்க*
*அஞ்சுவம் தமியம் என்னாது"* *(அகம்.72:1-10)*

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. தலைவன் வரும் வழிகள் மேகம் இருளைக் கிழிப்பதைப் போன்று மின்னித் துள்ளித் தன்னிடத்தேயுடைய மிக்க மழையுடைய நடுஇரவில் மின்மினிப் பூச்சிகள் மொய்த்துள்ள சிதைந்த வாயையுடைய புற்றினை இரும்பினைக் காய்ச்சி அடிக்கும்போது சிதறுகின்ற பிதிர்போல் அம்மின்மினிகள் ஒளிவிடப் பெயர்த்துப் புற்றாஞ் சோற்றைத் தோண்டி எடுக்கும் பெரிய கையை உடைய ஆண்கரடி இரும்பு வேலை செய்யும் கொல்லனைப் போன்று தோன்றும். அவ்விடத்துச் செல்வதற்கு அரிய இயல்புடையவை யாறு ஓடத்தின் கோல் மறையும் வெள்ளம் கல்லில் மோதி ஒலிக்க கடக்க எண்ணுபவரையும் நடுங்கச் செய்யும் அச்சம் கொண்ட முதலைகளை உடையன. யாம் இத்தகைய நெறிகளில் போவதற்கு அஞ்சுவோம் என நினைக்காது தலைவன் வருவதால் நாங்கள் வருத்தமடைகிறோம் என்று தோழி கூற்றான இப்பாடல் வழி உணரமுடிகிறது.

*"கொடுவரி வேங்கை பிழைத்துக் கோட்பட்டு*
*மடிசெவி வேழம் இரீஇ - அடியோசை*
*அஞ்சி ஒதுங்கும் அதருள்ளி ஆரிருள்*
*துஞ்சா சுடர்த்தொடி கண்"* *(ஐந்.ஐம்.16)*

என்ற பாடலும் இரவுக்குறி வரும் தலைவனைத் தோழி தலைவியை வரைந்து கொள்ளுமாறு கூறுவதாக உள்ளது. வளைந்த வரிகளை உடைய புலி தாக்கத் தப்பிப் பிழைத்த மடிந்த காதுகளையுடைய யானை மெல்ல அஞ்சி நடக்க

அவ்வழியில் நீ திரும்பியதை எண்ணித் தலைவி வருந்தியவளாய் உறக்கம் கொள்ளவில்லை. ஆதலால் நீ இரவில் வாராது தலைவியை மணம் கொண்டு செல்ல வேண்டும் என்று புலப்படுத்துகிறாள்.

## அல்லகுறி இடையீடு

தலைவியைக் காண வரும் தலைவன் குறியிடத்திற்கு வந்தவுடன் பறவைகளை ஒலியிடச் செய்தல், நீரில் கல்லெறிந்து ஓசை எழச் செய்ததில் ஆகிய இரண்டாலும் தன் வரவைத் தலைவிக்கு உணர்த்துவான். இச்செயல்கள் தலைவன் நிகழ்த்தாமல் தாமாக நடைபெறுவதும் உண்டு. அந்நேரத்தில் தலைவன் வந்து விட்டதாக எண்ணிக் குறியிடத்திற்குத் தலைவி வந்து திரும்பிச் செல்வாள். இதுவே அல்லகுறியாகும்.

அல்ல குறிப்பட்டு நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாக முன்னை நாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குச் சொல்லுவாளாய் போன்று தலைமகள் கூறும் பாடலாவது,

*"கருவிரல் மந்திக் கல்லாவன் பறழ்*
*அருவரைத் தீந்தேன் எடுப்பி அயலது*
*உருகெழு நெடுஞ்சினைப் பாயுநாடன்*
*இரவின் வருதல றியான்*
*வரும் வரும் என்பதோழி யாயே"* *(ஐங்.272)*

என்ற பாடல் உள்ளது. கரிய விரலையுடைய குரங்கின் நல்லறிவில்லாத வலிமையுடைய குட்டி ஏறுதற்கு அரிய மலையிடத்து இனிய தேனை அழிக்கத் தேனீக்களை எழுப்பி, அவை கொட்டுதற்கு அஞ்சி அயலதாகிய அச்ச முடைய நெடிய உச்சியில் பாய்ந்தோடும் நாடன் இரவுக்குறியில் வருவதை அறியான். அவன் வருகின்றான் வருகின்றான் எனத் தாய் பல முறை கூறுகின்றாள் என்று தோழிக்குச் சொல்வது போல் தலைவி எடுத்துரைத்தமையாக உள்ளது.

அல்லகுறிப்பிட்ட தலைவனுக்கு உரைத்தலைப் போன்று தோழி தலைவிக்குக் கூறுவதாக,

*“தெண்கடல் சேர்ப்பன் பிரியப் புலம்புஅடைந்து*
*ஒள்தடங்கன் துஞ்சற்க ஒள்ளிழாய் - நண்படைந்த*
*சேவலும் தன்னருகில் சேக்குமால் என்கொலோ*
*பூந்தலை அன்றில் புலம்பு”            (ஐந்.ஐம்.41)*

என்ற பாடலில் தலைவன் வந்து சிறைப்புறத்தே நிற்பதைக் கண்டு தோழி தாம் முந்தைய நாள் அல்ல குறிப்பட்டதை உரைப்பவளாய்த் தலைவியை நோக்கி, தோழி கடல் துறையைச் சேர்ந்த தலைவன் நேற்று உன்னைக் காணாது அல்ல குறிப்பட்டு வருந்தித் திரும்பிச் சென்றதை எண்ணி இன்று இரவும் உறங்காது இருக்கட்டும். அன்றில் பறவை தனக்குப் பக்கத்தில் இருக்கவும் சிவந்த பூப்போலும் தலையுடைய பெண் அன்றில் பறவை தனித்து இரவு விடியும் அளவும் கூட்டின் கண் வருந்தியது என்ன காரணமோ என்றுரைத்தாள் என்பதை அல்லகுறி பாடலின் வழி அறியமுடிகிறது.

**அலர்**

அலர் என்பதற்குப் பழிதூற்றுதல் என அகராதிகள் குறிப்பிடுகின்றன. தலைவனும் தலைவியும் சந்தித்துப் பேசுவதைப் பார்த்துப் பிறர் விமர்சனம் செய்வதை அலர் என்று கூறுகின்றனர். பழிதூற்றுகின்ற நிலையினை உலோச்சனார் அலர், கவ்வை எனத் தன் பாடல்களில் குறிப்பிடுகின்றார். திருவள்ளுவரும் இவ்விரு சொற்களையே பயன்படுத்துகிறார். வாயிலிருந்து மலர்வதால் அலர் என்று கூறுகின்றனர். மலர்தல் என்பதனை அலர்தல் என்றும் குறிப்பிடப்படுகிறது. தாமரை மலர்வதை “அன்றலர்ந்த செந்தாமரை” என்று கூறுவர். அதனால் வாயை இடமாகக் கொண்டு தோன்றுகின்ற மலர்கின்ற மொழியை அலர் என்று குறிப்பிடுவது பொருத்தமுடையதாகும்.

தலைவன் சிறைப்புறமாக நிற்க, தலைவன் உன்னோடு பழகிய காலம் சிறியதாயினும் அது குறித்து எழுந்த அலர் பெரிதாயிற்று என்று தலைவிக்குக் கூறுவாளாய்த் தோழி வரைவின் இன்றியமையாமையை உணர்த்துகின்றாள். சான்று:

*"மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்*
*முழங்கிய நாடவச் சிலவே யலரே*
*கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்*
*பசும்பூட் பாண்டியன் வினைவ லதிகன்*
*களிறொடு பட்ட ஞான்றை*
*ஒளிறுவாட் கொங்க ரார்ப்பினும் பெரிதே"     (குறுந்.393)*

என்ற பாடல் வழி புலப்படுகிறது.

இக்கருத்தை அடியொற்றியே திருக்குறளிலும் அலர் காணப்படுகிறது. இடையீடுகளாலும் அல்லகுறியாலும் தலைவனை அடையப் பெறாத தலைவி, தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் வரைவுகடாயது.

*கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்*
*திங்களைப் பாம்புகொண் டற்று.     (திருக்.1146)*

கதிரவன் இயக்கத்தால் திங்கள் படிப்படியாய்க் குறைந்து ஒருநாள் மறையும். அதை அறியாத மக்கள் பலரும் பாம்பின்மேல் பழிபோட்டுப் பாம்பு விழுங்கும் எனப் பல நாள் உரைப்பர். அதுபோல யானும் தலைவரைக் கண்டது ஒருநாள். காதல் காரணமாக படுந்துயர் இயற்கை என்றறியாத இவ்வூர் பலநாளும் என் மெலிவு குறித்து அலர் தூற்றும் எனத் தலைவி வரைவு அறிவுறுத்துவாள் என்பது எடுத்துக்காட்டப்படுகிறது.

**காதலனின் ஊக்கம்**

அலருக்கு அஞ்சி வாடும் காதலியைத் தேற்றி திருமணம் செய்து கொள்வதாகச் சொல்லி ஊக்கப்படுத்துகிறான் காதலன்.

*"நானா விரும்பலையே கைக்கரும்பு திங்கலையே*
*தானா விரும்பினையே தலைகவுர வச்சிட்டையே"*

என்று காதலனிடம் முறையிட்டு,

*"ஊரார் முடிச்சகதை உன்முடிவைத் தேடுதடா"*

எனவே மீண்டும் வரவேண்டாம் என்று வெறுத்து பேசிய காதலியிடம்,

*"பேசினாலும் பேசட்டுமே*
*பெரிய இடத்தில் சொல்லட்டுமே*
*என் மனமும் உன் மனமும்*
*ஒன்றுபட்டுத் தானிருந்தால்*
*ஊர்வரெல்லாம் கூடிநம்மை*
*ஒன்றுஞ் செய்யப் போவதில்லை"* [4]

என்று காதலன் தேறுதல் மொழி கூறுவதாக நாட்டுப்புறப்பாடல் அமைந்திருக்கிறது.

இவ்வாறாக அலர் தோன்றுவதால் தலைவன் வரைவுக்கு விரைவான் என்று குறிப்பால் புலப்படுத்துகிறாள் காதலியென்பது புலனாகிறது. நாட்டுப்புறப் பாடலில் தோழியின் பங்கு கிடையாது. நேரிடையாக காதலனும், காதலியும் பேசிக் கொள்வதாக பாடல்கள் அமைந்துள்ளன.

**தலைவியின் ஆற்றாமை**

தலைவனைப் பிரிந்ததால் தலைவி மீளாத் துயரத்தில் ஆழ்ந்தாள். அதன் மூலம் அவளின் ஆற்றாமை வெளிப்படுகிறது.

## ஒளி அருளல்

குறியிடத்தில் வந்து தலைவியைக் கூடி நீங்கும் தலைவனைத் தோழி கண்டு தலைவியை மணந்து கொள்ளும் படி வேண்டுவதாக,

*"நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப*
*அலவன் தாக்கத் துறை இறாப்பிறழும்*
*இன்னொலித் தொண்டி அற்றே*
*நின்னலது இல்லா இவள் சிறுநுதலே"* *(ஐங்.179)*

என்ற பாடல் அமைகிறது. அதாவது, மிக்க நீரையுடைய துறையை உடையவனே, உன்னை இன்றியமையாத இவளது சிறிய நெற்றி, கரையில் வாழும் நண்டு தாக்குவதால் துறையில் வாழும் இறாமீன் புரளும். இனிய ஒலியையுடைய தொண்டி நகர் போன்றதாதலால் நீ அதன் ஒளி கெடாதிருக்க அருள்வாயாக என்று தோழி தலைவனிடம் பாடல் மூலம் எடுத்துரைப்பதன் வழி அறியமுடிகிறது.

## பிரிந்து செல்லல்

பிரிந்து செல்லும் தலைவனை நோக்கித் தலைவியின் ஆற்றாமை குறித்துத் தோழி கூறும் பாடலாவது,

*"பொரிபுற ஓமைப் புகர்படு நீழல்*
*வரிநுதல் யானை பிடியோடு உறங்கும்*
*எரிமயங்கு கானம் செலவுரைப்ப நில்லா*
*அரிமயங்கு உண்கண்ணுள் நீர்"* *(ஐந்.எழு.37)*

என்பதாகும். இதில் தலைவனே! பொரிபோல் காணப்படும் பட்டைகளை உடைய ஓமை மரத்தின் நிழலில் ஆண் யானை தன் பெண் யானையோடு உறங்கக் காட்டுத் தீ கலந்து எரியுமிடத்து பொருள் காரணமாகப் பிரிந்து செல்வதைத் தலைவியிடம் தெரிவித்தால் அவள் மையுண்ட கண்களில் நீர்

சொரியும் என்றனள். இவ்வாறு தலைவன் பிரிந்து செல்வதைத் தோழி தடுத்து உரைப்பதாக இப்பாடல் உள்ளது.

**தலைவன் ஆற்றாமை**

தலைமகன் 'ஒருவழித் தணப்பல்' என்று கூறிய அதனை அவன் சிறைப்புறத் தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லுதல்.

**ஒருவழித்தணத்தல்**

தலைவன் தலைவியின் தொடர்பு காரணமாக ஏற்பட்ட அலர் அடங்கச் சிறிது காலம் பிரிந்திருத்தல் ஒருவழித்தணத்தலாகும்.

*"சாரல் பலவின் கொழுந்துணர் நறும்பழம்*
*இருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பில்*
*பெருந்தேன் இறாஅல் சிதறும் நாடன்*
*பேரமர் மழைக்கண் கலிழத்தன்*
*சீருடை நன்னாட்டுச் செல்லும் அன்னாய்"* *(ஐங்.214)*

என்ற பாடல், அன்னையே மலைச் சாரலிலுள்ள பலாமரத்தின் கொழுவிய கொத்துக்களிடையே பழுத்த நல்ல பழம் பெரிய பிளப்பிலுள்ள பொந்தில் விழுந்ததாகப் பாறையில் கட்டப்பட்ட தேனடை அழிந்து தேன் சிந்தும் நாடன், பெரியவனாய் மதர்த்துக் குளிர்ந்த நின் கண்கள் நீர் சிந்தத் தன் சிறந்த நாட்டுக்குச் செல்பவன் ஆனான் என்று தலைவிக்குத் தோழியுரைத்தாள். தன்னால் பெற்ற நலம் தலைமகளின் மேனிநலத்தைச் சிதைக்கும் என்று சிறிது காலம் தலைவியைப் பிரிந்திருத்தல் மூலம் தலைவனின் ஆற்றாமை வெளிப்படுகிறது.

இதே கருத்தை அடியொற்றியே திணைமாலை நூற்றைம்பது பாடல் அமைந்துள்ளது. தலைவன் தன் ஆற்றாமையைத் தோழியை நோக்கிக் கூறுவதாக,

*“நறுந்தண் தகரம் வகுளம் இவற்றை*
*வெறும் புதல்போல் வேண்டாதுவேண்டி-எறிந்துழுது*
*செந்தினை வித்துவார் தங்கைபிறர் நோய்க்கு*
*நொந்தினைய வல்லளோ நோக்கு” (தி.மா.நூ.24)*

பாடல் அமைந்திருக்கிறது. தோழி குளிர்ச்சியான தகர மரமும் வகுள மரமும் புதர்கள் என வெட்டி எறிந்து உழுது செந்தினை விதைக்கின்ற குறவர்களின் தந்தையாகிய எம் தலைவி நான் படும் துன்பத்தைக் கண்டு இரங்குவளோ என்று தலைவன் தோழியை நோக்கிக் கேட்பதாக உள்ளது.

**தாய் அச்சம்**

சிறைப்புறமாகத் தலைவன் கேட்கத் தோழி சொல்லும் சீத்தலைச் சாத்தனார் பாடலாவது,

*“தோலாக் காதலர் துறந்துநம் அருளார்*
*அலர்வது அன்றுகொல் இதுவென்று நன்றும்*
*புலரா நெஞ்சமொடு புதுவ கூறி*
*இருவேம் நீந்தும் பருவரல் வெள்ளம்*
*அறிந்தனள் போலும் அன்னை சிறந்த*
*சீர்கெழு வியன்நகர் வருவனள் முயங்கி*
*நீரலைக் கலைஇய ஈரிதழ்த் தொடையல்*
*ஒண்ணுதல் பெதும்பை நல்நலம் பெறீஇ*
*மின்நேர் ஓதி இவளோடும் நாளைப்*
*பன்மலர் கஞலிய வெறிகமழ் வேலித்*
*தெண்ணீர் மணிச்சுனை ஆடின்*
*என்னோ மகளிர்தம் பண்பென் றோளே” (நற்.339)*

தோழி அன்னையானவள் சிறந்த அழகு விளங்கிய அகன்ற நமது மாளிகையின் கண்ணே இன்று வந்தனன். அங்கு வந்தவன் அன்போடு தழுவி மகிழ்ந்து நின்தோழி சூடிய மாலை கலைந்து தோற்றபொலிவும் வேறுபட்டிருப்பதன் காரணந்தான் யாதென என்னை வினவ நானும்

என்னோடு இவள் இன்று சுனை ஆடியதால் இவ்வேறுபாடு உண்டாயிற்று என்று கூறினேன். அவற்றை வேறாகக் கொண்டு சுனையாடும் பொழுது நீர்மோதி அலைத்தலானே கலைந்து போகிய குளிர்ச்சியுற்ற மலர் மாலையையும் ஒள்ளிய நெற்றியும் உடைய பெதும்பைப் பருவத்தின் நல்ல நலனைப் பெற்று கூந்தலையுடைய மின்னலைப் போன்ற இவளுடனே நாளைப் பொழுதிலே பலவாகிய மலர் விளங்கிய மணங்கமழ்கின்ற மருத வைப்புப் போன்ற தெளிந்த நீரையுடைய அழகிய சுனையிடத்து ஆடினால் மகளிர் மேனியின் நிறம் இன்னும் எப்படியோமோவென்று கூறினாள். ஆதலால், பகைப் புலத்து வென்றி பெறுவதொன்றே அன்றித் தோல்வியுறாத நம் காதலர் நம்மைக் கைவிட்டு இனி அருள் செய்பவரல்லர். அவருடன் நிகழ்ந்த இக்களவு ஒழுக்கமானது புறத்தார்க்குப் புலனாகி அலர்தூற்றும் தன்மையை எய்தும் அன்றோ என்று பெரிதும் வாட்டமுற்று நம்முள்ளத்துடனே புதியனவாய சிலவற்றைக் கூறி நாம் இருவரும் துன்ப வெள்ளத்தில் நீந்துகின்றதனை அன்னையறிந்து அச்சம் கொண்டாள் போலும் என்று தலைவியிடம் புனைந்துரைத்தாள்.

## அன்னையின் சினம்

களவினால் ஊரிலே எழும் அலர் குலப்பழியைத் தரும் எனத் தாய் நினைக்கிறாள். எனவே தன் மகளைச் சினத்துடன் பார்க்கிறாள். தாயின் இத்தகைய சினத்தையும் அதனால் ஏற்படும் விளைவாகிய இற்செறிப்பையும் உணர்த்த தோழி அதனைத் தலைவனுக்கு உணர்த்த விரும்புகிறாள்.

“அலர் கேட்டுப் பலரும் நிற்க, அன்னையோ குறிப்பால் தலைவியையே சினந்து பார்க்கிறாள். இது கொடிய துன்பம், நாளை இற்செறிப்பும் ஏற்பட்டால் அவனால் தலைவியை அடைய முடியாது. குறியிடம் வரும் தலைவன் தலைவியைக் காணவியலாது. வறிதே செல்வனாயின்

அஃது இற்செறித்தலைக் காட்டிலும் அரிய துன்பமாகி விடும்''[5] எனப் புலம்புகிறாள் தோழி.

**தலைவன் வரும் வழி**

தலைவன் தலைவியைச் சந்திக்க வரும்போது ஆற்றின் துன்பம், கொடிய விலங்குகள் ஆகியவற்றைக் கடந்து வரும்பொழுது தலைவி வருத்தமடைவதாக உள்ளது, இரவுக்குறியில் வரும் தலைவனுக்குத் தோழி அவனது வரும் வழியின் அருமையைச் சொல்லி மறுக்கும் பாடல்,

***"கொடிச்சி காக்கும் பெருங்குர லேனல்***
***அடுக்கல் மஞ்ஞை கவரும் நாட***
***நடு நாட்கங்குலும் வருதி***
***கடுமா தாக்கின் அறியேன் யானே"*** ***(ஐங்.296)***

தோழி தலைவனை நோக்கி தலைவி காக்கும் பெரிய கதிர்களையுடைய தினையை மலைப்பக்கத்தே வாழும் மயில்கள் கவரும் நாடனே, இரவில் நடுவாகிய நள்ளிரவில் வருகின்றயாதலால் வரும் வழியில் அச்சம் பொருந்திய விலங்குகள் உன்னைத் தாக்கின், ஏது நிகழுமோ அறியேன் என்று தோழி உரைப்பதாக உள்ளது. இதே கருத்தை வலியுறுத்தி,

***"அறிகுஅரிது யார்க்கும் அரவ நீர்ச்சேர்ப்ப***
***நெறிதிரிவார் இன்மையால் இல்லை"*** ***(தி.மா.நூ.61)***

என்ற பாடல் வழி அறியமுடிகிறது. தளிர்கள் சுருண்ட நீர் முள்ளிச்செடிகள் அழகிய தில்லை மரங்களால் சூழப்பெற்று நெருக்கமான தாழை மரங்களோடு சேர்ந்துள்ளதால் எவர்க்கும் வழியைத் தெரிந்து கொள்ளுதல் அரிதாகும் என்று தோழி வழியின் அருமையை தலைவனுக்கு உணர்த்தினாள் என்ற குறிப்பால் சுட்டிக்காட்டுகிறாள்.

## இற்செறிப்பு

தலைவனோடு கூடும் தலைவியைத் தடுத்து அலர் உண்டாகாதவாறு காக்கும் வகையில் தலைவியை வீட்டிற்குள்ளே இருக்கச் செய்தல் இற்செறித்தல் எனப்படும்.

தலைவியின் காவல் அருமையை உணர்த்தி அவளைத் தலைவன் மணந்து கொள்ள வேண்டும் என்று தோழி வற்புறுத்தினாள்.

*“கனிமுதிர் அடுக்கத்துஎம் தனிமை காண்டலின்*
*எண்மை செய்தனை ஆகுவை நண்ணிக்*
*கொடியோர் குறுகும் நெடிஇருங் குன்றத்து*
*இட்டு ஆறு இரங்கும் விட்டுஒளிர் அருவி*
*அருவரை இழிதரும் வெருவரு படாஅர்க்*
*கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்*
*பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்*
*நனிநோய் ஏய்க்கும் பனிகூர் அடுக்கத்து*
*மகளிர் மாங்காட்டு அற்றே துகள்அறக்*
*கொந்தோடு உதிர்த்த கதுப்பின்*
*அம்தீம் கிளவித் தந்தை காப்பே”* *(அகம்.288:7-17)*

குரங்கு இயல்பான பலாப்பழத்தின் சுளையைத் தோண்டினாலும் ஆங்குள்ள தெய்வம் அதனைத் தண்டிக்கும் என குறிப்பால் உணர்த்தி, ஆரம் பூசிய மார்பை உடையவனாயும், மலர் மாலையை உடையவனாயும் வரும் தலைவனே, தலைவிக்கு அவர் தந்தை ஏற்படுத்தியுள்ள காவல் கன்னியர் உறையும் மாங்காடு என்னும் ஊர்க்காவலைப் போன்றது. ஆதலால் தலைவி வாராள் நீ சென்று வருக என்று தோழி தலைவனிடம் இற்செறிப்பு நிகழ்கின்றதென எடுத்துரைத்தாள் என்பது தெள்ளத் தெளிதின் புலனாகிறது.

**தாய் இற்செறித்தல்**

தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவியின் இற்செறிப்புக் கூறி வரைவினை வேண்டுகிறாள் என்பதை,

*"கொண்கன் பிரிந்த குளிர்ப்பூம் பொழில்நோக்கி*
*உண்கண் சிவப்ப அழுதேன் ஒளிமுகம்*
*கண்டு அன்னை எவ்வம் யாதென்னக் கடல்வந்தென்*
*வண்டல் சிதைத்து என்றேன்"* *(ஐந்.ஐம்.44)*

என்ற பாடல் கூறுகிறது. இப்பாடல் வழி தோழி தலைவியை எண்ணி அவள் இற்செறிப்புக்கு ஆளாகியதை எண்ணிக் கலங்கினாள். அதனைக் கண்ட தாய் அவளுக்கு உற்ற துன்பத்தை வினவ அவளும் கடற்கரையில் மணல் விளையாட்டின் போது கடல் அலை மோதி சிற்றிலை அழித்து விட்டது என்றாள். இத்தன்மையில் தலைவியின் இற்செறிப்பினைத் தலைவன் அறியுமாறு உணர்த்தி விரைவில் மணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்துகின்றாள் தோழியென்பதை அறிய முடிகிறது.

**காவல் கடுமை**

காதலர்களின் உறவு காதலியின் பெற்றோர்களுக்குத் தெரிந்து விட்டது. அவளை வெளியில் விடாமல் காவல் காக்கிறார்கள். அவள் வெளியே சென்றாலும் யாராவது துணைக்குச் செல்கிறார்கள் என்பதை பாடல் மூலம் எடுத்துக் காட்டுகின்றனர். அப்பாடல்,

**பெண்**

*"லேஞ்சி வர்ணப் பூஞ்சிவப்பு*
*நிழல்ல வந்து நிக்கி*
*வீட்டுக் கொடுமையாலே*
*வெளியேற நேரமில்ல*
*காட்டானைக் கட்டி யிருக்க*

*கரடி புலி தானியிருக்க*
*ஏழண்ணமார் இருக்க*
*எப்ப வந்த மன்னவனே ?"*

**ஆண்**

*"காட்டானைக் கண்ணைக் கட்டி*
*கரடி புலி வாயக் கட்டி*
*ஏழண்ண மார் கண்ணயர*
*ஏறி வந்தேன் கற்கோட்டை*
*கருதோ ஒரு கருது*
*காவலோ பத்து இலட்சம்*
*இந்த விதம் காவலில*
*எந்த விதம் நான் வருவேன்*
*ஆடி யிருட் டுக்குள்*
*அமாவாசைக் கம்மலில*
*தேடி வருமுன்னே*
*தெரு வெல்லாம் காவலில்லா"*

**பெண்**

*"தரும பட்டர ஓரத்துல*
*சதிராடும் பொன்னுச்சாமி*
*வீட்டுக் கொடுமையாலே*
*வெளியே வர நீதியில்ல"* [6]

என்பதாக உள்ளது.

## வெறியாட்டு

தலைவியின் வேறுபாடு கண்டு தாய் முருகனை வேண்டி எடுக்கும் விழா வெறியாட்டு எனப் பெயர் பெறும். அகநானூற்றுப் பாடலொன்றில் தலைவன் சிறைப்புறத்திருக்கத் தலைவி தோழிக்குக் கூறும் முகமாய் தாயின் வெறியாட்டு எடுக்கும் செயல் கூறப்படுகின்றது.

*"குவளை உண்கண் தெண்பனி மல்க*
*வறிதுயான் வருந்திய செல்லற்கு அன்னை*
*பிறிதுஒன்று கடுத்தனள் ஆகி வேம்பின்*
*வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி*
*உடலுநர்க் கடந்த கடல்அம் தானை*
*திருந்துஇலை நெடுவேற் தென்னவன் பொதியில்*
*அருஞ்சுமை இழிதரும் ஆர்த்துவரல் அருவியின்*
*ததும்புசீர் இன்இயம் கறங்க கைதொழுது*
*உருகெழு சிறப்பின் முறுகுமனைத் தரீஇக்*
*கடம்பும் களிறும் பாடி நுடங்குடி*
*தோடும் தொடலையும் கைக்கொண்டு அல்கலும்*
*ஆடினர் ஆதல் நன்றோ"* *(அகம்.138:2-13)*

தோழி தலைவன் இரவுக்குறியில் வரும் வழியின் இடர்ப்பாட்டை எண்ணினேன். கண்ணீர் அரும்பியது. அதை தாய் தெய்வத்தால் உண்டானதென எண்ணினாள், வேலனையும் கட்டுவிச்சியையும் வரவழைத்தாள். வேலனை இல்லத்தில் வருவித்து ஆடினர். இது நன்றோ எனத் தலைவி தன் தலைவன் கேட்கத் தோழியிடம் வினவுவதாக இப்பாடல் உள்ளது.

அகநானூற்றுப் பாடலொன்றில் 'தலைவியின் உடல் வேறுபாடு கண்ட அன்னை நீபெரிதும் அழகுடையை என்று பன்முறை கூறி அவளைத் தழுவி நெடிது நினைந்து இற்செறித்தாள்' என்ற செய்தி காணப்படுகிறது.

*"பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென*
*ஆகத்து அரும்பிய சுணங்கும் வம்புவிடக்*
*கண்உருத்து எழுதரு முலையும் நோக்கி*
*எல்லினை பெரிதுஎனப் பல்மாண் கூறி*
*பெருந்தோள் அடைய முயங்கி நீடுநினைந்து*
*அருங்கடிப்படுத்தனள் யாயே"* *(அகம்.150:1-6)*

என்ற பாடல் வழி தாய் மகளை இற்செறித்தாள் என்பது புலனாகிறது.

வெறிவிலக்கு அளிக்கும்படி தலைவி தன் தாயிடம் கூறுவதாக நம்மாழ்வார் திருவிருத்தத்தில் ஒரு பாடல் காணப்படுகிறது.

*"சில்மொழி நோயோ கழிபெருந்தெய்வம் இந்நோய் இனது என்று*
*இல்மொழி கேட்கும் இளந்தெய்வம் அன்றுஇது வேல்நில்நீ*
*என்மொழி கேண்மின் என் அம்மனைமீர் உலகு ஏழும் உண்டான்*
*சொல்மொழி மாலைஅம் தண்ணம்துழாய் கொண்டு சூட்டுமினே"*

(நம்.திரு.2497)

சிலமொழிகளைப் பேசும் இவள் நோய் மிகப்பெரிய எம்பெருமானைப் பற்றியது. பொருள் அற்ற புகழுரைகளைக் கேட்டு மகிழும் சிறுதெய்வம் பற்றி வந்தது அன்று வெறியாடும் வேலனே, நீ விலகி நில் என் தாய்மார்களே என் சொல்லைக் கேளுங்கள். பிரளயத்தில் ஏழுலகங்களை உண்ட பெருமானைக் கேளுங்கள். திருநாமத்தை இவள் காது கேட்கச் சொல்லுங்கள். அவள் திருத்துழாய் மாலையை இவளுக்குச் சூட்டுங்கள் என்று தலைவி கூறுகிறாளென்பது இப்பாடல் வழி புலப்படுகிறது.

களவு நீடிப்பதால் ஊரில் அலர் எழுகிறது. ஊரலர் பரவ அதுவரை தன் மகள் மீது இல்லாத ஐயம் பெற்றோர்க்கு எழுகிறது. அந்த ஐயம் இற்செறிப்புக்குக் காரணமாகிறது.

*"சாயக் கொண்டை கட்டுறதும்*
*சலிக்க எண்ணெய் பூசுறதும்*
*தாவித் தாவி நடக்குறதும்*
*களந்தாலிக்கு வாழ்வென்னோ"* [7]

என்று காதலுக்காக காதலி செய்து கொள்கின்ற ஒப்பனைகள் தாய்க்கு மகளைப் பற்றிய அச்சத்தை மிகுதியாக்குகிறது.

எனவே மகளை வீட்டிலேயே இருக்கக் கட்டளையிடுகிறாள். அப்படி மீறிச் சென்றால்,

*"கடப்பை கடந்து காலெடுத்து*
*வைத்தால் இடுப்பை ஒடித்து வேலி*
*இலுப்பையின் கீழ்ப் போட்டிடுவேன்"*[8]

என்றும் தாய் கண்டிக்கிறாள் என்ற நாட்டுப்புற பாடல்களும் ஈண்டு நினைக்கத்தக்கது.

**வழியின் ஏதம்**

தலைவன் வரும் வழி கொடியதாகும். சில நேரங்களில் தலைவன் வரும் நெறிகள் சிறுநெறிகளாகவே காட்டப்படுகிறது.

*"மான் அதர்ச் சிறுநெறி வருதல்"* *(அகம்.168:14)*
*"அஞ்சுவரு சிறுநெறி"* *(நற்.353:10)*
*"இயங்குநர் மடிந்த வயந்திகழ் சிறுநெறி"* *(நற்.257:8)*
*"காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி"* *(நற்.55:2)*
*"வரைசேர் சிறுநெறி வாரா தீமே"* *(நற். 335:11)*
*"எறுவை நறும்பூ நீடிய*
*பெருவரைச் சிறுநெறி வருத லானே"* *(நற்.261:9-10)*
*"வழக்கரு நெறி"* *(அகம்.88:15)*

என்ற பாடலடிகள் மூலம் தலைவன் வரும் வழி கொடிய விலங்குகளான யானை, புலி, கரடி தாக்கும் என்பதைத் தலைவி சுட்டிக்காட்டுகின்றாள்.

**தலைவனின் பண்பு**

இரவுக்குறி வந்த தலைவன் சிறைப்புறமாக இருப்பத் தோழி இயற்பழித்த விடத்துத் தலைவி அவரது நட்பு எண்ணம் அழியாதது என்று தலைவனின் பண்பைச் சுட்டிக்காட்டுகின்றாள்.

*"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை*
*நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு*
*பூக்கமழ் பொதும்பிற் சேக்குந் துறைவனொ*
*டியாத்தேம் யாத்தன்று நட்பே*
*அவிழ்த்தற் கரிதது முடிந்தமைந் தன்றே"* ***(குறுந்.313)***

தலைவன் வரையாது வந்தொழுகுவது குறித்துத் தோழி அவர் நம் நிலையையறியும் பண்பிலர் என்று அவனது இயல்பை இழித்துக் கூறினாள். அதுகேட்ட தலைவி அவர் நமது நிலையை உணர்ந்தவரே அவரது நட்பு என்றும், கெடாத உறுதியினது என்று கூறி அவன் விரையில் வரைந்து கொள்வான் என்பதைப் புலப்படுத்துகின்றாள்.

தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவனைப் பழித்துத் தலைவியை நோக்கிக் கூறுவதாக,

***"கேழல் உழுத கரிபுனக் கொல்லையுள்***
***வாழை முதுகாய் கடுவன் புதைத்தயரும்***
***தாழருவி நாடன்தெளி கொடுத்தான் என்தோழி***
***நேர்வளை நெஞ்சு ஊன்றுகோல்"*** ***(ஐந்.எழு.11)***

என்ற பாடலில், பன்றிகள் கொம்புகளால் கிளறி வேடர்களால் நெருப்புக் கொண்டு எரிக்கப்பட்ட தினைப்புனத்தில் ஆண் குரங்குகள் முற்றிய வாழைக் காய்களை மண்ணில் புதைத்து வைத்துப் பின்னர்ப் புதைத்த இடத்தை வருந்தும் நிலையில் அருவிகள் தாழ்ந்து ஓடும். மலைநாட்டையுடைய தலைவன் என் தோழியாகிய தலைவியின் நெஞ்சில் நன்கு அம்பு போன்று பதியுமாறு உறுதிமொழிகளை அளித்தவன் என்று தலைவனைப் பழித்துத் தோழி தலைவியை நோக்கி உரைத்தாள்.

**தலைவனின் இயல்பை உரைத்தல்**

தலைவி தோழியிடம் தலைவனின் இயல்பை எடுத்துக் கூறுவதாக நம்மாழ்வார் பாடல்,

*"வண்ணம் சிவந்துள வான்நாடு அமரும் குளிர்விழிய*
*தண்மென் கமலத்தடம் போல் பொலிந்தன தாம்இவையோ*
*கண்ணன் திருமால் திருமுகம் தன்னோடும் காதல்*
*செய்தேற்கு*
*எண்ணம் புகுந்து அடியேனொடு இக்காலம் இருக்கின்றவே"*

**(நம்.திரு.2541)**

தலைவன் மிகவும் நல்லவன். தன்னை கைவிடமாட்டான் என்று தலைவி தலைவனின் இயல்பைக் கூறுகின்றாள். என் தலைவனின் கண்கள் சிவந்து அழகானவையாய்ப் பரமபதமும் மகிழ்ச்சி அடையும்படி பார்வை கொண்டதாய், குளிர்ந்த தாமரைக் குளம் போல் உள்ளன. கண்ணனாக அவதாரம் செய்த திருமாலின் திருமுகத்திலே நான் வேட்கை கொண்டேன். அம்முகம் என் நெஞ்சில் புகுந்து இடம் பெற்று, எப்பொழுதும் நீங்காமல் என்னுடனே உள்ளது என்று தெரிவிக்கிறாள்.

*"சான்றவர் கேண்மை சிதைவின்றாய் ஊன்றி*
*வலியாகிப் பின்னும் பயக்கும் மெலிவில்*
*கயம்திகழ் சோலை மலைநாடன் கேண்மை*
*நயம்திகழ் என்னும் என் நெஞ்சு"          (ஐந்.எழு.15)*

தோழி சான்றோர்களின் நட்பு கெடுதல் இல்லாது நிலைத்து நின்று வலிமையுடையதாக நல்ல பயனை விளைவிக்கும். அதுபோன்று நீர் நிலைகளையுடைய சோலைகள் சூழ்ந்த மலைநாட்டுத் தலைவனது நட்பும் அன்பான தன்மையுடன் விளங்கும் என்று தலைவி தோழியிடம் தலைவனின் இயல்பை எடுத்துரைக்கின்றாள்.

## காதலன் பண்புநலன்

காதலியின் கண்களுக்குக் காதலன் உலகத்திலேயே சிறந்தவனாகத் தோன்றுவான். உருவத்திலும் பண்பு நலன்களிலும் அவனே இணையற்றவன் என அவள் நினைப்பாள். காதலியர் தமது காதலர்களின் மேன்மையை வியந்து வருணிக்கும் பாடல்களாவன:

*"ஆளும் சிகப்பல்லோ*
*அவரு நிறம் தங்க மல்லோ*
*குணமே சரஸ்வதியோ உங்க*
*குண மிருந்தாப் போதுமையா"* [9]

*"ஏடு படிச்ச வரை*
*எழுத்தாணி தொட்ட வரை*
*பாரதம் படித்தவரை*
*பார்த்து வெகுநாளாச்சு"* [10]

*"வந்தா வழி மணக்கும்*
*வாசமெல்லாம் பூ மணக்கும்*
*கட்டி அணைஞ்ச கையி*
*எட்டுநாளும் பூமணக்கும்"* [11]

*"குறுக்குச் சிறுத்தவரே*
*கூத்தாடி மன்னவரே*
*நாக்குத் திருத்தத்துக்கு*
*நானுமில்ல ஆசை கொண்டேன்"* [12]

*"எண்ணைத் தலையழகா*
*எழுத்தாணி மூக்கழகா*
*கோயில் சிலையழகா*
*கொல்லுதடா உன்னாசை"* [13]

என்பவனாகும்.

**நொதுமலர் வரைவு**

தலைவன் வரவையறிந்து தோழி தலைவியை அயலார் வரைவுகேட்டு வருதல் நொதுமலர் வரைவு என்று பெயர் பெறும்.

நற்றிணைத் தோழியொருத்தி "தலைவனே எம்மை நீ விரும்பி ஒழுகவில்லையாதலால் உன்னால் இழைக்கப்பட்ட தலைவியின் நலனையாவது திரும்பக் கொடுத்துச் செல்" [14] என்று கூறுகிறாள்.

நொதுமலர் வரைவு பிறந்துழித் தலைமகட்கு வேறுபாடு கூறித் தலைமகளை வரைவுகடாவும் பாடல்,

***"சிறுகட் பன்றி பெருஞ்சின ஒருத்தலொடு***
***குறுங்கை இரும்புலி பொரூஉம் நாட***
***நனி நாணுடை மைமன்ற***
***பனிப்பயந்தன நீ நயந்தோள் கண்ணே"         (ஐங்.266)***

தலைவனே உன்னால் விரும்பப்பட்ட தலைவியின் கண்கள் மிக்க நாணுடையவை. ஆதலின் பசந்து நீர் சொரிவன ஆயின எனத் தோழி குறிப்பால் உணர்த்துகிறாள்.

காதலன் ஊரில் இருக்கும் பொழுதே, சொத்துள்ள ஒருவன் அவளைப் பெண் பேசி வரத் துணிந்துவிட்டான். இதை அவள் அவனிடம் கூறுகிறாள். அவன் மணம் பேச வர நேரமில்லை, வேலை அதிகம் என்று சொல்லுகிறான். அவனுக்கு உறுதியேற்படும்படி சூடு கொடுத்து விட்டுச் சந்திரனைப் பார்த்து 'நீ மறைந்து கொண்டு என் மச்சானுக்குக் களவு செய்யக் கற்றுக் கொடு' என்று சொல்லித் தனது காதலனைக் கேலி செய்வதாக உள்ள நாட்டுப்புறப்பாடல்,

காதலி: கஞ்சிக் கலயம் கொண்டு
காட்டுக்குப் போகையிலே
கையலைச்சுக் கூப்பிட்டது
காரணத்தைச் சொல்லு மச்சான்

காதலன்:பேரீச்சம் பழமே நீயே
பெரியடத்துக் கிரீடமே
அஞ்சாறு ஆளோட உன்ன
யாரை விட்டுக் கூப்பிடட்டும்?

காதலி: மணந்திடுவேன் என்று சொல்லி
மாதக் கணக்காயிருச்சு
கழுத்தில் தாலி கட்டலேனா– நான்
கயத்தப் போட்டுச் செத்திடுவேன்

காதலன்:இடுப்பே ஒரு பிடியே
இன்பமான ரதி கிளியே
மதியான கண்ணே– உன்ன
மறக்க மணம் கூடலியே

காதலி: மாமன் மகனிருக்க
மாலையிடும் சாமியிருக்க
சொத்துக் கையி சாமிபய
சொந்தமின்னு வாரானில்ல

காதலன்:காரமுள்ள கண்ணாம்பாம்
கலயத்தில நீத்தி வச்சேன்
நீதி மற்ற சிவகிரில
நிண்ணு போக நேரமில்லை

**காதலி: வெள்ளி நிலாவே நீயே**

**விடி நிலா ராஜாவே**

**கன்னி களவு செய்ய**

**கண் மறைஞ்சால் ஆகாதோ**

**காதலன்:செவ்வந்திப் பூப்போல உன்திரேகம்**

**வாழுத வயதிலேயே**

**வாடி பொண்ணே ஒடிப் போவோம்**

**இலுமிச்சங்கனி போல**

**இருவருமே ஒரு செகப்பு**

**வாழுத வயதிலேயே**

**வாடிப் பொண்ணே ஓடிப்போவோம்"** [15]

என்பதாகும். இவ்வாறாக அயலவர் மணம் பேசி வரும் போது காதலனிடம் எடுத்துக் கூறி தன்னை மணந்து கொள்ளும்படி வற்புறுத்துவாள்.

## தலைவியின் மெலிவு

தலைவன் சிறைப்புறத்தே நிற்ப, தலைவி தன் தோள் மெலிவைத் தோழிக்குக் கூறுவாளாய் வரைதல் வேண்டுமென்பதை அவனுக்குப் புலப்படுத்தினாள்.

*"இதுமற் றெவனோ தோழி முதுநீர்ப்*
*புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்*
*இணரவிழ் புன்னை யெக்கர் நீழற்*
*புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்*
*கண்டன மன்னெங் கண்ணே யவன்சொற்*
*கேட்டன மன்னெஞ் செவியே மற்றவன்*

*மணப்பின் மாணல மெய்தித்*
*தணப்பின் ஞெகிழ்பவெந் தடமென் தோளே"*

(குறுந். **299**)

தலைவன் இடையிட்டு வருவதால் நான் வருந்துகிறேன். தலைவனைக் கண்ட கண்ணும் கேட்ட செவியும் வாளாவிருப்பத் தோள்கள் மட்டும் தம் மெலிவைப் பிறர் அறியும்படி நெகிழ்ந்தன என்றாள். இடையீட்டு வந்து அளவளாவும் களவொழுக்கத்தில் தான் பிரிந்திருக்குங் காலத்தில் ஆற்றாமை மிகுவென்பதும், இடையீன்றி அளவளாவும் கற்பொழுக்கத்திற்கு வரைவே இனி மேற்கொள்ளுதற்கு உரியதென்பதும், இதனால் தலைவிக்குக் குறிப்பால் தலைவி சுட்டுகின்றாள்.

இரவும் பகலும் தலைவிக்குத் துன்பம் தருவது போல் உள்ளது. அதனால் மேனியில் மெலிவு ஏற்படுகிறது.

*"இருளின் திணிவண்ணம் மாநீர்க் கழியேபோய்*
*மருளுற்று இராப்பகல் துஞ்சிலும் நீதுஞ்சாயால்*
*உருளும் சகடம் உதைத்த பெருமானார்*
*அருளின் பெரு நசையால் ஆழாந்து நொந்தாயே"*

**(நம்.திரு.3016)**

இருள் செறிந்ததுபோல் உள்ள நீர்க்கழியே, இரவும் பகலும் ஆள காலம் முடிந்தாலும் நீ அறிவுமயங்கி உறங்காமல் இருக்கிறாயே, உருளும் சகடத்தை உதைத்து அதில் மறைந்த அசுரனை அழித்த கண்ணபிரானை எண்ணி, அவன் அருளுக்கு ஆசைப்பட்டதால் அறிவு இழந்து நோவுப் படுவதைத் தலைவி நினைந்து வருத்தமடைகிறாள்.

**தீர்வு**

சங்க இலக்கியம் தொடங்கி இக்காலம் வரை தலைவன் தலைவியைச் சந்திக்க வரும்போது என்னென்ன இடர்ப்பாடுகள்,

இடையீடுகள் வருகின்றன என்பதை இவ்வியலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இதற்கு ஒரே தீர்வு தலைவன் தலைவியை மணந்து கொள்ள வேண்டுமென்பதே சங்க காலம் முதல் இக்காலம் வரை ஒரே கருத்தையே வலியுறுத்துகின்றன. அதுவே அறமாகும்.

தலைவன் தலைவியை மணந்து கொள்வதுதான் மிகச் சரியான வழியாகும் என்பதை நிறுவுகின்றன.

## தொகுப்புரை

இவ்வியலில் தோழி தலைவனை வரைவுகடாவும் போது இயற்கைச் சிக்கல்களாகிய காட்டாறு, துன்பம் தரும் கொடிய வழி, விலங்குகள், அணங்கு போன்றவற்றாலும், காவலர் கடுகுதல், நாய் துஞ்சாமை, தாய் துஞ்சாமை என அவள் காட்டும் களவின் இடையீடுகள் மூலமாகவும் தலைவன் தலைவியரின் அன்பு மிகுதியும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

அன்புதான் உயிர்களை அறவாழ்க்கைக்கு எடுத்துச் செல்வதாக அமைந்துள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளது.

வள்ளுவர் “அறத்திற்கே அன்புசார்” என்பார். எனவே வாழ்க்கையில் ஏற்படும் இத்தகைய இடையீடுகளைக் கண்டு அஞ்சாமல், எதிர் சென்று இறுதியில் அறத்தின் துணையுடன் அன்பு வாழ்வினை அமைத்துக் கொள்ள இயலும் என்பதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

சங்க இலத்தியத்தின் அடிநீரோட்டமாய் அமைந்த அறத்தை வலியுறுத்தவே எழுந்தது இவ்வரைவுகடாதல் துறையாகும் என்ற முடிவும், இவை ஒழுக்க அடிப்படையில் அமைந்த அக இன்பத்தை வலியுறுத்தும் துறை என்ற முடிவும் இவ்வாய்வினால் கிடைத்த முடிவாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

# அடிக்குறிப்புகள்

1. மாணிக்கம், வ.சுப. தமிழ்க்காதல், ப.111.
2. குறிஞ்சிப்பாட்டு, ப.232.
3. தொல்.பொருள்.களவு.இளம்.உரை, ப.155.
4. இளங்கோ நா., நாட்டுப்புறக் காதல் பாடல்களும் அகப்பொருள் மரபுகளும், ப.59.
5. நற்.191.
6. வானமாமலை நா., தமிழர் நாட்டுப் பாடல்கள், பக்.180–181.
7. இளங்கோ நா., நாட்டுப்புறக் காதல் பாடல்களும் அகப்பொருள் மரபுகளும், ப.59.
8. மேலது, ப.59.
9. வானமாமலை நா., தமிழர் நாட்டுப் பாடல்கள், ப.172.1
10. மேலது, ப.173.
11. மேலது, ப.174.
12. மேலது, ப.175.
13. மேலது, ப.177.
14. நற்.395.
15. வானமாமலை நா., தமிழர் நாட்டுப் பாடல்கள், பக்.190–191.

# நிறைவுரை

மக்களின் நாகரிகம், பண்பாடு வளர்ச்சிக்கேற்ப அவர்களின் இலக்கியக் கொள்கைகளும் வேறுபடுகின்றன. எனினும் அனைத்து மொழி இலக்கியங்களின் அடிப்படையிலும் ஓர் ஒருமைப்பாடு இருப்பதைக் காண முடிகிறது. அந்த ஒருமைப்பாடுதான் அறம். இவ்வற அடிப்படைதான் சங்க இலக்கியங்களின் உயிர்நாடியாக விளங்குகிறது.

மக்களுக்குச் சிறப்பிடம் கொடுத்து தலைவன் தலைவியரைப் படைத்து அறிவு, ஆற்றல், பண்பு, அழகு அனைத்திலும் சிறந்தவர்களாகப் படைத்துள்ளனர். இவ்வாறு படைக்கப்பட்ட இலக்கியங்களைப் படிப்பதன் மூலம் புதிய அகன்ற வாழ்வியல் அனுபவங்கள் கிடைக்கின்றன. எனவே அற அடிப்படை கொண்ட சங்க இலக்கியங்கள், உயர்ந்த இயல்புடைய அகப் பாத்திரங்களைக் கொண்டு படைக்கப்பட்டிருப்பதன் நோக்கம் உலகில் அறத்தை வலியுறுத்தவேயாகும். இக்கருத்து வரைவுகடாதல் துறை அமைப்பதன் மூலம் உறுதியடைகிறது.

பிறப்பொக்கும் எல்லா உயிர்களுக்கும் இன்பம் என்பது பொதுவானது. அவ்வக இன்பம் ஒழுக்கத்தின் அடிப்படையில் அமைய வேண்டும் என்பது சங்கச் சான்றோர் பெருமக்களின் கருத்தாக விளங்குகிறது. இக்கருத்தை வலியுறுத்திப் படைக்கப்பட்ட துறையே வரைவுகடாதல் துறை ஆகும்.

சமுதாயத்தில் காணப்படும் இத்தகைய ‘அறம் சார்ந்த ஒழுக்கத்தை’ வலியுறுத்தப் படைக்கப்பட்ட இன்றியமையாத அகப்பாத்திரம் தோழியாவாள். களவு என்னும் செயல், கற்பு என்னும் அறத்தில் முடிவதற்காக அவள் தலைவனிடம் மேற்கொள்ளும் செயல்முறைகளே வரைவுகடாதல்.

பல்வேறு காரணங்களைக் கொண்டு வரைவுகடாதல் என்னும் உத்தியைப் பயன்படுத்தி, சமுதாய அறத்திலிருந்து வெளியே சென்றுவிடாமல் தலைவனை நல்வழிப்படுத்துகிறாள் தோழி. அதுபோன்றே அவள் பல சூழல்களை அமைத்துத் தலைவியின் செயலோடு அவ்வறவழியில் நிற்கச் செய்கிறாள்.

வரைவுகடாதல் துறைப்பாடல்கள் குறிஞ்சி, முல்லை, நெய்தல் என்னும் மூன்று திணைகளிலும், சில பாடல்கள் மருதத் திணையிலும் காணப்படுகின்றன. வரைவுகடாதல் துறை என்ற துறைக் குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டே இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. வரைவுகடாதல் என்னும் துறை கற்பறத்திற்கு அழைத்துச் செல்லும் முதன்மை படிக்கட்டாக அமைகிறது. புணர்தல் என்னும் உரிப்பொருளைக் கொண்ட குறிஞ்சிக்கு உரியவையாகும். இவை புணர்வு வழிப்பட்ட இல்லறத்திற்கு அடிப்படையாக அமைந்துள்ளது. குறிப்பாக, குறிஞ்சி தவிர்த்த பிற திணைகளிலும் காணப்படுகின்ற தன்மையும் இலக்கண இலக்கியங்களில் இன்றுவரை அடைந்த வளர்ச்சியும் மாற்றம் அடைந்து மேலும் ஆராயத்தக்கவையாக உள்ளது.

களவு கற்பாகி 'நாடறி நன்மணமாக நடைபெற வேண்டும்' என்ற தலைவியின் விருப்பம் தோழியின் மூலமாகத் தலைவனுக்குத் தெரிவிக்கப்படுதல் வரைவுகடாதல் போல, தலைவியின் விருப்பம் தோழியின் மூலமாகத் தலைவியைச் சார்ந்தோருக்கு அறிவிக்கப்பட்டு, களவு கற்பில் முடியத் துணையாக அமைகிறது. தோழியின் முயற்சியால் அமையும் இச்செயல் சமுதாய ஏற்புடைய நாடறி நன்மணத்தை நோக்கியே அமைந்தவையாகும்.

திருமணம் என்பது சமுதாயத்தில் தவிர்க்க முடியாத ஒரு செயல். அதனை நயமும் பொருத்தமுடையதாகச் செய்தல் வேண்டும். இதனை

உணர்ந்த தோழியின் வரைவுகடாதல் செயல், தலைவினைச் சான்றோருடன் பெண் கொடை கேட்டுவரச் செய்யும். சமுதாயம் ஒப்புக்கொள்ளும் ஒழுக்க அடிப்படையைக் கொண்ட நாடறி நன்மணத்தை அமைத்துக் கொடுக்க இத்துறை இன்றியமையாதது.

அலர், இற்செறிப்பு, தாயின் சினம் இவை களவிற்குச் சமுதாயத்தில் வரவேற்பு இல்லை என்பதை எடுத்துக்காட்டுகின்றன. ஆனால் தலைவன் வரைவோடு வரும்பொழுது சமுதாயம் அவனைப் போற்றி வரவேற்கிறது. சமுதாயத்தின் இச்செயல் தலைவனுடைய ஒழுக்கத்தையும் ஆண்மையையும் பாராட்டும் செயலாக அமைகிறது. இங்கு அறம் தவறாத ஒழுக்கம் சமுதாயத்தின் வரவேற்பைப் பெறுகிறது.

களவின் முடிவான கற்பினைப் பற்றி ஆராய்ந்தபொழுது கற்பென்றால் தலைவியின் மனநிறை, மனத்திண்மை, தலைவன் மீது கொள்ளும் அன்பு, விருந்தோம்பல், தலைவனின் சில செயல்களைக் கடிந்து அவனைத் திருத்தி ஏற்றுக்கொண்டு, குடும்பக்கட்டுப்பாடு கலையாமல் காத்தல் என்றெல்லாம் கிடைத்த விளக்கங்களால் அச்சொல் சமுதாய அறத்தை வலியுறுத்தவே எழுந்தவை என அறிய முடிகிறது. இத்தகைய கற்பு வாழ்வு அமைவதையே சங்க காலத் தலைவியர் மட்டுமல்லாமல் இக்கால மக்களும் விரும்புகின்றனர்.

தோழி தலைவனை வரைவுகடாவும்பொழுது இயற்கைச் சிக்கல்கள், காட்டாறு, துன்பம் தரும் கொடிய வழிப்பாதை, விலங்குகள், சமுதாயச் சிக்கல்கள், காவலர் கடுகுதல், நாய் துஞ்சாமை, தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை என அவள் காட்டும் களவின் இடையீடுகள், தலைவன் தலைவியரின் அன்பை மிகுதிப்படுத்திக் காட்டுகிறது. களவின் இடையீடுகள், தலைவன் தலைவியரின் அன்பை மிகுதிப்படுத்திக் காட்டுகிறது. அன்புதான் உயிர்களை அற வாழ்க்கைக்கு அழைத்துச்

செல்லும். வள்ளுவர் 'அறத்திற்கே அன்பு சார்பு' என்பார். எனவே வாழ்க்கையில் ஏற்படும் இத்தகைய இடையீடுகளைக் கண்டு துவளாமல் எதிர் சென்றால் இறுதியில் அறத்தின் துணையுடன் அன்பு வாழ்வினை அமைத்துக் கொள்ள இயலும் என்பதை இவை எடுத்துக்காட்டுகின்றன.

அகப்பாத்திரங்களின் உளப்பாங்கினை அறியும் ஆய்வின் மூலம் அவர்கள் அனைவருமே அறச்சிந்தனை உடையவர்கள் என்பது தெரியவருகிறது. தலைவனின் அறஎண்ணம் தோழியின் வரைவுகடாதலை ஏற்றுக்கொண்டு அவனை வரைவோடு வரச்செய்கிறது.

வரைவுகடாதல் துறை புலவர்களின் பல்வேறு உத்திகளைக் கொண்டு சித்திரிக்கப்படுவதைக் காட்டுகிறது. கேட்பவர் உள்ளம் புண்படாதவாறு அறம் கூறும் அமைப்பினை உடையது. அனைத்து உத்திகளைக் கொண்டும் இத்துறையின் உரிப்பொருள் வலியுறுத்தப்படுவதைக் காணும்பொழுது புலவர்கள் அறக்கண்ணோட்டத்துடன் பாடல்களை அமைத்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. கேட்போர் அறத்தை உணருமாறு கூறிய பாத்திரங்களின் அன்புத் திறத்தைக் காட்டுகிறது.

இக்கருத்துக்களால் சங்க இலக்கியங்களின் அடிநீரோட்டமாய் அமைந்த அறத்தை வலியுறுத்த எழுந்தனவே வரைவுகடாதல் துறை என்ற முடிவும், இவை எக்காலத்துக்கும் ஒழுக்க அடிப்படையில் அமைந்த அக இன்பத்தை வலியுறுத்தும் துறை என்ற முடிவும் இவ்வாய்வினால் கிடைத்த முடிவுகள் ஆகும்.

# துணை நூற்பட்டியல்

## அ. முதன்மை சான்றாதாரங்கள்


1. **இராமசுப்பிரமணியம், வ.த.** – **நம்பியகப்பொருள்**
   சென்னை: முல்லை நிலையம்,
   மு.ப.2000, ம.ப.2012.

2. **இளம்பூரணர் (உ.ஆ)** – **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
   சென்னை: கழக வெளியீடு,
   1956.

3. **சாமிநாதையர், உ.வே.,** – **குறுந்தொகை மூலமும் உரையும்**
   சென்1னை :உ.வேசா. நூல் நிலையம்,
   2009.

4. **பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், அ.** – **நற்றினை நானூறு**
   சென்னை : கழக வெளியீடு,
   மு.ப.1952, மறு அச்சு.2007

5. **மாணிக்கனார், அ.** – **அகநானூறு மூலமும் உரையும்**
   சென்னை : வர்த்தமானன் பதிப்பகம்,
   1999.

6. **மாணிக்கனார், அ.** – **ஐங்குறுநூறு மூலமும் உரையும்**
   சென்னை : வர்த்தமனான் பதிப்பகம்,
   1999.

7. மாணிக்கனார், அ. – **கலித்தொகை மூலமும் உரையும்**
   சென்னை : வர்த்தமானன் பதிப்பகம்,
   1999.

